அருள்மிகு

# சுப்ரமணிய சுவாமி திருக்கோயில்

(சிவ விஷ்ணு ஆலயம்)

பிருந்தாவன் நகர், ஆதம்பாக்கம்,
சென்னை - 600 088.

# இராஜகோபுர மஹாகும்பாபிஷேகம் சிறப்பு மலர்

04-04-2004

## ஸ்ரீ மஹா கணபதி த்யான ஸ்லோகம்



விக்னேஸ்வராய வரதாய ஸுரப்பிரியாய
லம்போதராய ஸகலாய ஜகத்திதாய
நாகானனாய ஸ்ருதியக்ஞ விபூஷிதாய
கௌரீஸுதாய கணநாத நமோநமஸ்தே!

பக்தார்த்தி நாஸனபராய கணேஸ்வராய
ஸர்வேஸ்வராய ஸுபதாய ஸுரேஸ்வராய
வித்யாதராய விகடாய ஸவாகனாய
பக்தப்ரஸன்ன வரதாய நமோநமஸ்தே!

நமஸ்தே ப்ரம்மரூபாய விஷ்ணுரூபாயதே நம:
நமஸ்தே ருத்ரரூபாய கரிரூபாயதே நம:
விஸ்வ ரூபஸ்வரூபாய நமஸ்தே ப்ரம்மசாரிணே
பக்தப்ரியாயதேவாய நமஸ் துப்யம் விநாயகா!
லம்போதர நமஸ்துப்யம் ஸததம்மோதகப்ரியா
நிர்விக்நங்குருமேதேவ ஸர்வகார்யேஷு ஸர்வதா!
த்வாம்விக்னசத்ரு தளநேதி ஸநுந்தரேதி
பக்தப்ரியேதி ஸுகதேதி வரப்ரதேதி
வித்யா ப்ரதேத்ய ஸுகரேதீச யேஸ்துவத்நீ
தேப்யோகணேஸ வரதோ பவநித்யமேவ!

முழு முதற் கடவுளாகிய ஸ்ரீ மஹா கணபதியை பிரதி தினமும் பூஜா வேளையில் ஷெ ஸ்லோகங்களினால் பாராயணம் செய்து வந்தால் சகல காரியசித்தியும், சர்வவிருத்திகரமும் ஏற்படும்.

## ஸ்ரீ லக்ஷ்மீ தேவி தியான ஸ்லோகம்



யாஸா பத்மாஸநஸ்தாவி புலகடிதேட
பத்ம பத்ராய தாக்ஷீ
கம்பீராவர்த்த நாபிஸ்த நபர நமிதா
ஸுப்ர வஸ்த்ரோத்தரீயா
லக்ஷ்மீர்த்திவ்யைர்க்க ஜேந்த்ரைர்மணீ கனகசித்தை
ஸ்நாபிதா க்ஷேம கும்பை:
நித்யம்ஸா பத்ம ஹஸ்தா மம வஸ துக்ர ஹே
ஸர்வ மாங்கல்ய யுக்தா
ஏவம் த்யாத்வே பஞ்ச பூஜாங்குர்யேத்

ஷெ சுலோகத்தை ஒவ்வொருவரும் பிரதி தினமும் காலை பூஜாக்ரமங்களை முடிக்குமுன் மனதில் தியானம் செய்து பின்னர் ஸ்ரீ லக்ஷ்மீ தேவிக்கு தூபதீப நைவேத்தியம் காட்டி நமஸ்கரித்து வந்தால் சகல காரியங்களும் சித்தி பெற்று அஷ்ட ஐஸ்வரியங்களையும் அடைவீர்கள் என்பது திண்ணம்.

## ஸ்ரீ சரஸ்வதி தேவி ஸ்தோத்திரம்



"நீஹார ஹார கநஸார ஸுதாகராபாம்
கல்யாணதாம் கநக ஸம்பக தாமபூஷாம்
உத்துங்க பீரகுஸகும்ப மநோஹராம் கீம்
வாணீம் ஸததம் பசஸாம் விபூத்யை
லமித்யாதி பஞ்சபூஜாம் குர்யேத்"

ஷெ கலைமகள் ஸ்தோத்திரத்தை தினமும் காலை மாலை ஸ்தோத்தரித்து வருபவர்களுக்கு பஞ்சபூஜா பலன் சித்தியாகி கலை மகளின் அருள் ஏற்பட்டு சர்வ கலைகளிலும் தேர்ச்சி அடைவார்கள்.

# அருள்மிகு ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

**(சிவ சிஷ்ணு ஆலயம்)**

பிருந்தாவன் நகர், ஆதம்பாக்கம், சென்னை-600 088.

## இராஜ கோபுர மகா கும்பாபிஷேகம் 04-04-2004
## இத்திருக்கோயில் தோற்றம் & ஆலய வரலாறு

1969ம் ஆண்டு முதல் 4-4-2004ல் நடக்கும் இராஜகோபுர மகா கும்பாபிஷேகம் வரை தோன்றிய விதம் ஏற்பட்டுள்ள வளர்ச்சிகள், விழாக்கள், முதலானவைகளை ஆண்டு வாரியாக தொகுத்து வழங்கப்பட்டுள்ளது. (அன்பன் மு.முருகையன் நகராட்சி நிர்வாக இணை இயக்குனர் (ஓய்வு) பிளாட் நெ. 54, கதவு எண் 15, மோகனபுரி 3வது தெரு, பிருந்தாவன் நகர், ஆதம்பாக்கம், சென்னை-88 போன் : 22531297)

1. **1969ம் ஆண்டு முதல் :** ஆரம்பத்தில் குறைந்த வீடுகள் உள்ள ஆதம்பாக்கத்தில் டி.எஸ்.தண்டபாணி அய்யர், நாராயண அய்யர் அவர்களும் விஷ்ணு சகஸ்ர நாம பாராயணமும், பின் ஒ.ய. வெங்கட் ரமணி அவர்கள் நாம சங்கீர்த்தன பஜனையும் விரும்புவோர் இல்லங்களில்சென்று நடத்தி வந்தார்கள்.
2. **1970 மார்ச் மாதம் :** ஆதம்பாக்கம் காலனி விரிவடைந்து இறைவழிப்பாட்டிற்கு ஆலயம் அமைக்க வேளச்சேரி முதல் வார்டு மெம்பர் திரு. V. அர்ஜுன், திரு. S. வெங்கடாசாமி அவர்களின் சகோதரி திருமதி. சாரதாம்பாள், திரு. பாலசுப்பிரமணிய முதலியார், திரு. கோவிந்த சாமி அய்யர் மற்றும் பல பக்த கோடிகள் ஆன்றோர்கள், சான்றோர்கள் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது.
3. **21.2.1972ல் ஆலயம் அமைக்க பூமிதானம் மற்றும் அறங்காவலர்கள் :**

   டாக்டர் திரு. R. சீனிவாச அய்யர், R. சீனிவாச அய்யங்கார், நடேச அய்யர், பால சுப்ரமணிய முதலியார், திருமதி. சாரதாம்பாள், V. சுப்புலெட்சுமி அர்ஜுன், ஆகியோர்களை அறங்காவலர்களாக நியமித்து பதிவு செய்யப்பட்டது. ஆலயம் கட்ட தேவையான பூமியை உரிமையாளர்கள் மடுவின்கரை திருவாளர்கள் சக்ரபாணி நாயக்கர், கணபதி நாயக்கர், ஏழுமலை நாயக்கர் ஆகியோர் மனமுவந்து திருமுருகக்கடவுள் பெயருக்கு தானமாகப்பத்திரம் மூலம் சாசனம் செய்து கொடுத்துள்ளார்கள். ஆலயத்திற்கு இடம் கிடைத்தவுடன் ஆலயம் எழுப்ப வேண்டும் என்ற எண்ணத்திற்கு விதை ஊன்றிய பெருமை நண்பர் திரு. M. முருகையன் (நகராட்சி ஆணையர், 54, மோகனபுரி) அவர்களை சாரும் என்று 19.2.1998 விழா மலரில் அறங்காவலர் குழுவால் குறிப்பிடப்பட்டுள்ளது.
4. **1973ல் நிலம் கிடைத்தவுடன் :** K.V. வெங்கட் ரமணி, திரு. M. கோவிந்தசாமி முயற்சியால் தற்காலிக மண்டபம் அமைக்கப்பட்டு தனுர் மாத பஜனைகள் ஸ்ரீ ராதாகல்யாண உற்சவங்கள் உபந்யாசங்கள் நடைபெற்று வந்தன. ஸ்ரீ வெங்கட்ராமண கோவிந்த் பஜனை மண்டலியும் ஸ்ரீ லலிதா பரமேஸ்வரி ஸ்ரீமதிகள் ஆஸ்திக சங்கமும் நடத்தி தேவ ஸ்தானத்திற்கு நிதி உதவி அளித்து வந்தது.
5. **19.1.1975 ஸ்ரீவலம்புரி இராஜ வினாயகர் சன்னதி:**

   உள்ளூர் வெளியூர் ஆஸ்தீக அன்பர்களின் உதவியால் நிர்மாணிக்கப்பட்டு கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது தினசரி பூஜைகளும் நடத்தப்பட்டது ஸ்ரீ ராஜ வினாயகர் சன்னதி, திருப்பணி கமிட்டி உறுப்பினர்கள் M. முருகையன், V. அர்ஜுன், S. நரசிம்ம அய்யங்கார், M. கோவிந்தசாமி, R. மீனாட்சி சுந்தரம் மற்றும் ஸ்ரீகோதண்டராமர் அனைத்து உறுப்பினர்களின் உதவியால் செய்து முடிக்கப்பட்டது.
6. **26.1.1976 திருமுருகன், நவக்கிரக சன்னதிகள்:** அம்மையார் குப்பம் திரு. துரைசாமி முதலியார் (முன்னால் திருத்தனி தேவஸ்தான டிரஸ்டி) அவர்களால் அடிக்கல் நாட்டப்பட்டது.
7. **10.2.1977 மற்றும் ஸ்ரீகோதண்டராமர், ஸ்ரீஆஞ்சநேயர் சன்னதிகள் :** திருமுருகன்

சன்னதிக்கு திரு. G.S. துரைசாமி முதலியார் அவர்களால் காஞ்சி C.K. ராமன் M.A.,B.L. அவர்கள் முன்னிலையில் **வாசக்கால்** வைக்கப்பட்டது. திருப்பணிகள் அறங்காவலர்கள் மேற்பார்வையில் அன்பர்களின் உதவியுடன் நடைபெற்று வந்தன.

8. **19.3.1978ல் ஸ்ரீசுப்ரமணிய சுவாமி திருக்கோயில் மகாகும்பாபிஷேகம் :** திரு. C. பாலசுப்பிரமணிய முதலியார், திருமதி. சுப்புலெட்சுமி அர்ஜுன், K. லெட்சுமி காந்தன், R.S. ராமானுஜ அய்யங்கார், வெங்கடசாமி ஆகிய அறங்காவலர்கள் குழுவும் மற்றும் அனைத்து உறுப்பினர்களும் சேர்ந்து நடத்தி வைத்தார்கள்.

9. **13.7.1986 சிவன் பார்வதி சன்னதி:** பிரதிஷ்ட்டை செய்யப்பட்டு வேதபாராயண சபையினரால் மாககும்பாபிஷேகம் நடத்தப்பட்டது.

10. **29.3.1998ல் மகா மண்டபம் இராஜ கோபுரம் திருப்பணிகள் :** திரு. K. லக்ஷ்மிகாந்தன் நிர்வாக அறங்காவலர் மற்றும் A. ஜெயராமன், G. கன்னியப்பன், E. சேகர், M.ராதாகிருஷ்ணன், திருமதி சுப்புலெட்சுமி அர்ஜுன் அறங் காவலர்கள் மற்றும் திருப்பணி குழு உறுப்பினர் கள் அனைவரது சீரிய முயற்சியால் தொடங்கப் பட்டு மகா மண்டப திருப்பணி நிறைவுப் பெற்றது.

11. **11.2.2000ல் மகாகும்பாபிஷேகம்:** திரு. K. லெட்சுமிகாந்தன் நிர்வாக அறங்காவலர் மற்றும் அனைத்து அறங்காவலர்கள், திருப்பணி குழு உறுப்பினர்கள் அனைவரது ஒத்துழைப் புடன் நடத்தப்பட்டது.

12. **4.4.2004 இராஜ கோபுர கும்பாபிஷேகம்:** ஸ்ரீ மங்கலசரபேஸ்வரர் சன்னதி, தன்வந்திரி, சூரியன், சந்திரன் சன்னதிகள், ஸ்ரீலெட்சுமி, ஸ்ரீ சரஸ்வதி, ஸ்ரீ பால பைரவர், ஸ்ரீராகு, ஸ்ரீகேது, ஸ்ரீ காளகஸ்தீஸ்வரர் சன்னதிகளின் **கும்பாபிஷேகம்** நிர்வாக அறங்காவலர் திரு. K. லெட்சுமி காந்தன் மற்றும் திரு. G. கன்னியப்பன், திரு. E. சேகர், திரு. M. ராதாகிருஷ்ணன், திருமதி சுப்புலட்சுமி அர்ஜுன் மற்றும் திரு. A.L. கிருஷ்ணா என்கிற கிருஷ்ணமூர்த்தி ஆகிய அறங்காவலர்கள் இராஜ கோபுர திருப்பணி உபயதாரர்கள், ஸ்ரீ ஞானாம்பிகை சமேத ஸ்ரீவேதபுரீஸ்வரர் தெய்வீக சபை, ஸ்ரீ பாதம் தாங்கிகள் சங்கம், ஸ்ரீகைலாசநாதர் கைங்கரிய சபா, அருள் தரும் முருகன் அன்னதான டிரஸ்ட் அனைத்து உறுப்பினர்கள் சீரிய ஒத்துழைப்புடன் **இராஜ கோபுர கும்பாபிஷேகம்** சிறப்பாக நடைபெறுகிறது.

13. **19.3.1998, 11.2.2000, 4.4.2004 :** ஆகிய தேதிகளில் நடந்த **கும்பாபிஷேக விழா மலர்களில்** அடியேனையும் (M. முருகையன்) இறைவன் சிறப்பு பற்றி எழுத வாய்ப்பு கொடுத்த திரு. முருகனை வணங்குகிறேன். மேலும் பொருளுதவி செய்துள்ள நன்கொடையாளர் களின் பட்டியலில் அடியேனையும் இருக்க செய்து, ஆரம்பக் காலத்தில் மற்ற ஆன்றோர்களின் பொருளுதவியை திருப் பணிக்கு கிடைக்க செய்தமைக்கு எல்லாம் வல்ல வடிவேலனுக்கு நன்றி சொல்லக் கடமைப் பட்டுள்ளேன்.

1969 முதல் 4.4.2004 வரை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் (சிவ விஷ்ணு ஆலயம்) தொடர்ந்து இராஜ கோபுர கும்பாபிஷேகம் வரை சிறப்பாக அறங்காவலர் குழு உறுப்பினர்கள், பக்த கோடிகள், உபயதாரர்கள் அனைத்து சபா சங்க உறுப்பினர்கள் இத்திருக்கோயில் திருப்பணிகள் திறம்பட நடத்திக் கொடுத்தமைக்கு நன்றி சொல்லி, மேலும் கும்பாபிஷேக பத்திரிக்கையில் குறிப்பிட்டுள்ள 29 உறுப்பினர்களுக்கும் பொருள் தானம், சிரம தானம், உழைப்பு தானம் அளித்துள்ள அனைத்து உறுப்பினர்களுக்கும் பெயர் குறிப்பிட விட்டுப் போன அனைத்து உறுப்பினர்களுக்கும் நன்றி சொல்லி அவர்கள் அனைவரும், அவர்கள் குடும்பமும் இறையருள் பெற்று நல்வாழ்வு பெறவும், அவர்களின் தொண்டுள்ளம் வளரவும், திரு முருகனை வேண்டி வணங்கி நிறைவு செய்கிறேன்.

அன்பன்.
**மு. முருகையன்.**
நகராட்சி நிர்வாக இணை இயக்குனர்
(ஓய்வு)

# அருள்மிகு
# சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

# (சிவ விஷ்ணு ஆலயம்)

பிருந்தாவன் நகர், ஆதம்பாக்கம்,
சென்னை-600 088.

நூதன இராஜகோபுர திருப்பணி உபயதாரர்கள்

# அருள்மிகு ஸ்ரீ ஞானாம்பிகை ஸமேத ஸ்ரீவேதபுரீஸ்வரர் தெய்வீக சபை

பிருந்தாவன் நகர், ஆதம்பாக்கம்.

**திரு. K. லெக்ஷ்மிகாந்தன்,** தலைவர்
**திரு. இரா. ஐய்யப்பன்,** கௌரவ தலைவர்

**திரு. ராதாகிருஷ்ணன்**
பொதுகாரியதரிசி

உப தலைவர்கள்

**திரு. E. சேகர்**
**திரு. G. கன்னியப்பன்**
**திரு. A.L. கிருஷ்ணா (எ) கிருஷ்ணமூர்த்தி**
(கைலாசநாதர் கைங்கர்ய சபா)
**திரு. P.S. ஜகதீஷ்சந்திரா**
**திரு. G. மஹாலிங்கம்**
**திரு. O.K. இராமச்சந்திரன்**
**திருமதி. சுப்புலட்சுமி அர்ஜுன்**

காரியதரிசிகள்

**திரு. O. சண்முகநாதன் செட்டியார்**
**திரு. C.T.S. சிதம்பரம் செட்டியார்**
**திரு. S. சுவாமிநாதன்**
**திரு. V. சந்திரசேகரன்**

சிறப்பு அழைப்பாளர்கள்

**திரு. K. மோகனசுந்தரம்,** B.E,
(அ.த.மு. அன்னதான ட்ரஸ்ட்)
**திரு. M. முருகையன்**
**திரு. S. சந்திரகாந்தன்**
**திருமதி. திருமலா ஜெகதீஷ்**
**திருமதி. வஸந்தா பார்த்தசாரதி**
**திரு. R. செந்தாமரைக்கண்ணன்**
**திரு. K. சம்பத்**
(ஸ்ரீ பாதம்தாங்கிகள் சங்கம்)
**திரு. J. பிரகாஷ்**
**திரு. K. சுரேஷ்**

**2. ஸ்ரீ பாதம்தாங்கிகள் சங்கம்,** ஆதம்பாக்கம், சென்னை - 600 088.
**3. கைலாசநாதர் கைங்கர்ய சபா,** ஆதம்பாக்கம், சென்னை - 600 088.
**4. அருள்தரும் முருகன் அன்னதான ட்ரஸ்ட்,** ஆதம்பாக்கம், சென்னை - 600 088.

கும்பாபிஷேக யாகசாலை, பூஜை, ஹோமங்கள், மைசூர் தத்த பீட ஆஸ்த்தான வித்வான் கும்பகோணம் ஆகம பாடசாலை முதல்வர் சிவாகம மீமாம்ச சிரோன்மணி இலுப்பபட்டு **ப்ரும்மஸ்ரீ S. கல்யாணசுந்தர சிவாச்சாரியார்** குழுவினரால் நடத்தி வைக்கப்படும்.

---

இராஜ கோபுர வடிவமைப்பு :
சிற்ப கலை செம்மல் **S. சக்திவேல் ஸ்தபதி,** B.Sc., in T.Arch
Approved by Govt. of Tamilnadu

# ராஜ கோபுரம் எதற்காக ?



ஒரு ஊருக்கு கோவில் மிகவும் முக்கியம் என்பதில் நம் எவருக்கும் இரு வேறு கருத்து இருக்க நியாயமில்லை. அது போலவே அக்கோவிலில் ராஜ கோபுரம், அர்த்த மண்டபம், அலங்கார மண்டபம், பாக சாலை, யாக சாலை முதலிய அங்கங்களுடன் கூடியதாக மேம்படுத்து வதும் நாம் இறைவனுக்குச் செய்யும் பெரும் தொண்டாகவே அமைகிறது.

ராஜ கோபுரங்கள் உயர்ந்து நிற்பதால் நாம் வெகு தொலைவிலிருந்தும் கூட இறைவனை நினைத்து வழிபட முடியும். இடி மின்னல் போன்ற இயற்கைச் சீற்றங்கள் ஏற்படும்பொழுது இந்த கோபுரங்களின் மீது அமைக்கப்பட்டுள்ள செம்பு முதலான உலேகங்களால் செய்யப்பட்ட கலசங்கள் இடி தாங்கிகளாகச் செயல்பட்டு ஊரை பேரழிவிலிருந்து காப்பாற்றுகின்றன.

மாநசாரம் என்ற ஆகம நூல் கோவிலுக்கு முற்பகுதியில் ராஜகோபுரம் அமைதல் வேண்டும் என்று சிறப்பாக குறிப்பிடுகிறது.

கோபுரங்கள் ஸ்ரீபோகம், ஸ்ரீவிசாலம், விஷ்ணுகாந்தம், இந்த்ரகாந்தம், ப்ரும்மகாந்தம், ஸ்கந்தகாந்தம், சிகரம், சௌம்யகாந்தம் என்ற வகைகளாக குறிப்பிடப்படுகின்றன. சிகரம், ஸ்தூபி, களசுடம், க்ஷுத்ரநாசி ஆகியவை கோபுரத்தின் முக்கிய உறுப்புகளாக வர்ணிக்கப்பட்டுள்ளன. இவை ஒன்று முதல் பதினேழு நிலைகள் (அடுக்குகள்) வரை அமைக்கப்படலாம். நமது ஆலயத்தில் ஐந்து நிலைகளைக் கொண்ட ராஜகோபுரம் சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளது. கோபுரத்தின் தோற்றம், அமைப்பு முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு நாகபந்தம், வல்லீ, கவாக்ஷம் குஜராக்ஷம், ஸ்வஸ்திகம், ஸர்வதோபேதம், நந்த்யாவர்தம், புஷ்பதந்தம் என்று பலவாறாக பெயரிடப்படுகின்றன.

ராஜ கோபரம் என்பது கோயிலின் உள்ளே உறையும் இறைவனின் ஸ்வரூபமாகவே விளங்குகிறது. அதனாலேயே நம் முன்னோர்கள் கோபுரங்களை முடிந்தவரை உயரமாக கட்டி வைத்தனர், கோவிலின் உள்ளே சென்று முறைப்படி இறைவனை வணங்குவதற்கு மனமிருந்தும், நேரம் இல்லாமல் ஓடிக் கொண்டிருப்பவர்களும் இறையருளுக்கு பாத்திரர்களாக வேண்டும் என்ற உயரிய நோக்கந்தான் அந்த ராஜபோபுரங்கள் எழக் காரணமாக இருக்க வேண்டுமென்று எண்ணத் தோன்றுகின்றது.

நம் முன்னோர்கள் எவரும் கோவில் இருக்கும் நகரில் கோவிலுக்கு ராஜகோபுரம் கட்டுவதற்கு முன்பாக தன் வீட்டில் முதல் மாடி கூட கட்டியது கிடையாது. அதற்கு அவர்கள் கூறும் காரணம் மிகவும் எளிமையனது. இறைவன் கீழே அமர்ந்திருக்க நான் மேலே அமர்வது எப்படி ? ஆகவே தங்கள் விட்டில் மாடி கட்ட முற்படுவதற்கு முன்பாகவே இறைவனுக்கு ராஜகோபுரம் முதலான அனைத்து வசதிகளையும் செய்து முடித்தனர். இது நம்மிடையே வெகு காலமாக இருந்து வரும் நம்பிக்கை. விஞ்ஞானப்படிப் பார்த்தாலும், இடிதாங்கியைவிட உயரமாக கட்டிடம் அமைக்கலாமா ?

அடுக்குமாடி கட்டிடங்கள் தவிர்க்க முடியாதவைகளாகிவிட்ட காலகட்டம் இது. அருகிலுள்ள ஆலயத்தைவிட உயரமாகக் குடியிருப்புகள் எழ வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு வருகின்றது. என்ன செய்வது ? இறைவன் அளித்த ஆகமங்களே வழி காட்டுகின்றன ! கோபுர தரிசனம் பாப விமோசனம்; ஏனென்றால் கோபுர சிகரம் அவன் இருந்து அருள் வழங்குமிடம்; அதனால்தான் அதைக் கண்டவுடன் கைதூக்கி வணங்குகிறோம். எனவே, அடுக்கு மாடிக் கட்டிடங்கள் எழும்பும் முன் அருகிலுள்ள ஆலயங்களின் கோபுரங்கள் எழும்பட்டும். உயரே வசிக்கும் நல்ல உள்ளங்கள் நமக்கும் மேலே ஒருவன் இருந்து நம்மை ரக்ஷிக்கிறான் என்பதை மறவாதிருந்து அறவழி நடக்கட்டும. மனம் குளிர்ந்த இறைவன் மேகங்களைக் குளிர்வித்து மழை பொழிவித்து ஸுபிக்ஷம் அருளட்டும். அடுக்கு மாடி அமைப்பாளர்கள் முன் நின்று நடத்துவிக்கும் ராஜகோபுர கும்பாபிஷேகங்கள் அவர்கள் மேலும் மேலும் பல க்ருஹப்ரவேசங்கள் செய்ய வரமளிக்கட்டும்.

R. சீனுவாச சாஸ்திரி
M. ராதாகிருஷ்ணன்

# ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

## (சிவ விஷ்னு ஆலயம்)

இராஜ கோபுர மகா கும்பாபிஷேகம் 4.4.2004ம் நாள் நடக்கும் விழா மலரில் **M. முருகையன்** அவர்களால் வெளியிடப்பட்டுள்ள அன்றாட வாழ்வில் அறநெறிகள் பற்றியது.

## ஆலய வழிபாட்டு முறை

ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் (சிவ விஷ்னு ஆலயம் 11.2.2000ம் நாள் நடந்த மகா கும்பாபிஷேக விழாமலரில் திரு. K. லெட்சுமி காந்தன், A. ஜெயராமன், E. சேகர், G. கன்னியப்பன், M. ராதா கிருஷ்ணன் ஆகியவர்களால் எழுதப்பட்டு பிரசுரிக்கப்பட்டுள்ள சிவாலய வழிபாட்டு முறைகள் 19 எண்களுடன் தற்போது நடக்கும் 4.4.2004ம் ஆண்டு இராஜ கோபுர மகா கும்பாபிஷேக விழா மலரில் கூடுதலாக கீழ்க்கண்ட ஆலய வழிபாட்டு முறைகளும் திரு. M. முருகையன் அவர்களால் எழுதி விவரிக்கப்பட்டுள்ளன.

அறங்காவலர்களில் புதிதாக A.L. கிருஷ்ணா (எ) கிருஷ்ணமூர்த்தி என்பவரும் அறங்காவலராக நியமாக்கப்பட்டுள்ளார்.

நாம் ஆலய வழிபாடு செய்வதும் மூர்த்திகளுக்கு நிவேதனமும், காணிக்கையும் செலுத்துவதும் எல்லாவற்றையும் படைத்த பரம் பொருளுக்கு நன்றி செலுத்துவதற்கு அறிகுறியாகச் செய்யப்படுபவை.

உடம்பினை இருப்பிடமாகக் கொண்டு உயிர் விளங்குகிறது. இதைப் போன்று கோயிலை இருப்பிடமாகக் கொண்டு தெய்வம் விளங்குகிறது. பொதுவாக தேக ஆரோக்கியம் வேண்டும் என்றால், மனம் நல்ல நிலையில் அதாவது அமைதியாக இருக்க வேண்டும். கோயிலுக்குச் சென்று ஆண்டவனை வேண்டி வந்தால் மனச்சுமை குறையும். துன்பங்கள் விலகும். மனம் அமைதி பெறும். இதை நடைமுறையில் நாம் காணலாம். ஏனெனில் கோயிலில் தெய்வீக அலைகள் திகழ்கின்றன.

விக்கிரகங்களைக் கருங்கல்லில் செய்கிறார்கள். இதன் காரணம் கல்லில் பஞ்சபூதங்களான ஆகாயம், காற்று, நெருப்பு, நீர் மற்றும் நிலம் ஆகியவை அடங்கியுள்ளன. ஐம்பூத வடிவான ஆண்டவனின் உருவத்தை ஐம்பூதங்களும் அடங்கிய கல்லில் வடித்து வழிபடுவது மிகவும் சிறப்புடையது.

சக்தியை முழுமைப்படுத்துவதற்காகத் தான் கும்பாபிஷேகம் செய்யப்படுகிறது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை கும்பாபிஷேகம் செய்யப்படவேண்டும்.

கர்ப்பக் கிரகத்தினுள் "ஓம்" என்ற மந்திர ஒலியுடன் அர்ச்சனைகள் செய்யப்படும்போது அந்த ஒலி விக்கிரகத்தில் பட்டு எதிரொலிக்கிறது. இது பக்தர்களின் உடல் நலனையும், உள்ள நலனையும் மேம்படுத்துகிறது. இப்படி தொடர்ச்சியாக நன்மை கிடைக்க வேண்டும் என்பதற்காகத்தான் எல்லா கோயில்களிலும் ஆறுகால பூஜை நடத்தப்படுகிறது.

முழுமையாக ஈடுபாட்டுடன் கடவுள் வழிபாடு செய்யவேண்டும். தங்கள் மனத்தில் உள்ள எல்லா துன்பங்களும், துயரங்களும் நீங்க வேண்டும் என்றும், பொறாமை போன்ற தீயகுணங்கள் மறைய வேண்டும் என்றும் வேண்டிக் கொள்ளவேண்டும். **"கோபுர தரிசனம் கோடி புண்ணியம்"** எனப்படும். கோயிலுக்கு வரமுடியாதவர்களின் ஆன்மாவும் பரிசுத்தமடைந்து இறைவனைச் சேர வேண்டும் என்ற காரணத்தினாலேயே நம் முன்னோர்கள் கோயில்களில் உயர்ந்த கோபுரம் கட்டியுள்ளார்கள். கோபுரம் ஸ்தூல லிங்கம் ஆகும்.

காலை, உச்சி, மாலை, இரவு என்ற நான்கு காலங்களில் ஆலயம் செல்வது சிறப்பு.

காலையில் தரிசனம் - பிணி போக்கும்
மாலை தரிசனம் - பாவம் அகற்றும்
நண்பகல் தரிசனம் - தனம் கொடுக்கும்
அர்த்தசாம தரிசனம் - வீடுபேறு அளிக்கும்

காலையில் கோயிலைத் திறந்தவுடன் உள்ளே சென்று தரிசிக்க கூடாது. சிவாச்சாரியார் முதலில் சென்று தீபம் இட்டு தீபாராதனை செய்த பின்னர்தான் நாம் சென்று தரிசிக்க வேண்டும்.

"கோபுர தரிசனம் பாபவிமோசனம்" எனக் கூறப்படும். எனவே கோயில் கோபுரம் முழுமையாகத் தென்படும் இடத்திலிருந்தே இரண்டு கைகளையும் தலைக்குமேல் குவித்து வணங்க வேண்டும்.

கோயிலில் எத்தனை வாசல்கள் இருந்தாலும் இராஜகோபுரம் வழியாக உள்ளே செல்லுதலே சிறப்பு.

கிழக்கு, மேற்கு நோக்கிய சந்நிதிகளில் வடக்கே தலைவைத்து விழுந்து வணங்க வேண்டும்.

தெற்கு, வடக்கு நோக்கிய சந்நிதிகளில் கிழக்கே தலைவைத்து விழுந்து வணங்க வேண்டும்.

நாம் கால் நீட்டும் பின்புறம் எந்த தெய்வ சந்நிதியும் இருக்கக்கூடாது கொடிமரத்தின் முன் விழுந்து வணங்கினால் அங்கு எந்த தெய்வ சந்நிதியும் இருக்கக்கூடாது. ஆலயத்தின் உள்ளே உள்ள சந்நிதிகளில் நமஸ்காரம் செய்யக்கூடாது.

சிவலிங்கத்தின் முன் பலிபீடம், நந்திதேவர் திருவுருவமும் உள்ளன. சிவலிங்கம் - பதியையும், நந்தி - பசுவையும், பலிபீடம் - பாசத்தையும் குறிக்கிறது. இவ்வாறு பதி, பசு, பாசம் என்று சைவசித்தாந்த முப்பொருள் உண்மை விளக்கம் பெறுகிறது.

கொடிமரத்திற்கு அடுத்தபடியாக இருப்பது உள்ளே உள்ள தெய்வத்திற்குரிய வாகனம். சிவபெருமான் என்றால் நந்தி இருக்கும். பெருமாள் கோயில் என்றால் கருடன் இருக்கும். அம்பாள் கோயில் என்றால் சிம்மவாகனம் இருக்கும். ஸ்ரீ முருகன் என்றால் மயில் இருக்கும். ஸ்ரீ கணேசன் என்றால் மூஷிக வாகனம் இருக்கும். இவை எல்லாம் உள்ளே உள்ள மூர்த்தியை நோக்கியவாறு இருக்கும். நாம் கடவுளையும் வாகனத்தையும் சேர்த்தே வழிபடவேண்டும்.

கன்னி மூலையில் உள்ள விநாயகரை முதலில் வணங்க வேண்டும். விநாயகர் முன் வணங்கும் பொழுது வலது கையை இடது கையின் முன் வைத்து வலது கையால் இடது தலைப்பாகத்திலும், இடது கையை வலது கையின் முன்வைத்து இடது கையால் வலது தலைப்பாகத்திலும் மாற்றி மாற்றி மூன்று முறை இருபக்கங்களிலும் குட்டிக்கொள்ள வேண்டும்.

பின்னர் முதலில் வலது கையால் இடது காதைப்பிடித்துக் கொண்டும், பின்னர் இடது கையால் வலது காதைப் பிடித்துக்கொண்டும் மூன்று முறை தோப்புக்கரணம் போடவேண்டும். கரணம் என்றால் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவைகளைத் தோற்பது தோற்புக்கரணம் எனப்படும். விநாயகர் முன் இவைகளை இழந்து தூய்மையடைய வேண்டும் எனவும் நாம் நமது தவற்றை உணர்ந்து வந்த காரியங்கள் நிறைவேற வேண்டும் எனவும் வேண்டுவதே தோப்புக்கரணம்.

விநாயகரையும், ஆஞ்சநேயரையும் வணங்கினால் ஏழரைச் சனி தோஷங்கள் குறையும்.

குளித்ததும் வடக்கு நோக்கி நின்று சிவனை நினைத்துக்கொண்டு "சிவாய நம" என்ற ஐந்தெழுத்துப் பஞ்சாட்சரத்தை உச்சரித்து திருநீறு பூசிக்கொள்ள வேண்டும்.

4.4.2004ல் நடக்கும் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் இராஜகோபுர மகா கும்பாபிஷேக விழா மலரில் ஆலய வழிபாட்டுமுறைகளை பல நூல்களிலிருந்து எடுத்து தொகுத்து வழங்கியது.

## தஞ்சை மாவட்டத்திலுள்ள நவகிரகத் தகவல்கள்

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | சூரியனார் கோவில் | வியாழன் | திட்டை, ஆலங்குடி |
| திங்கள் | திங்களூர் | வெள்ளி | கஞ்சனூர் |
| செவ்வாய் | வைத்தீஸ்வரன் கோயில் | சனி | திருநள்ளாறு |
| புதன் | திருவெண்காடு | இராகு | திருநாகேஸ்வரம் |
| | | கேது | கீழப்பெரும்பள்ளம் |

# விநாயகர் அகவல்



சீதக் களபச் செந்தாமரைப் பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன் அரைஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்து அழகு எறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்கு சிந்தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சில் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்கு பொன்முடியும்
திரண்ட முப்புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதம் கடந்த துரியமெய்ஞ் ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே
முப்பழம் நுகரும் மூஷிக வாகன
இப்பொழுது என்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தான் எழுந்தருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதல் ஐந்தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து
குருவடிவாகிக் குவலயம் தன்னில்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக்கு அருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்(து)
இருவினை தன்னை அறுத்து இருள் கடிந்து
தலம்ஒரு நான்கும் தந்தெனக் கருளி
மலம்ஒரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந்திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதும் காட்டி
ஆறாதாரத்து அங்குச நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடை பிங்கலையின் எழுத்தறி வித்துக்
கடையில் சுழுமுனை கபாலமும் காட்டி
மூன்றுமண்டலத்தின் முட்டிய தூணின்
நான்று எழுபாம்பின் நாவில் உணர்த்திக்
குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலாதாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறிவித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடைச்சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக்கரத்தின் உறுப்பையும் காட்டிச்
சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்
எண்முகமாக இனிதெனக்கு அருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினில் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக்கு அருளி
என்னை அறிவித்து எனக்கு அருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்(து)
இருள்வெளி இரண்டுக்கு ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்தி என்செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி
அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்து எனையாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே!

# ஸ்ரீ கோதண்டராமர்

பிருந்தாவன் நகர், ஆதம்பாக்கம்,

சென்னை – 88



## SRI PADAM THANGIGAL SANGAM

ADAMBAKKAM,

CHENNAI - 600 088.



# SRIPADAM THANGIGAL SANGAM

(Regd. 312/85)
Plot No. 8, Bakkiammal Nagar,
Door No. 26, Mohanapuri II Street,
Adambakkam, Chennai - 600 088.

## KAINKARYAMS OF SRIPADAM THANGIGAL IN THE PAST TWO DECADES

★ Sangam Started on 1st September 1982
★ Doing Punarvasu Thirumanjanam and Purappadu Every month
★ Constructed two Thirumadappali for our Temple - one for Sri Ramar Sannidhi and one for other Sannidhies
★ Donor work undertaken for Maha Mandapa Thiruppani in the year 2000
★ Assisting purappadu in other Sannidhies
★ Sahasranama Archanai for Members on Tamil New Years Day
★ Thiruppavadai Utsavam Every year
★ Unjal Utsavam Every year
★ Assisting Temple for Vaikunta Ekathasi and other Utsavams
★ 5 Days Bramotsavam - 18 Years Completed - 19th Year From 7th April to 11th April 2004
★ 2 Days Vasantha Utsavam - 4th year Completed - 5th Year During June 2004
★ Constructed New Duwajasthambam for Sri Kothandaramar Sannidhi - Prathishitai on 17th March 2004
★ Active Participation in Raja Gopuram Work - One Tier Work on Donor Basis at a cost of around Rs. 3.50 lakhs

**R. SENTHAMARAI KANNAN**
President

**K. SAMPATH**
Secretary

**S. SRINIVASAN**
Treasurer

**R. GOVINDARAJAN**
Vice President

**N. RAMAKRISHNAN**
Joint Secretary

**K. SURESH**
Joint Treasurer

Committee Members
**V. BASKARAN, S.V. RANGARAJAN, S. KRISHNAN, J. SUNDARRAJAN, S. JAGANNATHAN**

# மந்திரங்கள்

## காயத்ரி மந்த்ரம் (பொது)

ஓம் பூ:-ஓம் புவ: ஓம் ஸுவ:-ஓம் மஹ:-ஓம் ஜந:-
ஓம் தப:-ஓம் ஸத்யம் - ஓம் தத்ஸவிதுர் வரேணியம் - பர்கோ
தே வஸ்ய தீ மஹி - தி யோ யோந : ப்ரசோத யாத் :- ஓமாப :
ஜ்யோதீரஸ:-அம்ருதம் ப்ரஹ்ம - பூர்புவஸ்ஸுவரோம்.

## ஸ்ரீ காயத்ரி மந்திரங்கள்

(ஒவ்வொரு கடவுளுக்கும்)

### விநாயகர்

ஓம் தத்புருஷாய வித்மஹே
வக்ர துண்டாய தீமஹி!
தந்நோ தந்தி; ப்ரசோதயாது!

### முருகன்

ஓம் தத்புருஷாய் வித்மஹே
மஹாஸேநாய தீமஹி!
தந்நோஃஷண்முகஃ ப்ரசோதயாது!

### துர்கை

ஓம் காத்யாய நாய வித்மஹே
கந்ய குமாரி தீமஹி
தந்நோ துர்க்கிஃ ப்ரசோதயாது!!

### லெட்சுமி

ஓம் மஹா லெக்ஷ்மீயை வித்மஹே
விஷ்ணு பத்ந்யைச தீமஹி
தந்நோ லெக்ஷ்மீஃ ப்ரசோதயாது!

### சரஸ்வதி

ஓம் வாக்தேவ்யைச வித்மஹே
விரிஞ்சி பத்ந்யைச தீமஹி
தந்நோ வாணீஃ ப்ரசோதயாது!!

### பிரம்மா

ஓம் வேதாத்மநாய வித்மஹே
ஹிரண்யகெர்ப்பாய தீமஹி
தந்நோ ப்ரம்மஃ ப்ரசோதயாது!

### விஷ்ணு

ஓம் நாராயணாய வித்மஹே
வாசுதேவாய தீமஹி
தந்நோ விஷ்ணுஃ ப்ரசோதயாது!

### ருத்ரன்

ஓம் தத்புருஷாய வித்மஹே
மஹா தேவாய தீமஹி!
தந்நோ ருத்ரஃ ப்ரசோதயாது!

### நந்தி

ஓம் தத்புருஷாய வித்மஹே
சக்ர துண்டாய தீமஹி!
தந்நோ நந்தீஃ ப்ரசோதயாது!

### ஹநுமன் காயத்ரி

ஓம் ஆஞ்ச நேயாய வித்மஹே!
வாயுபுத்ராய தீமஹி
தந்நோ: மாருதிப் ப்ரசோதயாது!

### ஸ்ரீ கிருஷ்ணா

ஓம் தாமோத ராயவித்மஹே!
ருக்மணி வல்லபாய தீமஹி!!
தந்நோக்ருஷ்ண ப்ரசோதயாது!

### ஸ்ரீ ராமர்

ஓம் தசரதாய வித்மஹே
ஸீதா வல்லபாய தீமஹி!
தந்நோ ராம ப்ரசோதயாது!

### நோய்களை நீக்கும் மந்த்ரம்

ஓம் நமோ பகவதே வாஸுதேவாய
தந்வந்தரயே அம்ருதகலச ஹஸ்தாய
சர்வ ஆமய நாசநாய,த்ரிலோக்ய நாதாய
மஹா விஷ்ணுவே நம:

## ஸ்ரீ நரசிம்மர்

ஓம் வஜ்ர நாகாய வித்மஹே!
தீக்ஷ்ண தம்ஷ்ட்ராய தீமஹி!
தந்நோ நரஸிம்ஹ ப்ரசோதயாது!

## ஸ்ரீசாஸ்தா

ஓம் பூத நாதாய வித்மஹே
பவநந்தனாய தீமஹி!
தந்நோ சாஸ்தா ப்ரசோதயாது!

## ஸ்ரீ பூமா தேவி

ஓம்தநூர் தராயை சவித்மஹே!
ஸர்வஸித்யைச தீமஹி!!
தந்நோ தரா ப்ரசோதயாது!

## ஸ்ரீ கருடன்

ஓம் தத்புருஷாய வித்மஹே!
ஸுவர்ண பக்ஷாய தீமஹி!!
தந்நோ கருட ப்ரசோதயாத்

## தட்சிணா மூர்த்தி

ஓம் தட்சணா மூர்த்தயேச வித்மஹே
த்யாநஸ்த்தாய தீமஹி!
தந்நோ தீச ப்ரசோதயாத்

## நவக்ரஹ காயத்ரி

## சூரியன்

ஓம் அஸ்வ தவ்ஜாய வித்மஹே
பத்ம ஹஸ்தாய தீமஹி!
தந்நோ சூர்யஃ ப்ரசோதயாது!

## சந்திரன்

ஓம் நிசாகராய வித்மஹே
கலாநாதாய தீமஹி!
தந்நோ: சந்த்ரஃ ப்ரசோதயாது!

## அங்காரகன்

ஓம் அங்காரகாய வித்மஹே
பூமி பாலாய தீமஹி!
தந்நோ குஜஃ ப்ரசோதயாது!

## புதன்

ஓம் புதக்ரஹாய வித்மஹே
இந்து புத்ராய தீமஹி!
தந்நோ புதஃ ப்ரசோதயாது!

## குரு

ஓம் சுரா சார்யாய வித்மஹே
சுர ஸ்ரேஷ்டாய தீமஹி!
தந்நோ குருஃ ப்ரசோதயாது!

## சுக்கிரன்

ஓம் ரஜதாபாய வித்மஹே
ப்ருகு சுதாய தீமஹி!
தந்நோ சுக்ரஃ ப்ரசோதயாது!

## சனி

ஓம் சனைஸ் சராய வித்மஹே
சூர்ய புத்ராய தீமஹி!
தந்நோ மந்தஃ ப்ரசோதயாது!

## ராகு

ஓம் சூக தெந்தாய வித்மஹே
உக்ரரூபாய தீமஹி!
தந்நோ: ராஹுஃ ப்ரசோதயாது!

## கேது

ஓம் சித்ரவர்ணாய வித்மஹே
ஸர்ப்ப ரூபாய தீமஹே!
தந்நோ கேதுஃ ப்ரசோதயாது!
ஆதித்யாயச சோமாய
மங்கலாய புதாயச
குரு சுக்ர சனிப்யஸ்ச்ச
ராஹவே கேதவே நம!!

## விநாயகர் மந்திரம்

முதல்வனே யானை முகத்தவனே
முத்தி நலம் சொன்னவனே
தூய்மை சுகத்தானே மன்னவனே
செஞ்சுரையான் சேரனே
தற்பரனே நின்றான் சரண்
வேகமாய் நெறி சேறி வினைகளும்
தாக யோக ஸ்டா தளர்ச்சியும்
சோக வாரியினால் வரும்
துன்பமும் போக்கவானே
விநாயகனே போற்றுவோம் போற்றி

## ஈஸ்வர மந்திரம்

சிவாய சர்வாய ருத்ராய
ஈஸாய அராய பராத்மனே
ஆராய ஈஸ்வரனாய மகேஸ்வரனாய
பரமேஸ்வரனாய ஆராய நீலகண்டாய
கங்காதராய ஆராய சதாசிவாய
சர்வேஸ்வராய சங்கராய
விர்ப்பாச்சாய நீலகண்டாய
கால கால ருத்ராய உமா பரமேசுவராய
சிவரூபாய ஈஸ்வர சர்வ
பூதணமும் ருத்ரே

---



## மலர்களின் பயன்கள்



| | | |
|---|---|---|
| செந்தாமரை | : | செல்வ செழிப்பை தந்து தரித்திரம் நீக்கும் |
| சிவப்பு அரளி | : | மனத் துக்கங்களை போக்கி நல்வாழ்வை தரும். எதிர்ப்பு குறையும். |
| மல்லிகை | : | நிறைந்த புகழை தந்து மற்றவர் போற்றும்படியான வாழ்வுத் தரும். |
| முல்லை | : | குருகிரக பீடை நீக்கி நினைவாற்றலைத் தரும். |
| நீல சங்கு புஷ்பம் | : | சனி கிரகத் தொல்லை நீக்கி நினைவாற்றலைத் தரும். |
| மஞ்சள் அரளி | : | திருமணத் தடங்கல்களை நீக்கும். |
| பன்னீர் புஷ்பம் | : | கண் நோய்கள் நீக்கும். |
| பாரிஜாதம் | : | கணவன் மனைவி அன்பை பெருக்கும். |
| மருதாணி பூ | : | மற்றவர்களை வசீகரிக்கும். |
| அல்லி | : | சந்திர கிரக பீடை நீக்கும். |
| மஞ்சள் சாமந்தி ஆவரை | : | சூரிய கிரக பீடை நீங்கி ஆயுள் பெருகும். |
| இருவாட்சி | : | புத பிரக பீடை நீக்கும். |
| அரளி | : | வாழ்க்கையில் வெற்றி தரும். |
| மரிக்கொழுந்து | : | நல்ல குணங்களை பெருக்கும். |
| துளசி | : | மனதில் விளையும் கெட்ட எண்ணங்களை நீக்கும். மஹா விஷ்ணுவின் அருள் கிடைக்கும். |
| வில்வம் | : | அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று நலன்களைத் தரும். |
| வெண்தாமரை | : | கல்வி, கலை, அறிவு பெருக்கம். கலைமகளின் பூரண அருள் கிடைக்கும். |
| கருந்துளசி | : | தோல் நோய்கள் தீரும். ஸ்ரீ கிருஷ்ண பகவான் அருள் கிடைக்கும். |

You can

# WIN 75%

## Scholarship

On total course fee

**அறிவுத்திறனை நிரூபித்து... வெல்லுங்கள்!**





**SAT 2004** | SCHOLARSHIP APTITUDE TE[illegible]
FOR DESERVING STUDE[illegible]TS

**Exam Date: 04.04.2004**

இத்தேர்வுக்கு எந்த வித கட்டணமும் கிடையாது.

**CSC®**
COMPUTER EDUCATION
An ISO 9001:2000 Certified Institution

**ADAMBAKKAM**
38, KARUNEEGAR ST., Ph.22552642

**BRINDAVAN NAGAR**
3, MAIN ROAD, OPP. PILLAIYAR KOVIL
Ph.55180660

**NANGANALLUR**
No. 7, 48TH STREET, Ph. 22311364

# சரஸ்வதி பாடல்கள்



வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்
கொள்ளை யின்பம் குலவு கவிதை
கூறும் பாவலர் உள்ளத் திருப்பாள்
உள்ள தாம்பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத்தின் உள்நின் றொளிர்வாள்
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொரு ளாவாள்
மாதர் தீங்குரற் பாட்டில் இருப்பாள்
மக்கள் பேசும் மழலையில் உள்ளாள்
கீதம் பாடும் குயிலின் குரலைக்
கிளியின் நாவை இருப்பிடங் கொண்டாள்
கோதகன்ற தொழிலுடைத் தாகிக்
குலவு சித்திரம் கோபுரம் கோயில்
ஈதனைத்தின் எழிலிடை யுற்றாள்
இன்ப மேவடி வாகிடப் பெற்றாள்.

**சரஸ்வதி கவசம்**

சரசுவதி என் தலையைக் காக்க வாக்கின்
தலைவியாம் வாக்தேவி நுதலைக் காக்க
விரசுபக வதிகண்ணைக் காக்க நாசி
விமலைவாக் வாதினியாள் காக்க வித்தைக் (கு)
உரியதனித் தேவதைஎன் உதடு காக்க
உயர்புகழ்ப் பிராம்மிபல் வரிசை காக்க
மருவும் 'ஐம்' என் றிடுமனு கண்டம் காக்க
வாழ் 'ஹ்ரீமா'ம் எழுத்து என்றன் பிடரைக்காக்க

எழுத்தான 'சிரீம்' என்தோள் காக்க வித்யா
திருஷ்டாத்மா என்மார்பில் இருந்து காக்க
வழுத்துவித்யா ரூபிணிஎன் நாபி காக்க
வாணிகரம் காக்கஎல்லா எழுத்தின் தேவி
விழுத்தகஎன் அடிகாக்க வாக்கிற் கென்று
மேய அதிட் டானதே வதைதான் என்றன்
முழுத்தஉறுப் பெவற்றினையும் காக்க காக்க
மூள் கிழக்கில் சர்வகண்ட நாசி காக்க

அங்கியெனும் திசைக்கண்ணே நின்று பீஜாட்
சரிகாக்க மந்திரரா ஜத்தின் தேவி
பொங்குதெற்கி லேயிருந்து காக்க காக்க
புகல்மூன்றக் கரவுருவாள் நிருதி திக்கில்
தங்கியெனைப் புரந்தருள்க மேற்குத் திக்கில்
சாற்றுநா நுனியுறையும் அன்னை காக்க
துங்கமிகு சர்வாம்பி கைதான் வாயு
துன்னுதிசை யினில் என்னைக் காக்க காக்க

சத்தியவா சினிவடக்கில் காக்க எல்லாக்
கலையினிலும் உறைவாள்ஈ சானம் காக்க
நத்துசர்வ பூசிதையாள் ஊர்த்து வத்தில்
நயந்திருந்து காத்தருள்க அதோமு கத்தில்
புத்தகவா சினியாகும் தேவி காக்க
புகழ்கிரந்த பீஜத்தின் உருவாய் நின்றாள்
எத்திசைக ளிலும் இருந்து காக்க காக்க
எளியேனைக் கலைமகள் தான் என்றும் காக்க

இந்த கவசத்தை தக்க பெரியோரிடம் உபதேசம் பெற்று முறைப்படி பூஜை செய்தால் எல்லாக் காரியங்களிலும் வெற்றி பெறலாம்.

---

* தேவர் குறளும், திருநான் மறை முடிவாம்
* மூவர் தமிழும், முனிமொழியும் — கோவை
* திருவாசகமும், திருமூலர் சொல்லும்,
* ஒருவாசகம் என்று உணர்

— அவ்வையார்

---

* ஆண்களுக்கு ஒழுக்கம் குறைந்தால் அந்த ஆண்கள் தான் அழிவார்கள்.
* பெண்களுக்கு ஒழுக்கம் குறைந்தால், சமூகமும், நாடும் அழியும்.

— மனு

## சரஸ்வதி சிந்தனை

புத்தகத் துள்ளுறை மாதே
பூவில் அமர்ந்துறை வாழ்வே
வித்தகப் பெண்பிள்ளை நங்காய்
வேதப் பொருளுக் கிறைவி
முத்தின் குடையுடை யாளே
மூவுல குந்தொழு தேவி
செப்பு கவித்தன முலையாய்
செவ்வரி ஒடிய கண்ணாய்
முத்து நிறத்த வெண்பல்லாய்
முருக்கம் பூமேனி நிறத்தாளே
தக்கோ லந்தின்ற துவர்வாயாய்
சரஸ்வதி என்னுந் திருவே
எக்காலும் உன்னைத் தொழுவோம்
எழுத்தறி புத்தி பண்ணுவிப்பாய்

ஆக்காய் எம்பெரு மாட்டி
அழகிய பூவணை மீதாய்
நோக்காய் என்மிடி தீர
நொடிக்கும் பிரமணத்தி நோக்காயே
சாலு நெல்லரிசி கொண்டு
சரஸ்வதி பூசை பண்ணி
பாலொடு பழத்தை நிரப்பி
பாரவித் தொழுவோம் நங்காய்
நங்காய் நங்காய் நமஸ்து
ஞானக் கொழுந்தே நமஸ்து
கல்விக் கரசே நமஸ்து
கணக்சுறி தேவி நமஸ்து
சொல்லும் பொருளே நமஸ்து
சூக்சும ரூபி நமஸ்து

## சகலகலாவல்லி மாலை

### கட்டளைக் கலித்துறை

வெண்டா மரைக்கன்றி நின்பதம்
தாங்க என்வெள்ளையுள்ளத்
தண்டா மரைக்குத் தகாதுகொ
லோ?சகம் ஏழுமளித்(து)
உண்டான் உறங்க ஒழித்தான் பித்(து)
ஆகஉண் டாக்கும்வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே!
சகல கலாவல்லியே! 1

நாடும் பொருட்சுவை சொற்சுவை
தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள்
வாய்; பங்க யாசனத்திற்
கூடும் பசும்பொற் கொடியே
கனதனக் குன்றுமைம்பாற்
காடும் சுமக்கும் கரும்பே!
சகல கலாவல்லியே! 2

அளிக்குஞ் செழுந்தமிழ்த் தெள்ளமு(து)
ஆர்ந்துன் அருட்கடலிற்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொ
லோ? உளங் கொண்டுதெள்ளித்
தெளிக்கும் பனுவற் புலவோர்
கவிமழை சிந்தக்கண்டு
களிக்கும் கலாப மயிலே!
சகல கலாவல்லியே! 3

தூக்கும் பனுவல் துறைதோய்ந்த
கல்வி சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்
வாய்; வட நூற்கடலும்
தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும்
தொண்டர்செந் நாவினின்று
காக்கும் கருணைக் கடலே!
சகல கலாவல்லியே! 4

பஞ்சப்(பு) இதந்தரு செய்யபொற்
பாதபங் கேருகமென்
நெஞ்சத் தடத்(து) அல ராததுஎன்
னே? நெடுந் தாட்கமலத்(து)
அஞ்சத் துவசம் உயர்த்தோன்செந்
நாவும் அகமும்வெள்ளைக்
கஞ்சத் தவிசொத்(து) இருந்தாய்
சகல கலாவல்லியே! 5

பண்ணும் பரதமும் கல்வியும்
தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழு(து) எளி(து) எய்தநல்
காய், எழு தாமரையும்
விண்ணும் புவியும் புனலும்
கனலும்வெங் காலும்அன்பர்
கண்ணும் கருத்தும் நிறைந்தாய்!
சகல கலாவல்லியே! 6

பாட்டும் பொருளும் பொருளாற்
பொருந்தும் பயனும்என்பால்
கூட்டும் படிநின் கடைக்கண்நல்
காய்,உளங் கொண்டுதொண்டர்
தீட்டும் கலைத்தமிழ் தீம்பால்
அமுதம் தெளிக்கும்வண்ணம்
காட்டும்வெள் ளோதிமப் பேடே!
சகல கலாவல்லியே! 7

சொல்விற் பனமும் அவதான
முங்கவி சொல்லவல்ல
நல்வித்தை யும்தந்து அடிமைகொள்
வாய், நளி னாசனம்சேர்
செல்விக்(கு) அரிதென்(று) ஒருகால
மும்சிதை யாமை நல்கும்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே!
சகல கலாவல்லியே! 8

சொற்கும் பொருட்கும் உயிராம்மெய்ஞ்
ஞானத்தின் தோற்றமென்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர்
யார்? நிலம் தோய்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோடு)
அரசன்னம் நாணநடை
கற்கும் பதாம்புயத் தாயே!
சகல கலாவல்லியே! 9

மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னரும்என்
பண்கண் டளவிற் பணியச்செய்
வாய்; படைப் போன் முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்
டேனும் விளம்பில்உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ?
சகல கலாவல்லியே! 10

## செய்யக்கூடாதவை; செய்யக்கூடியவை

1. வெள்ளிக்கிழமைகளில் உப்பு வாங்கினால் வீட்டிற்கு நல்லது. அதிர்ஷ்டத்தைக் கொடுக்கும்.
2. வீட்டின் உள்ளே நகத்தை வெட்டியோ கடித்தோ போடக்கூடாது.
3. இருட்டிய பின்னர் குப்பையை வெளியே போடவோ பேன் எடுத்தல், தயிர் கடைவது, தயிரன்னம் புசித்தல், காய்கறி நறுக்குவது, அரிசிகளைவது போன்றவை செய்யக்கூடாது.
4. பால், தயிர், காய், தண்ணீர் குடம் போன்றவற்றை விளக்கு வைத்த பின் வீட்டிலிருந்து மற்றவர்களுக்கு எடுத்துக் கொடுக்ககூடாது.
5. வீட்டின் நிலைகளில் குங்குமம் மஞ்சள் வைக்க வேண்டும். தீயசக்திகள் மற்றும் பாம்பு போன்ற விஷப்பூச்சிகள் வீட்டிற்குள் வராது.

அழகு என்றால் என்ன? துறவிகள் மெலிவது அழகு;
நான்கு கால் விலங்குகள் கொழுப்பது அழகு;
மனிதன் கல்வி கற்பது அழகு.

– பர்மியப் பழமொழி

# தினசரி தோத்திரம்

## இலக்குமி துதி

### ஞாயிறு

திருவெலாம் சுரந்தருள் திருவே போற்றி
திருமால் நெஞ்சமர் திருமகள் போற்றி
கருமால் மார்பகம் கலந்தாய் போற்றி
பெருமாள் பிரியாப் பெருமகள் போற்றி

### திங்கள்

ஒருமால் உளமகிழ் ஒருத்தி போற்றி
திருமா மகள் நின் செவ்வி போற்றி
ஒருமா மணியா ஒளிர்வாய் போற்றி
பிரியாது அவனுளம் பேணுவாய் போற்றி
வருமாசு அகற்றுசெம் மணியே பேற்றி

### செவ்வாய்

மருவாது இடரெல்லாம் மாற்றுவாய் போற்றி
அருமா வினையெல்லாம் அழிப்பாய் போற்றி
வருமாத் துயர்களை மாதா போற்றி
இருமாப் பிறவிவேர் இறுப்பாய் போற்றி
குருமா மணிநிறக் கொழுந்தே போற்றி

### புதன்

திரையெறி பாற்கடல் செந்திரு போற்றி
விரிகடல் உலகெலாம் விளங்குவாய் போற்றி
பெருமையில் ஈடிலாப் பெண்கொடி போற்றி
அருந்திறல் அறிஞரை ஆண்டாய் போற்றி
சரண்உரு தவர்க்கிடர் தருவாய் போற்றி

### வியாழன்

மருந்தென பிணிகொல் வல்லாய் போற்றி
பொருந்திய புலவர்நாப் புகழோய் போற்றி
கரும்பெனக் கவிஞர்கட்கு இனியாய் போற்றி
நிரம்பிய புலமையோர் நினைவே போற்றி
தருபேர் உலகின் தாயார் போற்றி

### வெள்ளி

அருமையில் அருமையா அமைவாய் போற்றி
பெருமையில் நிகரிலாப் பிடியே போற்றி
வருபொருள் யாவும் வழங்குவாய் போற்றி
பெருகிய அழகுக்கு ஒருமகள் போற்றி
தரித்திரம் அகற்றும் தையலே போற்றி

### சனி

முரசதிர் வாழ்வினை முழக்குவாய் போற்றி
கரையிலாத் துயர்க்கடல் கடத்துவாய் போற்றி
உரம்கொள் உலகை உவப்பாய் போற்றி
எருதூர் சிவனார்க்கு இளையாய் போற்றி
வரைவில் வள்ளலின் தங்காய் போற்றி

# திருக்கோயில் வழிபாடு

## திருமுறைகள் – 12

| | | | |
|---|---|---|---|
| 1–3 | திருஞானசம்பந்தர் | – | தேவாரம் |
| 4–6 | திருநாவுக்கரசர் | – | தேவாரம் |
| 7 | சுந்தரமூர்த்தி நாயனார் | – | தேவாரம் |
| 8 | மாணிக்கவாசகர் | – | திருவாசகம் |
| 9 | திருமாளிகைத் தேவர் முதல் ஒன்பதின்மர் | – | திருவிசைப்பா, திருப்பல்லாண்டு |
| 10 | திருமூலர் | – | திருமந்திரம் |
| 11 | காரைக்கால் அம்மையார் உள்ளிட்ட பன்னிருவர் | – | 40 நூல்கள் |
| 12 | சேக்கிழார் | – | பெரிய புராணம் |

### சமயக் குரவர் - நால்வர்

1. திருஞான சம்பந்தர்
2. திருநாவுக்கரசர்
3. சுந்தரமூர்த்தி
4. மாணிக்கவாசகர்

## காசிக்கு வாசி உயர்ந்த தலங்கள்

1. திருமுதுகுன்றம் (விருத்தாசலம் - விருத்தகாசி)
2. திரு ஆலவாய் (மதுரை)

## தெட்சண கைலாசம்

1. திருக்காளத்தி
2. திருச்சிராப்பள்ளி
3. திரிகோணமலை (இலங்கை)

## பூலோக கைலாசம்

1. திருவையாறு
2. திருக்குற்றாலம்
3. சிதம்பரம்

## முக்தி அளிக்கும் தலங்கள்

1. திருஆரூர் – பிறக்க முத்தி தருவது
2. சிதம்பரம் – தரிசிக்க முத்தி தருவது
3. திருவண்ணாமலை – நினைக்க முத்தி தருவது
4. காசி – இறக்க முத்தி தருவது

## அழகிற் சிறந்த கோயில்கள்

1. தேரழகு – திருவாரூர்
2. வீதி அழகு – திருஇடை மருதூர்
3. மதிலழகு – திருவிரிஞ்சை
4. விளக்கழகு – வேதாரண்யம்

## அம்பிகையின் ஆட்சித் தலங்கள்

1. காஞ்சியில் – காமாட்சி
2. மதுரையில் – மீனாட்சி
3. காசியில் – விசாலாட்சி
4. நாகையில் – நீலாயதாட்சி

## பஞ்ச பூதத்தலங்கள்

1. திருஆரூர் அல்லது காஞ்சிபுரம் – பிருதிவி (நிலம்)
2. திருஆனைக்கா – அப்பு (நீர்)
3. திருவண்ணாமலை – தேயு (தீ நெருப்பு)
4. திருக்காளத்தி – வாயு (வளி, காற்று)
5. சிதம்பரம் – ஆகாயம் (விசும்பு)

## சிவராத்திரி விசேட தலங்கள்

1. கச்சி ஏகம்பம்
2. திருக்காளத்தி
3. கோகர்ணம்
4. திருப்பருப்பதம் (ஸ்ரீ சைலம்)
5. திருவைகாவூர்

## ஏழு விடங்க தலங்கள்

1. திருஆரூர்-வீதிவிடங்கர்-அசபா நடனம்
2. திருநள்ளாறு-நகர (நக) விடங்கர்-உன்மத்த நடனம்
3. திருநாகைக்காரோணம்-சுந்தரவிடங்கர்-வீசி நடனம்
4. திருக்காறாயில்-ஆதிவிடங்கர்-குக்குடநடனம்
5. திருக்கோளிலி-அவனிவிடங்கர்-பிருங்க நடனம்
6. திருவாய்மூர்-நீலவிடங்கர்-கமல நடனம்
7. திருமறைக்காடு-புவனிவிடங்கர்-கம்சபாத நடனம்

## அட்ட வீரட்டத் தலங்கள்

1. திருக்கண்டியூர் – பிரமனை சிரம் கொய்தது
2. திருக்கோவலூர் – அந்தகாசுரனைச் சங்கரித்தது
3. திருஅதிகை – திரிபுரத்தை எரித்தது
4. திருப்பறியலூர் – தக்கன் சிரங்கொய்தது
5. திருவிற்குடி – சலந்தராசுரனைச் சங்கரித்தது
6. வழுவூர் (வைப்புத்தலம்) – யானையை உரித்தது
7. திருக்குறுக்கை – காமனை எரித்தது
8. திருக்கடவூர் – யமனை உதைத்தது

## பன்னிரு ஜோதி லிங்கத் தலங்கள்

1. கேதாரம் (இமயம்) – கேதாரேஸ்வரர்
2. சோமநாதம் (குஜராத்) – சோமநாதேஸ்வரர்
3. மகாகாளேசம் (உஜ்ஜினி) – மகாகாளேஸ்வரர்
4. விசுவநாதம் (காசி) – விஸ்வநாதேசுவரர்
5. வைத்தியநாதம் (மகாராஷ்டிரம்) – வைத்தியநாதேசுவரர்
6. பீமநாதம் (மகாராஷ்டிரம்) – பீமநாதேசுவரர்
7. நாகேஸ்வரம் (மகாராஷ்டிரம்) – நாகநாதேசுவரர்
8. ஓங்காரேஸ்வரம் (மத்திய பிரதேசம்) – ஓங்காரேசுவரர்

9. த்ரயம்பகம் (மகாராஷ்டிரம்) – த்ரயம்பகேசுவரர்
10. குசுமேசம் (மகாராஷ்டிரம்) – குஸ்ருணேச்சுவரர்
11. மல்லிகார்சுனம் – ஸ்ரீ சைலம் (ஆந்திரம்) – மல்லிகார்ச்சுனர்
12. இராமநாதம் (இராமேஸ்வரம்) – இராமநாதேஸ்வரர்

## திருமால் சந்நிதி உள்ள சிவாலயங்கள்

1. திருவோத்தூர் – ஆதிகேசவப் பெருமாள்
2. கச்சி ஏகம்பம் – நிலாத்துண்டப் பெருமாள்
3. கொடிமாடச் செங்குன்றூர் – ஆதிகேசவப் பெருமாள்
4. சிதம்பரம் – கோவிந்தராஜப் பெருமாள்
5. சிக்கல் – கோலவாமனப் பெருமாள்
6. திருநணா – ஆதிகேசவப் பெருமாள்
7. திருநாவலூர் – வரதராஜப் பெருமாள்
8. திருநெல்வேலி – நெல்லை கோவிந்தர்
9. திருப்பழனம் – கோவிந்தர்
10. பாண்டிக் கொடுமுடி – அரங்கநாதர்
11. திருப்பத்தூர் – அரங்கநாதர்
12. திருவக்கரை – அரங்கநாதர்

## முருகன் ஆறுபடை வீடுகள்

1. திருப்பரங்குன்றம்
2. திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)
3. திருவாவினன்குடி (பழனி)
4. திருவேரகம் (சுவாமிமலை)
5. குனு தோறாடல் (திருத்தணி)
6. பழமுதிர்சோலை (அழகர் கோயில்)

## நடராஜர் அபிஷேகம்

1. சித்திரை - திருவோணம் - உச்சிக்காலம்
2. ஆனி - உத்திரம் - பிரதோஷ காலம் (திருவந்திக்காப்பு - முதல் காலம்)
3. ஆவணி - சுக்கிலபட்ச சதுர்த்தசி திதி - சாயரட்சை 2-ம் காலம் சாமகாலம்.
4. புரட்டாசி-சுக்கிலபட்ச சதுர்த்தசி திதி - அர்த்த சாமம்
5. மார்கழி - திருவாதிரை - உஷக்காலம் (விடியல்)
6. மாசி - சுக்கிலபட்ச சதுர்த்தசி - காலசந்தி.

## ஒன்பது தீர்த்தங்கள்

1. கங்கை 2. யமுனை 3. கோதாவரி 4. நர்மதை 5. சரஸ்வதி 6. காவிரி 7. குமரி 8. பாலாறு 9. சரயு.

## பதினாறு பேறுகள்

1. புகழ் 2. கல்வி 3. வலிமை 4. வெற்றி 5. நன்மக்கள் 6. பொன் 7. நெல் 8. நல்லூழ் 9. நுகர்ச்சி 10. அறிவு 11. அழகு 12. நோயின்மை 13. வாழ்நாள் 14. பெருமை 15. இளமை 16. துணிவு.

## விரதங்கள்

**I விநாயகர் விரதம்**

1. சுக்கிரவார விரதம்
2. விநாயக சதுர்த்தி
3. விநாயக சஷ்டி விரதம்

**II. முருகர் விரதம்**

1. சுக்கிரவார விரதம்
2. கார்த்திகை விரதம்
3. கந்தசஷ்டி விரதம்

**III. அம்பிகை விரதம்**

1. சுக்கிரவார விரதம்
2. ஐப்பசி உத்திர விரதம்
3. நவராத்திரி விரதம்

**IV. சிவ விரதம்**

1. சோமவார விரதம்
2. திருவாதிரை விரதம்
3. உமாமகேசுவர விரதம்
4. சிவராத்திரி விரதம்
5. கேதார விரதம்
6. கலியாண சுந்தர விரதம்
7. சூல விரதம்
8. இடப விரதம்
9. பிரதோஷ விரதம்

திருமந்திரம் முதல் இதுவரை
– தொகுத்து வழங்கியவர்
A.L. கிருஷ்ணா (என்கிற) கிருஷ்ணமூர்த்தி



# கந்தர் அநுபூதி



## காப்பு

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்து உருகத்
தஞ்சத்து அருள் சண்முகனுக்கு இயல்சேர்
செஞ்சொல் புனை மாலை சிறந்திடவே
பஞ்சக்கர ஆனை பதம் பணிவாம்.

## நூல்

“ஆடும் பரி, வேல், அணிசேவல்” எனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்!
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனி யானை சகோதரனே.

உல்லாச, நிராகுல, யோக, இதச்
சல்லாப, விநோதனும் நீ அலையோ?
எல்லாம் அற, என்னை இழந்த நலம்
சொல்லாய், முருகா! சுரபூ பதியே!

வானோ? புனல் பார் கனல் மாருதமோ?
ஞானோதயமோ? நவில் நான் மறையோ?
யானோ? மனமோ? எனை ஆண்ட இடம்
தானோ? பொருளாவது சண்முகனே!

வளைபட்ட கை மாதொடு, மக்கள் எனும்
தளைபட்டு, அழியத் தகுமோ? தகுமோ?
கிளைபட்டு எழு சூர் உரமும், கிரியும்,
தொளைபட்டு உருவத் தொடு வேலவனே!

மக மாயை களைந்திட வல்ல பிரான்
முகம் ஆறும் மொழிந்து மொழிந்திலனே!
அகம், மாடை, மடந்தையர் என்று அயரும்
சக மாயையுள் நின்று தயங்குவதே!

திணியான மனோ சிலை மீது, உனதாள்!
அணியார் அரவிந்தம் அரும்பு மதோ?
“பணி யா?” என, வள்ளி பதம்பணியும்
தணியா அதிமோக! தயா பரனே!

கெடுவாய் மனனே! கதி கேள், கரவாது
இடுவாய், வடிவேல் இறைதாள் நினைவாய்;
சுடுவாய் நெடு வேதனை தூள்படவே;
விடுவாய் விடுவாய் வினை யாவையுமே.

அமரும் பதி, கேள் அகம் ஆம் எனும், இப்
பிமரம் கெட மெய்ப் பொருள் பேசியவா!
குமரன் கிரி ராச குமாரி மகன்,
சமரம் பொரு தானவ நாசகனே!

மட்டூர் குழல் மங்கையர் மையல் வலைப்
பட்டு, ஊசல்படும் பரிசு என்று ஒழிவேன்?
தட்டு ஊடு அற, வேல் சையிலத்து எறியும்
நிட்டூர, நிராகுல, நிர்ப்பயனே!

கார் மா மிசை காலன் வரில், கலபத்து
ஏர்மா மிசை வந்து, எதிரப் படுவாய்!
தார் மார்ப! வலாரி தலாரி எனும்!
சூர்மா மடியத் தொடு வேலவனே!

“கூகா” என என் கிளை கூடிஅழப்
போகா வகை, மெய்ப்பொருள் பேசியவா!
நாகாசல வேலவ! நாலுகவித்
தியாகா! சுரலோக சிகாமணியே!

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன், பிறவான் இறவான்,
“சும்மா இருசொல் அற” என்றலுமே,
அம்மா! பொருள் ஒன்றும் அறிந்திலனே.

“முருகன், தனிவேல் முனி, நம்குரு” என்று,
அருள்கொண்டு, அறியார் அறியும் தரமோ!
உருஅன்று, அருஅன்று, உளதுஅன்று, இலதுஅன்று,
இருள்அன்று, ஒளிஅன்று, என நின்றதுவே.

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று
உய்வாய், மனனே! ஒழிவாய் ஒழிவாய்,
மெய் வாய் விழி நாசியொடும் செவிஆம்
ஐவாய் வழி செல்லும் அவாவினையே.

“முருகன், குமரன், குகன்” என்று மொழிந்து
உருகும் செயல் தந்து, உணர்வு என்று அருள்வாய்?
பொரு புங்கவரும், புவியும், பரவும்
குருபுங்கவ! எண் குண பஞ்சரனே!

பேராசை எனும் பிணியில் பிணிபட்டு,
ஓரா வினையேன் உழலத் தகுமோ?
வீரா! முதுசூர் படவேல் எறியும்
சூரா! சுரலோக துரந்தரனே!

யாம் ஓதிய கல்வியும், எம் அறிவும்,
தாமே பெற, வேலவர் தந்ததனால்,
பூமேல் மயல்போய், அற, மெய்ப் புணர்வீர்!
நாமேல் நடவீர் நடவீர் இனியே.

உதியா, மரியா, உணரா, மறவா,
விதிமால், அறியா, விமலன் புதல்வா!
அதிகா! அநகா! அபயா! அமரா
பதி காவல! சூர பயங்கரனே!

வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும் குலமும் குடிபோகியவா!
அடி அந்தம் இலா அயில் வேல் அரசே!
மிடி என்று ஒரு பாவி வெளிப் படினே.

அரிதாகிய மெய்ப் பொருளுக்கு அடியேன்
உரிதா உபதேசம் உணர்த்தியவா!
விரிதாரண! விக்ரம வேள்! இமையோர்
புரிதாரக! நாக புரந்தரனே!

கருதா மறவா நெறிகாண, எனக்கு
இருதாள் வனசம் தர என்று இசைவாய்?
வரதா! முருகா! மயில் வாகனனே!
விரதா! சுர சூர விபாடணனே!

காளைக் குமரேசன் எனக் கருதித்,
தாளைப் பணியத் தவம் எய்தியவா!
பாளைக் குழல் வள்ளி பதம் பணியும்
வேளைச் சுர பூபதி, மேருவையே!

அடியைக் குறியாது, அறியாமையினால்
முடியக் கெடவோ? முறையோ! முறையோ!
வடி விக்ரம வேல் மகிபா! குறமின்
கொடியைப் புணரும் குண பூதரனே!

கூர்வேல் விழி மங்கையர் கொங்கையிலே
சேர்வேன், அருள் சேரவும் எண்ணுமதோ!
சூர் வேரொடு குன்று தொளைத்த, நெடும்
போர் வேல! புரந்தர பூபதியே!

மெய்யே என வெவ்வினை வாழ்வை உகந்து
ஐயோ! அடியேன் அலையத் தகுமோ?
கையோ, அயிலோ, கழலோ, முழுதும்
செய்யோய்! மயில் ஏறிய சேவகனே!

ஆதாரம் இலேன், அருளைப் பெறவே
நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே!
வேதாகம ஞான வினோத! மனஅ
தீதா! சுரலோக சிகாமணியே!

மின்னே நிகர் வாழ்வை விரும்பிய யான்,
என்னே! விதியின் பயன் இங்கு இதுவோ?
பொன்னே! மணியே! பொருளே! அருளே!
மன்னே! மயில் ஏறிய வானவனே!

ஆனா அமுதே! அயில்வேல் அரசே!
ஞானா கரனே! நவிலத் தகுமோ?
யான் ஆகிய என்னை விழுங்கி, வெறும்
தானாய் நிலை நின்றது, தற்பரமே!

இல்லே எனும் மாயையில் இட்டனை நீ,
பொல்லேன் அறியாமை பொறுத்திலையே,
மல்லே புரிபன்னிரு வாகுவில், என்
சொல்லே புனையும் சுடர் வேலவனே!

செவ்வான் உருவில் திகழ் வேலவன், அன்று
ஒவ்வாதது என உணர்வித் ததுதான்,
அவ்வாறு அறிவார் அறிகின்றது அலால்,
எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பதுவே

"பாழ்வாழ்வு எனும் இப் படுமாயையிலே
வீழ்வாய்" என, என்னை விதித்தனையே!
தாழ்வானவை செய்தன தாம் உளவோ?
வாழ்வாய் இனிநீ மயில் வாகனனே!

கலையே பதறிக் கதறித், தலையூடு
அலையே படுமாறு, அதுவாய் விடவோ?
கொலையே புரி வேடர் குலப் பிடிதோய்
மலையே! மலைகூறிடு வகையனே.

சிந்தாகுல இல்லோடு, செல்வம் எனும்
விந்தாடவி, என்று விடப் பெறுவேன்?
மந்தாகினி தந்த வரோதயனே!
கந்தா! முருகா! கருணாகரனே!

சிங்கார மடந்தையர் தீநெறி போய்
மங்காமல், எனக்கு வரம் தருவாய்;
சிங்க்ராம சிகாவல! சண்முகனே!
கங்காநதி பால! கிருபாகரனே!

விதிகாணும் உடம்பை விடா வினையேன்,
கதிகாண, மலர்க் கழல் என்று அருள்வாய்?
மதிவாள் நுதல் வள்ளியை அல்லது, பின்
துதியா விரதா! சுரபூ பதியே!

"நாதா! குமரா! நம!" என்று, அரனார்
"ஓதாய்" என, ஓதியது எப்பொருள்தான்?
வேதா முதல் விண்ணவர் சூடும் மலர்ப்
பாதா! குறமின் பத சேகரனே!

"கிரிவாய் விடு விக்ரம வேல் இறையோன்
பரிவாரம்" எனும் பதமே வலையே
புரிவாய் மனனே! பொறையாம் அறிவால்
அரிவாய், அடியோடும் அகந்தையையே.

ஆதாளியை, ஒன்று அறியேனை, அறத்
தீது ஆளியை, ஆண்டது செப்புமதோ!
கூதாள கிராத குலிக்கு இறைவா!
வேதாள கணம் புகழ் வேலவனே!

மாஏழ் சனனம் கெட, மாயை விடா,
மூ ஏடணை என்று முடிந்திடுமோ!
கோவே! குறமின் கொடிதோள் புணரும்
தேவே! சிவசங்கர தேசிகனே!

வினைஓட விடும் கதிர்வேல் மறவேன்,
மனையோடு தியங்கி மயங்கிடவோ!
சுனையோடு அருவித் துறையோடு, பசுந்
தினையோடு, இதணோடு திரிந்தவனே!

சாகாது, எனையே சரணங்களிலே
கா கா, நமனார் கலகம் செயும் நாள்,
வாகா! முருகா! மயில் வாகனனே!
யோகா! சிவஞான உபதேசிகனே!

குறியைக், குறியாது குறித்து அறியும்
நெறியைத், தனிவேலை நிகழ்த்திடலும்,
செறிவு அற்று, உலகோடு, உரை, சிந்தையும் அற்று,
அறிவு அற்று, அறியாமையும் அற்றதுவே.

தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா! முருகா! நினது அன்பு அருளால்,
ஆசா நிகளம் துகளாயின பின்,
பேசா அநுபூதி பிறந்ததுவே.

சாடும் தனிவேல் முருகன் சரணம்,
சூடும்படி தந்தது சொல்லுமதோ?
வீடும், சுரர் மாமுடி, வேதமும், வெம்
காடும், புனமும் கமழும் கழலே.

கரவாகிய கல்வி உளார் கடைசென்று,
இரவா வகை, மெய்ப்பொருள் ஈகுவையோ?
குரவா! குமரா! குலிசாயுத! குஞ்
சரவா! சிவயோக தயாபரனே.

எந்தாயும், எனக்கு அருள் தந்தையும் நீ,
சிந்தாகுலம் ஆனவை தீர்த்து எனையாள்,
கந்தா! கதிர் வேலவனே! உமையாள்!
மைந்தா குமரா! மறை நாயகனே!

ஆறு ஆறையும் நீத்து, அதன்மேல் நிலையைப்
பேறா அடியேன், பெறுமாறு உளதோ?
சீறா வருசூர் சிதைவித்து, இமையோர்
கூறா, உலகம் குளிர்வித்தவனே!

அறிவு ஒன்று அற நின்று, அறிவார் அறிவில்
பிறிவு ஒன்று அற நின்ற, பிரான் அலையோ?
செறிவு ஒன்று அற வந்து, இருளே சிதைய,
வெறி வென்றவரோடு உறும் வேலவனே!

தன்னந் தனி நின்றது, தான் அறிய
இன்னம் ஒருவர்க்கு இசைவிப் பதுவோ?
மின்னும் கதிர்வேல் விகிர்தா! நினைவார்
கின்னம் களையும் கிருபை சூழ் சுடரே!

மதி கெட்டு, அற வாடி, மயங்கி, அறக்
கதி கெட்டு, அவமே கெடவோ கடவேன்?
நதி புத்திர! ஞான சுகாதிப! அத்
திதி புத்திரர் வீறு அடு சேவகனே!

உருவாய் அருவாய், உளதாய் இலதாய்,
மருவாய் மலராய், மணியாய், ஒளியாய்க்,
கருவாய் உயிராய்க், கதியாய் விதியாய்,
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

---

சரியாகச் செய்யாத செயலுக்காக வருத்தப்பட்டு என்னை அணுகினால் நான் ஒருபோதும் மன்னிக்கமாட்டேன். சரியாகத் திறமையாகச் செய்து முடித்து விட்டால் ஒருபோதும் பாராட்டத் தவறமாட்டேன்.

– சவகர்லால் நேரு

மெதுவாகப் பேசு, அது உன் இரகசியங்களைப் பாதுகாக்கும். நல்ல எண்ணத்தோடு இரு, அது உன் நடத்தையைப் பாதுகாக்கும்.

– வள்ளலார்

# கந்தர் அலங்காரம்



நாளென் செயும்வினை தானென்
 செயும்எனை நாடிவந்த
கோளென் செயும்கொடுங் கூற்(று)என்
 செயும்கும ரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
 தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்
 னேவந்து தோன்றிடினே.

சேல்பட்(டு) அழிந்தது செந்தூர்
 வயல்பொழில் தேங்கடம்பின்
மால்பட்(டு) அழிந்தது பூங்கொடி
 யார்மனம் மாமயிலோன்
வேல்பட்(டு) அழிந்தது வேலையும்
 சூரனும் வெற்புமவன்
கால்பட்(டு) அழிந்ததுஇங்(கு) என்தலை
 மேல்அயன் கையெழுத்தே.

பத்தித் திருமுகம் ஆறுடன்
 பன்னிரு தோள்களுமாய்த்
தித்திக் திருக்கும் அமுதுகண்
 டேன் செயல் மாண்(டு) அடங்கப்
புத்திக் கமலத்(து) உருகிப்
 பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரைபுர ளும்பர
 மானந்த சாகரத்தே

ஆலுக்(கு) அணிகலம் வெண்டலை
 மாலை அகிலம் உண்ட
மாலுக்(கு) அணிகலம் தண்ணந்
 துழாய்மயில் ஏறும்ஐயன்
காலுக்(கு) அணிகலம் வானோர்
 முடியும் கடம்பும்கையில்
வேலுக்(கு) அணிகலம் வேலையும்
 சூரனும் மேருவுமே.

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப்
 பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு
 நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு
 தோளும், பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங்
 கோடன் மயூரமுமே

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
 வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
 தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
 கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவா
 தவர்க்கொரு தாழ்வில்லையே.

கோடாத வேதனுக்(கு) யான்செய்த
 குற்றம்என் ? குன்றெறிந்த
தாடாள னே! தென் தணிகைக்
 குமர!நின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத
 கண்ணும் தொழாதகையும்
பாடாத நாவும் எனக்கே
 தெரிந்து படைத்தனனே!

மைவரும் கண்டத்தர் மைந்த! கந்
 தாஎன்று வாழ்த்துமிந்தக்
கைவரும் தொண்டன்றி மற்(று) அறி
 யேன்கற்ற கல்வியும்போய்ப்
பைவரும் கேளும் பதியும்
 கதறப் பழகிநிற்கும்
ஐவரும் கைவிட்டு மெய்விடும்
 போதுன் அடைக்கலமே

மாலோன் மருகனை மன்றாடி
 மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான
 தெய்வத்தை மேதினியில்
சேலார் வயல்பொழில் செங்கோ
 டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில
 னேயந்த நான்முகனே.

தடக்கொற்ற வேள்மயி லேயிடர்
தீரத் தனிவிடில்நீ
வடக்கிற் கிரிக்கப் புறத்துநின்
தோகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்தும் கதிர்க்கப்
புறத்தும் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்தும் திசைக்கப்
புறத்தும் திரிகுவையே.

சேலில் திகழ்வயல் செங்கோடை
வெற்பன் செழுங்கலபி
ஆலித்(து) அநந்தன் பணாமுடி
தாக்க அதிர்ந்ததிர்ந்து
காலில் கிடப்பன மாணிக்க
ராசியும் காசினியைப்
பாலிக்கும் மாயனும் சக்ரா
யுதமும் பணிலமுமே.

திருவடி யும், தண்டை யும், சிலம்
பும், சிலம்(பு) ஊடுருவப்
பொருவடி வேலும், கடம்பும்,
தடம்புயம் ஆறிரண்டும்,
மருவடி வான வதனங்கள்
ஆறும், மலர்க்கண்களும்
குருவடி வாய்வந்தென் உள்ளம்
குளிரக் குதிகொண்டவே

செங்கேழ் அடுத்த சினவடி
வேலும் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு
தோளும் பதுமமலர்

கொங்கே தரளம் சொரியும்செங்
கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கேயென்
முன்வந்(து) எதிர்நிற்பனே

ஆவிக்கு மோசம் வருமா(று)
அறிந்துன் அருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றி
லேன்வினை தீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழும்
திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே!
அமர சிகாமணியே!

கொள்ளித் தலையில் எறும்பது
போலக் குலையுமென்றன்
உள்ளத் துயரை யொழித்தரு
ளாய்ஒரு கோடிமுத்தம்
தெள்ளிக் கொழிக்கும் கடற்செந்தில்
மேவிய சேவகனே!
வள்ளிக்கு வாய்த்தவனே! மயில்
ஏறிய மாணிக்கமே!

சலம்காணும் வேந்தர் தமக்கும்அஞ்
சார்யமன் சண்டைக்(கு) அஞ்சார்
துலங்கா நரகக் குழிஅணு
கார்; துட்ட நோயணுகார்;
கலங்கார் புலிக்கும் கரடிக்கும்
யானைக்கும்; கந்தன்நன்னூல்
அலங்காரம் நூற்றுள் ஒருகவி
தான்கற்(று) அறிந்தவரே.

---

செயலை விதையுங்கள், பழக்கம் உண்டாகும்.
பழக்கத்தை விதையுங்கள், பண்பு உருவாகும்.
பண்பை விதையுங்கள், உங்கள் எதிர்காலம் உருவாகும்.



நல்லதையே நினைக்க அருள வேண்டும்
நல்லதையே பார்க்க அருள வேண்டும்
நல்லதையே கேட்க அருள வேண்டும்
நல்லதையே பேச அருள வேண்டும்
நல்லதையே செய்ய அருள வேண்டும்
நல்லதையே நடக்க அருள வேண்டும்
நல்லதையே நடத்தி வைக்க அருள வேண்டும்
நல்லதையே படிக்க அருள வேண்டும்



# கந்தர் சஷ்டிக் கவசம்



காப்பு

நேரிசை வெண்பா

துதிப்போர்க்கு வல்வினைப்போம்,
துன்பம்போம்; நெஞ்சில்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக்
கதித்து ஓங்கும்;
நிஷ்டையுங் கைகூடும்; நிமலர் அருள் கந்தர்
சஷ்டி கவசந் தனை.

குறள் வெண்பா

அமரர் இடர் தீர அமரம் புரிந்த
குமரன் அடி, நெஞ்சே குறி.

நூல்

நிலை மண்டில் ஆசிரியப்பா

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்,
சிஷ்டருக்கு உதவும் செங்கதிர் வேலோன்
பாதம் இரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாட, கிண் கிணியாட
மையல் நடஞ்செயும் மயில் வாகனனார்
கையில் வேலால் எனைக்காக்க என்று உவந்து
வரவர வேலா யுதனார் வருக!
வருக! வருக! மயிலோன் வருக!
இந்திரன் முதலா என்திசை போற்ற
மந்திர வடிவேல் வருக! வருக!
வாசவன் மருகா! வருக! வருக!
நேசக் குறமகள் நினைவோன்! வருக!
ஆறுமுகம் படைத்த ஐயா வருக!
நீறு இடும் வேலவன் நித்தம் வருக!
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக!
சரவண பவனார் சடுதியில் வருக!
ரவண பவச, ரரரர ரரர
ரிவண பவச, ரிரிரிரி ரிரிரி
விணபவ சரவண, வீரா நமோ நம!
நிபவ சரவண நிறநிற நிறென
வசர கணப வருக வருக!
அசுரர் குடிகெடுத்த ஐயா! வருக!
என்னை ஆளும் இளையோன் கையில்
பன்னிரண்டு ஆயுதம் பாச அங்குசமும்
பரந்த விழிகள் பன்னிரண்டு இலங்க
விரைந்து எனைக் காக்க வேலோன் வருக!
ஐயும் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும், உயர்ஐயுங் கிலியும்,
கிலியுஞ் சௌவும், கிளரொளிஐயும்
நிலைபெற்று என்முன் நித்தமும் ஒளிரும்
சண்முகன் தீயும் தனிஒளி யொவ்வும்
குண்டாலியாம் சிவகுகன், தினம் வருக!
ஆறுமுகமும், அணிமுடி ஆறும்
நீறுஇடு நெற்றியும் நீண்ட புருவமும்,
பன்னிரு கண்ணும், பவளச் செவ்வாயும்
நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகு குண்டலமும்
ஆறு இரு திண்புயத்து அழகிய மார்பில்
பல்பூஷணமும், பதக்கமும் தரித்து
நன்மணிபூண்ட நவரத்ன மாலையும்
முப்புரி நூலும், முத்து அணி மார்பும்
செப்பு அழகு அடைய திருவயிறு உந்தியும்,
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நல்சீ ராவும்,
இருதொடை அழகும், இணை முழந் தாளும்,
திருவடியதனில் சிலம் பொலி முழங்க
செககண செககண செககண செகண
மொக மொக மொக மொக மொக மொக மொகன
நகநக நகநக நகநக நகனெ
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண
ரரரர ரரரர, ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி, ரிரிரிரி ரிரிரி
டுடுடுடு டுடுடுடு டுடுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து; மயிலோன் விந்து
முந்து முந்து முருகவேள் முந்து
என்றனை ஆளும் ஏரகச் செல்வ!
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந்து உதவும்;
லாலா லாலா லாலா வேசமும்

லீலா லீலா லீலா விநோதன் என்று,
உன்திரு வடியை உறுதியென்று எண்ணும்
என் தலை வைத்து உன் இணையடி காக்க!
என் உயிர்க்கு உயிராம் இறைவன் காக்க!
பன்னிரு விழியால் பாலனைக்காக்க!
அடியேன் வதனம் அழகுவேல் காக்க!
பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க!
கதிர்வேல் இரண்டும் கண்ணினைக் காக்க!
விதிசெவி இரண்டும் வேலவர் காக்க!
நாசிகள் இரண்டும் நல்வேல் காக்க!
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க!
முப்பத்து இருபல் முனைவேல் காக்க!
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க!
கன்னம் இரண்டும் கதிர்வேல் காக்க!
என் இளங் கழுத்தை இனியவேல் காக்க!
மார்பை இரத்ன வடிவேல் காக்க!
சேர் இள முலைமார் திருவேல் காக்க!
வடிவேல் இருதோள் வளம்பெறக் காக்க!
பிடரிகள் இரண்டும் பெருவேல் காக்க!
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க!
பழு பதினாறும் பருவேல் காக்க!
வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க!
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க!
நாண்ஆம் கயிற்றை நல்வேல் காக்க!
ஆண் குறி இரண்டும் அயில்வேல் காக்க!
பிட்டம் இரண்டும் பெருவேல் காக்க!
வட்டக் குதத்தை வடிவேல் காக்க!
பணைத்தொடை இரண்டும் பருவேல் காக்க!
கணைக்கால், முழங்கால் கதிர்வேல் காக்க!
ஐவிரல் அடியினை அருள்வேல் காக்க!
கைகள் இரண்டும் கருணைவேல் காக்க!
முன்கை இரண்டும் முரண்வேல் காக்க!
பின்கை இரண்டும் பின்னவள் இருக்க
நாவில், சரஸ்வதி நல் துணையாக,
நாபிக் கமலம், நல்வேல் காக்க!
முப்பால் நாடியை முனைவேல் காக்க!
எப்பொழுதும் எனை எதிர்வேல் காக்க!
அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து, கனகவேல் காக்க!
வரும்பகல் தன்னில் வச்ரவேல் காக்க!
அரை இருள் தன்னில் அனையவேல் காக்க!
ஏமத்தில், சாமத்தில், எதிர்வேல் காக்க!
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க!
காக்க காக்க கனகவேல் காக்க!
நோக்க நோக்க நொடியில் நோக்க
தாக்க தாக்கத் தடையறத் தாக்க
பார்க்கப் பார்க்கப் பாவம் பொடிபட,
பில்லி சூனியம் பெரும்பகை அகல,
வல்ல பூதம், வலாட்டிகப் பேய்கள்
அல்லல் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழக்கடை முனியும்
கொள்ளிவாய்ப் பேய்களும்,
குறளைப்பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரம்ம ராட்சதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசி காட்டேரி இத்துன்ப சேனையும்
எல்லினும், இருட்டினும், எதிர்ப்படும் அண்ணரும்
கனபூசை கொள்ளும் காளியோடு அனைவரும்
விட்டாங் காரரும், மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும், சண்டாளர்களும்
என் பெயர் சொலவும் இடிவிழுந்து ஓடிட,
ஆனை அடியினில், அரும்பாவைகளும்,
பூனை மயிரும் பிள்ளைகள் என்பும்,
நகமும், மயிரும் நீள் முடி மண்டையும்,
பாவைகள் உடனே, பல கல சத்துடன்
மனையில் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டியச் செருக்கும் ஒட்டியப் பாவையும்,
காசும், பணமும், காவுடன் சோறும்,
ஓதும் அஞ்சனமும், ஒருவழிப்போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றான் வஞ்சகர் வந்து வணங்கிட,
கால தூதர் எனைக் கண்டால் கலங்கிட,
அஞ்சி நடுங்கிட, அரண்டு புரண்டிட,
வாய்விட்டு அலறி, மதிகெட்டு ஓட,
படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுடன் அங்கம் கதறிடக் கட்டு!
கட்டி உருட்டு கை கால், முறிய
கட்டு கட்டு, கதறிடக் கட்டு!
முட்டு முட்டு முழிகள் பிதுங்க;
செக்கு செக்குச் செதில் செதிலாக;
சொக்கு சொக்குச் சூர்ப்பகைச் சொக்கு;
குத்து குத்து கூர்வடி வேலால்;
பற்று பற்று பகலவன் தணல்எரி;
தணல்எரி தணல்எரி தணல் அது ஆக;
விடுவிடு வேலை, வெருண்டது ஓட:
புலியும் நரியும், புன் நரி நாயும்
எலியும் கரடியும், இனித் தொடர்ந்து ஓடத்
தேளும், பாம்பும், செய்யான் பூரான்,
கடிவிட விஷங்கள் கடித்து உயர் அங்கம்
ஏறிய விஷயங்கள் எளிதுடன் இறங்க

ஒளிப்பும் சுளுக்கும், ஒருதலை நோயும்
வாதம் சயித்தியம் வலிப்புப் பித்தம்
சூலை சயம் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல் விப்புருதி
பக்கப்பிளவை, படர் தொடை வாழை
கடுவன், படுவன், கைத்தாள் சிலந்தி,
பற்குத்து, அரணை, பரு அரையாப்பும்,
எல்லாப் பிணியும், என்றனைக் கண்டால்
நில்லாது ஓட, நீ எனக்கு அருள்வாய்!
ஈரேழ் உலகமும், எனக்கு உறவாக
ஆணும் பெண்ணும் அனைவரும் எனக்கா
மண்ணாள் அரசரும் மகிழ்ந்து உறவாகவும்,
உன்னைத் துதிக்க, உன் திருநாமம்
சரவண பவனே! சைலொளி பவனே!
திரிபுர பவனே! திகழொளி பவனே!
பரிபுர பவனே! பவம் ஒளி பவனே!
அரிதிரு மருகா! அமரா பதியைக்
காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்
கந்தா! குகனே! கதிர் வேலவனே!
கார்த்திகை மைந்தா! கடம்பா! கடம்பனை,
இடும்பனை அழித்த இனியவேல் முருகா!
தணிகாசலனே! சங்கரன் புதல்வா!
கதிர் காமத்து உறை கதிர்வேல் முருகா!
பழநிப் பதிவாழ் பலகுமாரா!
ஆவினன் குடி வாழ் அழகிய வேலா!
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா
சமரா புரிவாழ் சண்முகத்து அரசே!
காரார் குழலாள் கலைமகள் நன்றாய்
என்நா இருக்க, யான் உனைப்பாட,
என்னைத் தொடர்ந்திருக்கும் எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன், பரவசம் ஆக;
ஆடினேன் நாடினேன்; ஆவினன் பூதியை
நேசமுடன் யான் நெற்றியில் அணியப்
பாசவினைகள் பற்றது நீங்கி,
உன்பதம் பெறவே, உன் அருள் ஆக
அன்புடன் இரட்சி; அன்னமும் சொர்ணமும்
மெத்த மெத்தாக, வேலாயுதனார்
சித்திபெற்று அடியேன் சிறப்புடன் வாழ்க!
வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க!
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க!
வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க!
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்
வாழ்க வாழ்க வாரணத் துவசம்!
வாழ்க வாழ்க என் வறுமைகள் நீங்க
எத்தனை குறைகள், எத்தனை பிழைகள்,
எத்தனை அடியேன் எத்தனை செயினும்
பெற்றவன் நீகுரு பொறுப்பது உன் கடன்;
பெற்றவள் குறமகள், பெற்றவளாமே;
பிள்ளையென்ற ன்பாய்ப் பிரியம் அளித்து,
மைந்தன் என் மீது உன் மனம் மகிழ்ந்தருளித்
தஞ்சமென்றே அடியார் தழைத்திட அருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய
பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில் கருத்துடன் நாளும்
ஆசாரத்துடன் அங்கந் துலக்கி,
நேசமுடன் ஒரு நினைவது ஆகி,
கந்தர் சஷ்டி கவசம் இதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பது ஆறு உருக் கொண்டு,
ஓதியே செபித்து உகந்து நீறு அணிய
அஷ்டதிக்குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்னர் எண்மர் செயலது அருளுவர்;
மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்;
நவகோள் மகிழ்ந்து நன்மை அளித்திடும்;
நவமதன் எனவும் நல்எழில் பெறுவர்;
எந்த நாளும் ஈரெட்டாய் வாழ்வர்;
கந்தர்கை வேலாம் கவசத்து அடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்;
விழியால் காணவெருண்டிடும் பேய்கள்;
பொல்லா தவரைப் பொடிப் பொடி யாக்கும்;
நல்லோர் நினைவில் நடனம் புரியும்;
சர்வ சத்துரு சங்க ரத்து அடி
அறிந்தெனது உள்ளம், அஷ்டலஷ்மிகளில்
வீர லட்சுமிக்கு விருந்து உணவு ஆகச்
சூரபத்மாவைத் துணிந்தகை யதனால்,
இருபத் தெழுவர்க்கு உவந்து அமுது அளித்த
குருபரன், பழநிக் குன்றில் இருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி!
எனைத் தடுத்தாட்கொள, என்றனது உள்ளம்
மேவிய வடிவுறும் வேலவா போற்றி!
தேவர்கள் சேனா பதியே போற்றி!
குறமகள் மனமகிழ் கோவே போற்றி!
திறமிகு திவ்விய தேகா போற்றி!
இடும்பா யுதனே, இடும்பா போற்றி!
கடம்பா போற்றி கந்தா போற்றி!
வெட்சிபுனையும் வேலே போற்றி!
உயர்கிரி கனக சபைக்கு ஓர் அரசே!
மயில் நடனம் இடுவோய் மலரடி சரணம்;
சரணம் சரணம் சரவண பவஓம்,
சரணம் சரணம் சண்முகா சரணம்!

# ஐயப்பன் த்யானம்
## சாஸ்தா பஞ்சரத்னம்



1. லோக வீரம் மஹாபூஜ்யம் சர்வ ரக்ஷா கரம் விபும்
பார்வதீ ஹ்ருதயானந்தம் சாஸ்தாரம்
ப்ரணமாம்யஹம்

2. விப்ரபூஜ்யம் விச்வவந்த்யம் விஷ்ணு சம்போ
ப்ரியம் ஸுதம்
க்ஷிப்ரப்ரஸாத நிரதம் சாஸ்தாரம் ப்ரணமாம்யஹம்

3. மத்த மாதங்க கமனம் காருண்யாம்ருத பூரிதம்
ஸர்வவிக்ன ஹரம்தேவம் சாஸ்தாரம்
ப்ரணமாம்யஹம்

4. அஸ்மத் குலேச்வரம் தேவம் அஸ்மத் சத்ரு
விநாஸனம்
அஸ்மதிஷ்ட ப்ரதாதாரம் சாஸ்தாரம்
ப்ரணமாம்யஹம்

5. பாண்ட்யேச வம்சதிலகம் கேரளே கேளி
விக்ரஹம்
ஆர்த்தத்ராண பரம்தேவம் சாஸ்தாரம்
ப்ரணமாம்யஹம்

*(நூல் பயன்)*

பஞ்சரத்னாக்ய மேதத்யே நித்யம் சுத்த
படேன்னராஹ
தஸ்ய ப்ரஸன்னோ பகவான் சாஸ்தா வஸதி
மானஸே|

# நமஸ்கார ஸ்லோகங்கள்

**(ஒவ்வொரு ஸ்லோகத்தின் முடிவிலும் "ஸ்வாமியே சரணம் ஐயப்பா" என்று சொல்லி நமஸ்காரம் செய்ய வேண்டும்)**

1. அருணோதய ஸங்காசம்நில குண்டல தாரிணம்
நீலாம்பரதரம் தேவம் வந்தேஹம் ப்ரஹ்ம நந்தனம்

2. சாப பாணம் வாம ஹஸ்தே ரௌப்ய
வேத்ரஞ்சதக்ஷிணே
விலஸத் குண்டலதரம் வந்தேஹம் விஷ்ணு
நந்தனம்

3. வ்யாக்ராரூடம் ரக்த நேத்ரம் ஸ்வர்ணமாலா
விபூஷணம்
வீரபட்டதரம் கோரம் வந்தேஹம் சம்புநந்தனம்

4. கிங்கிண் யொட்யாண பூஷேஷம் பூர்ண சந்த்ர
நிபானனம்
கிராத ரூப சாஸ்தாரம் வந்தேஹம் பாண்ட்ய
நந்தனம்

5. பூத வேதாள சம்சேவ்யம் காஞ்சனாத்ரி
நிவாஸினம்
மணிகண்ட மிதிக்யாதம் வந்தேஹம் சக்திநந்தனம்

6. யஸ்யதன் வந்தரிர் மாதா பிதா ருத்ரோ பிஷக்தம:
தம்சாஸ்தாரம் அஹம் வந்தே மஹாவைத்யம்
தயாநிதிம்

7. த்ரயம்பக புராதீசம் கணாதிப சமன்விதம்
கஜாரூடம் அஹம்வந்தே சாஸ்தாரம் குலதைவதம்

8. பூதநாத சதாநந்த சர்வபூத தயாபரா
ரக்ஷரக்ஷ மஹா பாஹோ சாஸ்த்ரே துப்யம் நமோ
நம:

9. சிவவீர்ய ஸமுத்பூதம் ஸ்ரீனிவாச தனூத்பவ
சிகிவா ஹானுஜம் வந்தே சாஸ்தாரம்
ப்ரணமாம்யஹம்

10. ஸக்ஷாத் ஸ்வயம் மாதா பிதா யஸ்ய மஹேஸ்வர
தம்வந்தே சர்வபூ தேஷம் சாஸ்தாரம் கருணாநிதிம்

11. த்விஹஸ்தம் பத்ம ஸம்ஸ்தம்ச ஸுக்லயக்ஞோப
வீதினம்
பூர்ணயா புஷ்களா தேவ்யாயுக்தம்
சாஸ்தாரமாச்ரயே

# ஸ்லோகங்கள்

1. தேஜோ மண்டல மத்யகம் த்ரிநயனம் திவ்யாம் பராலங்க்ருதம்
தேவம் புஷ்ப சரேக்ஷுகார்முக விலசத் மாணிக்ய பாத்ராபயம்
விப்ராணம் கரபங்கஜை: மதகஜ ஸ்கந்தாதி ரூடம் விபும்
சாஸ்தாரம் சரணம் பஜாமி ஸததம் த்ரைலோக்ய ஸம்மோஹனம்

2. ஸ்ரீபுதநாதம் த்ருதசாபபாணம் சாபார்த்திவம் சங்கரவிஷ்ணுஸூனும்
காருண்ய மூர்த்திம் கஜவாகனம் தம் சாஸ்தார மீடே
சகலார்த்த ஸித்யை ஸ்ரீ ஹரிஹர புத்ராய
தர்மசாஸ்த்ரே கலியுக வரதாய நமோநம:

3. த்ருஷ்ட்வய மாயாஸ்வரூபம் சிவஹ்ருதயஹரம் பஸ்ம தைதேயசத்ரும்
விஷ்ணும் தேவோ மஹோஸோ மதன பரவாசத்தாப சம்போகமஸ்மாத்
ஜாதம் லோகோபகாரே ஹரிஹர தனயம் தன்வினம் பாணஹஸ்தம்
வந்தே பூதாதி நாதம் சகல ரிபுஹரம் சூர்ய கோடி ப்ரகாசம்

4. ஆச்யாம கோமள விசாலதனும் விசித்ர
வாஸோ வசான மருணோத்பல தாமஹஸ்தம்
உத்துங்க ரத்ன மகுடம் குடிலாக்ரகேசம்
சாஸ்தார மிஷ்டவரதம் சரணம் ப்ரபத்யேப

5. ஆரூட: ப்ரௌட வேக ப்ரவிஜித பவனம் துங்க துங்கம் துரங்கம்
சேலம் நீலம் வஸான: கரதல விலசத் சண்ட கோதண்ட தண்ட
ராகத்வேஷாதி நானாவித ம்ருக படலீ பீதிக்ருத் பூத பர்தா
குர்வன் ஆகேட லீலாம்பரி வஸ்து மனஸ;
கானனே மாமகீயே

6. கல்ஹாரோஜ்வல நீல குந்தளபரம் களாம்பு தச்யாமம்
கற்பூரா கலிதாபி ராமவபுஷம் காந்தேந்து பிம்பானனம்
ஸ்ரீதண்டாங்குச பாசசூல விலஸத் பாணிம் மதாந்தத்விபாரூடம்
சத்ரு விமர்த்தன ம்ஹ்ருதி மஹாசாஸ்தார மாத்யம் பஜே

7. அகில புவனதீபம் பக்த சித்தாப்ஜஸீரம்
ஸுரகண பரிஸேவ்யம் தத்வமஸ்யாதி லக்ஷ்யம்
ஹரிஹர ஸுதமீசம் தாரக ப்ரும்ம ரூபம்
சபரிகிரி நிவாசம் பாவயேஸ்ரீ பூதநாதம்

---

# ஸ்ரீ தர்மசாஸ்தா புஜங்கம்

ஸ்ரீதானந்த சிந்தாமணி நிவாஸம்
ஸதா ஸச்சிதானந்த பூர்ணப்ரகாசம்
உதாரம் ஸதாரம் ஸுராதாரமீசம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்.

விபும் வேதவேதாந்த வேத்யம் வரிஷ்டம்
விபூதிப்ரதம் விச்ருதம ப்ரம்மநிஷ்டம்
விபாஸ்வல் ப்ரபாதப்ரபம் புஷ்கலேஷ்டம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்.

பரிவிராணதக்ஷம் பரப்ரஹ்ம ஸூத்ரம்
ஸ்புரச்சாருகாத்ரம் பவத்வாந்தமித்ரம்
பரம் ப்ரேமபாத்ரம் பவித்ரம் விசித்ரம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்

பரேசம் ப்ரபும் பூர்ணகாருண்யரூபம்
கிரிசாதி பீடோஜ்வல சாருதீபம்
ஸுரேசாதி ஸம்ஸேவிதம் ஸுப்ரதாபம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்.

குரும்பூர்ண லாவண்ய பாதாதிகேசம்
கரீயம்மஹத் கோடி ஸூர்யப்ரகாசம்
கரோம்போருஹன் யஸ்தவேத்ரம் ஸுரேசம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்.

ஹரீசான ஸம்யுக்த சக்த்யைகவீரம்
கிராதாவதாரம் க்ருபாபாங்கபூரம்
கிரீடாவதம்ஸோஜ்வலத் பிஞ்சபாரம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்.

மஹாயோக பீடோஜ்வலந்தம் மஹாந்தம்
மஹாவாக்யஸாரோபதேசம் ஸுசந்தம்
மஹர்ஷிம் ப்ரஹர்ஷப்ரதம் ஞானகாந்தம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்.

மஹாரண்ய மன்பான ஸாந்தர் நிவாஸா
ஹங்கார துர்வார ஹிமஸ்ராதி ம்ருகாதீன்
நிஹம்தம் கிராதாவதாரம் சாந்தம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்.

ப்ருதிவ்யாதி பூத ப்ரபஞ்சந்தாஸகம்
ப்ருதக் பூதசைதன்ய ஜன்யம் ப்ரசஸ்தம்
ப்ரமதானம் ப்ரமாணம் புராணப்ரஸித்தம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்

ஜகஜ்ஜீவனம் பாவனம் பாவனீயம்
ஜகத்வாபகம் தீபகம் மோஹனீயம்
ஸுகாதார மாதாரபூதம் துரீயம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்

இஹாமுத்ரஸல் ஸௌக்ய ஸம்பந்நிதானம்
மஹத்யோனிமவ்யா ஹதாத்மாபிதானம்
தஹர்புண்டரீகாயணம் தீப்யமானம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்.

த்ரிகாலஸ்திதம் ஸுஸ்திரம் ஞானஸம்ஸ்தம்
த்ரிதாமாத்ரி மூர்த்யாத்மகம் ப்ரஹ்ம ஸம்ஸ்தம்
த்ரயீமூர்த்திமார்த்திச்சிதம் சக்தியுக்தம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்

இடா பிங்கலா: ஸுஷும்னா லிசந்தம்
ஸ்புடம் ப்ரஹ்ம ரந்த்ர ஸ்வதந்த்ரம் ஸுசாந்தம்
த்ருடம் நித்ய நிர்வாண முத்பாடயந்தம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்

அணுப்ரஹ்ம பரியந்த ஜீவைக்ய பிம்பம்
குணாகார மத்யந்த பக்த்யானுகம்பம்
ஆனர்க்கம் சுபோதர்க்க மாத்மா வலம்பம்
பரம்ஜோதிரூபம் பஜே பூதநாதம்.

## ஸ்ரீ தர்மசாஸ்தா அஷ்டோத்தர சதநாமாவளி

ஓம் மஹா சாஸ்த்ரே நம:
" மஹா தேவாய நம:
" மஹா தேவஸுதாய நம:
" அவ்யாய நம:
" லோக கர்த்ரே நம:
" லோக பர்த்ரே நம:
" லோக ஹர்த்ரே நம:
" பராத்பராய நம:
" த்ரிலோகரக்ஷகாய நம:
" தன்வினே நம: 10

" தபஸ்வினே நம:
" பூதஸைனிகாய நம:
" மந்த்ரவேதினே நம:
" மஹாவேதினே நம:
" மாருதாய நம:
" ஜகதீச்வராய நம:
" லோகாத்யக்ஷகாய நம:
" அக்ரண்யே நம:
" ஸ்ரீமதே நம:
" அப்ரமேய பராக்ரமாய நம: 20

" ஸிம்ஹாரூடாய நம:
" கஜாரூடாய நம:
" ஹயாரூடாய நம:
" மஹேச்வராய நம:
" நாநா சாஸ்த்ரதராய நம:
" அநர்க்காய நம:
" நானாவித்யா விசாரதாய நம:
" நானாரூபதராய நம:
" வீராய நம:
" நாநாப்ராணி நிஷேவகாய நம: 30

" பூதேசாய நம:
" பூதிதாய நம:
" ப்ருத்யாய நம:
" புஜங்க பரணோத்தமாய நம:
" இக்ஷுதன்வினே நம:
" புஷ்ப பாணாய நம:
" மஹாரூபாய நம:
" மஹாப்ரபவே நம:
" மாயாதேவீஸுதாய நம:
" மான்யாய நம: 40

" மஹா நீ தாய நம:
" மஹாகுணாய நம:
" மஹா சைவாய நம:
" மஹா ருத்ராய நம:
" வைஷ்ணவாய நம:
" விஷ்ணு பூஜகாய நம:
" விக்னேசாய நம:
" வீரபத்ரேசாய நம:
" பைரவாய நம:
" ஷண்முகத்ருவாய நம: 50

" மேருச்ருங்கஸமா ஸீனாய நம:
" முனிசங்க நிஷேவிதாய நம:
" தேவாய நம:
" பத்ராய நம:

" ஜகந்நாதாய நம:
" கணநாதாய நம:
" கணேச்வராய நம:
" மஹாயோகினே நம:
" மஹாமாயினே நம:
" மஹாக்ஞானினே நம: 60
" மஹாஸ்திராய நம:
" தேவசாஸ்த்ரே நம:
" பூதசாஸ்த்ரே நம:
" பீமஹாஸபராக்ரமாய நம:
" நாகஹாராய நம:
" நாககேசாய நம:
" வ்யோமகேசாய நம:
" ஸநாதனாய நம:
" ஸுகுணாய நம:
" நிர்குணாய நம: 70
" நித்யாய நம:
" நித்ய த்ருப்தாய நம:
" நிராச்சரயாய நம:
" லோகாச்ரயாய நம:
" கணாதீசாய நம:
" சதுஷஷ்டிகலா மயாய நம:
" ரிக்யஜுஸ்ஸாமாதர்வண ரூபிணே நம: 80
" மல்லகாஸுரபஞ்சனாய நம:
" த்ரிமூர்த்தயே நம:
" தைத்யமதனாய நம:
" ப்ரக்ருதயே நம:
" புருஷோத்தமாய நம:
" காலஞ்ஞானினே நம:
" மஹாக்ஞானினே நம:
" காமதாய நம:
" கமலேக்ஷணாய நம:
" கல்பவ்ருக்ஷாய நம:
" மஹாவ்ருக்ஷாய நம:
" வித்யாவ்ருக்ஷாய நம:
" விபூதிதாய நம: 90
" ஸம்ஸாரதாப விச்சேத்ரே நம:
" பசுலோக பயங்கராய நம:
" ரோகஹந்த்ரே நம:
" ப்ராண தாத்ரே நம:
" பரகர்வ விபஞ்ஜனாய நம:
" ஸர்வசாஸ்த்ரார்த்த தத்வக்ஞாய நம:
" நீதிமதே நம:
" பாபபஞ்ஜனாய நம:
" புஷ்கலா பூர்ணா ஸம்யுக்தாய நம:
" பரமாத்மனே நம: 100
" ஸதாங்கதயே நம:
" அனந்தாதித்ய ஸம்காசாய நம:
" ஸுப்ரஹ்மண்யானுஜாய நம:
" பலிநே நம:
" பக்தானுகம்பினே நம:
" தேவேசாய நம:
" பகவதே நம:
" பக்தவத்ஸலாய நம:

இதி ஸ்ரீ தர்ம சாஸ்தா அஷ்டோத்தர சத நாமாவளி ஸம்பூர்ணம்

## சாஸ்தா பஞ்சாக்ஷர ஸ்தோத்திரம்

1. ஓங்கார மூர்த்திமார்த்திக்னம் – தேவம் ஹரிஹராத்மஜம்
சபரீட நிலயம் - சாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்யஹம்
2. நக்ஷத்ர நாதவதனம் நாதம் த்ரிபுவனாவனம்
நமிதாசேஷ புவனம் - சாஸ்தாரம் நௌமி பாவனம்
3. மன்மதாயுத ஸௌந்தர்யம் - மஹாபூதநிஷேவிதம்
ம்ருகயாரசிகம் சூரம் - சாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்ஹம்
4. சிவப்ரதாயினம் பக்த - தைவதம் பாண்டய பாலகம்
சார்தூலதுக்த ஹர்த்தாரம் - சாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்யஹம்
5. வாரணேந்த்ர ஸமாரூடம் - விஸ்வத்ராணபராயணம்
வேதோத்பாஸிகாரம் போஜம் - சாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்யஹம்
6. யக்ஷிண்யபிமதம் பூர்ண - புஷ்களா பரிஸேவிதம்
க்ஷிப்ரப்ரஸாதம் நித்யம் - சாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்யஹம்

# 108 சரணங்கள்



1. ஸ்வாமியே சரணமய்யப்பா
2. ஹரிஹரஸுதனே சரணமய்யப்பா
3. அனாத ரக்ஷகனே சரணமய்யப்பா
4. ஆபத்பாந்தவனே சரணமய்யப்பா
5. அன்னதானப்ரபுவே சரணமய்யப்பா
6. கச்சியம்பதிவாசனே சரணமய்யப்பா
7. குளத்தூர் புழை பாலனே சரணமய்யப்பா
8. அச்சனார் கோவிலரசே சரணமய்யப்பா
9. ஆரியங்காவய்யாவே சரணமய்யப்பா
10. புலிக்கோட்டிலய்யாவே சரணமய்யப்பா
11. சொரிமுத்தய்யனே சரணமய்யப்பா
12. எருமேலி ஸ்ரீதர்ம சாஸ்தரய்யனே சரணமய்யப்பா
13. வில்லன் வில்லாளி வீரனே சரணமய்யப்பா
14. வீரமணிகண்டனே சரணமய்யப்பா
15. வேட்டைக்கொரு பாலனே சரணமய்யப்பா
16. கிராத வபுக்ஷ மூர்த்தியே சரணமய்யப்பா
17. வாவருட தோழரே சரணமய்யப்பா
18. ஸ்வாமியுட பரிவாரங்களே சரணமய்யப்பா
19. பேரூர்தோடே சரணமய்யப்பா
20. தலைப்பாறைக் கோட்டைத்தாவளமே சரணமய்யப்பா
21. காளை கட்டி ஆஸ்ரமமே சரணமய்யப்பா
22. அழுதா (அலஸா) தீர்த்தமே சரணமய்யப்பா
23. அழுதையில் ஸ்னானமே சரணமய்யப்பா
24. அழுதையில் கல்லுமெடுத்தேன் சரணமய்யப்பா
25. அழுதா மேடே சரணமய்யப்பா
26. கல்லிடுங் குன்னே சரணமய்யப்பா
27. கல்லிட்டு வலம் வந்தேன் சரணமய்யப்பா
28. இஞ்சிப்(உடும்)பாறை கோட்டையே சரணமய்யப்பா
29. அழுதாயிறக்கமே சரணமய்யப்பா
30. முக்குழி தாவளமே சரணமய்யப்பா
31. வடசேரி மலைகளே சரணமய்யப்பா
32. வடசேரி ஆறுகளே சரணமய்யப்பா
33. புதுச்சேரி தாவளமே சரணமய்யப்பா
34. இலவன் தோடோ சரணமய்யப்பா
35. இலவன் கமடே சரணமய்யப்பா
36. கரியிலந் (கரிவலம்)தோடே சரணமய்யப்பா
37. கரிமலை பகவதியே சரணமய்யப்பா
38. கரிமலை கயற்றமே (ஏற்றமே) சரணமய்யப்பா
39. கரிமலை உச்சியே சரணமய்யப்பா
40. கிணறும் குளமுமே சரணமய்யப்பா
41. கரிமலை இறக்கமே சரணமய்யப்பா
42. சிறியயானை வட்டமே சரணமய்யப்பா
43. வலிய யானை வட்டமே சரணமய்யப்பா
44. குறுந்தைத் தாவளமே சரணமய்யப்பா
45. பம்பா தீர்த்தமே சரணமய்யப்பா
46. பம்பையில் ஸ்னானமே சரணமய்யப்பா
47. பாபவிமோசனமே சரணமய்யப்பா
48. பம்பையின் சிசுவே சரணமய்யப்பா
49. பந்தள பாலகனே சரணமய்யப்பா
50. பந்தளத் தோமலே சரணமய்யப்பா
51. பாண்டிய ராஜ குமாரனே சரணமய்யப்பா
52. பம்பா ஸத்தியே சரணமய்யப்பா
53. ஆழி விபூதியே சரணமய்யப்பா
54. பம்பையில் விளக்கே சரணமய்யப்பா
55. நீலி மலையே சரணமய்யப்பா
56. ஸ்ரீ ராம பாத தீர்த்தமே சரணமய்யப்பா
57. அப்பாச்சிமேடே சரணமய்யப்பா
58. இப்பாச்சி குழியே சரணமய்யப்பா
59. தர்ம மேடே சரணமய்யப்பா
60. சபரி ஆஸ்ரமமே சரணமய்யப்பா
61. ஸ்வாமியுட சரங்குத்தி ஆலே சரணமய்யப்பா
62. சரமிட்டு வலம் வந்தேன் சரணமய்யப்பா
63. சபரிமலையே சரணமய்யப்பா
64. சத்தியமான பொன்னு பதினெட்டு படிகளே சரணமய்யப்பா
65. பதினெட்டு படிக்காவலரே சரணமய்யப்பா
66. கொச்சு கடுத்த ஸ்வாமியே சரணமய்யப்பா
67. கருப்பண்ண ஸ்வாமியே சரணமய்யப்பா
68. இடக்கட்டு வாவரே சரணமய்யப்பா
69. ஹோம குண்டமே சரணமய்யப்பா
70. கன்னிமூலை கணபதி பகவானே சரணமய்யப்பா
71. நாகராஜாக்களே சரணமய்யப்பா
72. மாளிகை புரத்தம்மதேவி லோக மஞ்சமாதாவே சரணமய்யப்பா
73. ஸ்வாமியுட மணிமண்டபமே சரணமய்யப்பா
74. பஸ்ம குளத் தீர்த்தமே சரணமய்யப்பா
75. ஒரு குழிதீர்த்தமே சரணமய்யப்பா
76. ஸ்வாமியுட பூங்காவனமே
77. ஸ்வாமியுட பூதகணங்களே சரணமய்யப்பா
78. கஜமுகன் சோதரனே சரணமய்யப்பா
79. வைக்கத்தப்பன் மைந்தனே சரணமய்யப்பா
80. ஏற்றுமானூரப்பன் மைந்தனே சரணமய்யப்பா
81. கொடுங்கல்லூர் பகவதியே சரணமய்யப்பா
82. சோத்தானிக்கர பகவதியே சரணமய்யப்பா
83. குருவாயூரப்பன் மைந்தனே சரணமய்யப்பா
84. ஆறுமுக வேலவன் தம்பியே சரணமய்யப்பா
85. வேலாயுதனனுஜனே சரணமய்யப்பா
86. வேதவேதாந்தீதனே சரணமய்யப்பா
87. வேத ஸ்வரூபனே சரணமய்யப்பா
88. சத்ய ஸ்வரூபனே சரணமய்யப்பா
89. சாந்த ஸ்வரூபனே சரணமய்யப்பா
90. ஜோதிஸ்வரூபனே சரணமய்யப்பா

91. மகரஜோதி தரிசனம்
தரனும் பகவானே — சரணமய்யப்பா
92. சர்வரோக நிவாரண
தன்வந்தரமூர்த்தியே — சரணமய்யப்பா
93. கற்பூர ஜோதியே — சரணமய்யப்பா
94. கற்பூர பரிமளப்ரியனே — சரணமய்யப்பா
95. காந்தமலை ஜோதியே — சரணமய்யப்பா
96. பொன்னம்பல மேடே — சரணமய்யப்பா
97. சரண கோஷப்ரியனே — சரணமய்யப்பா
98. இருமுடிப்ரியனே — சரணமய்யப்பா
99. பாயஸான்ன ப்ரியனே — சரணமய்யப்பா
100. பஸ்மாபிஷேக ப்ரியனே — சரணமய்யப்பா
101. பன்னீரபிஷேக ப்ரியனே — சரணமய்யப்பா
102. களபாபிஷேக ப்ரியனே — சரணமய்யப்பா
103. நெய்யபிஷேக ப்ரியனே — சரணமய்யப்பா
104. ஸேவிப்போர்க்கு ஆனந்த
திவ்ய மூர்த்தியே — சரணமய்யப்பா
105. சபரிகிரியில்
ஸ்ரீதர்மசாஸ்த்ரய்யனே — சரணமய்யப்பா
106. சரணாகத வத்ஸலனே — சரணமய்யப்பா
107. கலியுகத்தில் கண்கண்ட
(ப்ரத்யக்ஷ) தெய்வமே — சரணமய்யப்பா
108. சமஸ்தாபராத ரக்ஷகனே — சரணமய்யப்பா

சத்தியமாய பொன்னு பதினெட்டாம் படிமேல் வாழும் ஹரிஹரஸுதனே சரணமய்யப்பா.

தெரிந்தோ தெரியாமலோ அறிந்தோ அறியாமலோ செய்த சகல பிழைகளையும் பொறுத்து காத்தருள வேணும்பாண்டி மலையாளம் கொச்சி ராமேஸ்வரம் அடக்கியாளும் சத்தியமாய பொன்னு பதினெட்டாம்படி மேல் வாழும் அகிலாண்டகோடி ப்ரும்மாண்ட நாயகன் ஆனந்தசித்தன் கச்சியம்பதி வாழும் ஓம் ஸ்ரீ ஹரிஹரஸுதன் ஆனந்த சித்தன் ஐயன் ஐயப்ப ஸ்வாமியே சரணமய்யப்பா.

## 108 சரணங்களின் தத்துவார்த்தம்

1 முதல் 5 வரை ஸ்வாமியின் முக்கிய குணாதிசயங்கள்.
6 முதல் 11 வரை ஸ்வாமியின் விசேஷ ஸ்தலங்கள்
11 முதல் 18 வரை எருமேலி கோட்டைப்படி
19 முதல் 41 வரை ஸ்வாமியின் பூங்காவனம் (பெருவழிப்பாதை)
42 முதல் 54 வரை பம்பா நதி
55 முதல் 77 வரை சபரிமலை
78 முதல் 85 வரை உறவு
86 முதல் 90 வரை ஸ்வரூபம்
91 முதல் 108 வரை பதினெட்டுப்படிகள்

## வேண்டுகோள்

ஐயப்ப பக்தர்கள் சரணகோஷத்தின்போது அந்தந்த சரணங்களின் அர்த்தத்தை மனதில் புரிந்துகொண்டு ஒவ்வொரு தினமும் காலை மாலை இரண்டு வேளையும் சித்த சுத்தியோடு சொல்லி வந்தால் சபரிகிரி (பெருவழியாக) யாத்திரையின் பலன் கிடைக்க ஸ்வாமியின் அருள் உண்டாகும்.

## சொல்வளம் நல்கும் சாஸ்தா த்யானம்

சாந்தம் சாரத சந்த்ரகாந்தி வதனம்
சந்த்ராபி ராமானனம்
சந்த்ராக் கோபம காந்த குண்டலதரம்
சந்த்ரா வதாதம் சுகம்
வீணாம் புஸ்தக மக்ஷ ஸூத்ரவலயம்
வ்யாக்யன முத்ராம் கரை:
பிப்ராணம் கலயே ஸதா ஹ்ருதிமஹா
சாஸ்தாம்ஹி வாக் ஸித்தயே

# ஐயப்பன் கவசம்

## காப்பு

அரிஹர புத்ரனை ஆனந்த ரூபனை
இருமூர்த்தி மைந்தனை ஆறுமுகன் தம்பியை
சபரி கிரீசனை சாந்தஸ்வரூபனை
தினம்தினம் போற்றிப் பணிந்திடுவோம்
ஐயப்ப தேவன் சுவாமிதனை
அநுதினம் சொல்ல அல்லல்கள் ஒழியும்
தினம் தினம் துதிக்கத்தீரும் வினையெலாம்
நாடிய பொருளும் நலமும் வருமே.

## நூல்

மண்ணுலகெல்லாம் காத்தருள் செய்ய
மணிகண்ட தேவா வருக வருக
மாயோன் மைந்தா வருக வருக
ஐங்கரன் சோதரா ஐயப்பா வருக 1

புலிவாகனனே வருக வருக
புவியெல்லாம் காத்திட வருக வருக
பூரணை நாதனே வருக வருக
புண்ணிய மூர்த்தியே வருக வருக 2

பூத நாயகா வருக வருக
புஷ்களைபதியே வருக வருக
பொன்னம்பலத்துறை ஈசா வருக
அடியாரைக் காக்க அன்புடன் வருக 3

வருக வருக வாசன் மைந்தா
வருக வருக வீர மணிகண்டா
வஞ்சனை நீங்கிட வருக வருக
வல்வினை போக்கிட வருக வருக 4

ஐயம் தவிர்த்திட ஐயப்பா வருக
அச்சம் அகற்றிட அன்பனே வருக
இருவினை களைந்தே எனையாட்கொள்ள
இருமூர்த்தி மைந்தா வருக வருக 5

பதினென்படியை மனத்தில் நினைக்க
பண்ணிய பாபம் பொடிப்பொடியாகும்
ஐயப்பா சரணம் என்றே கூறிட
ஐம்பூதங்களும் அடிபணிந்திடுமே 6

சபரிகிரீசனை நினைத்தே நீரிடத்
துன்பங்கள் எல்லாம் தூள் தூளாகும்
சரணம் சரணம் என்றே சொல்லிட
சித்திகள் யாவும் வந்தடைந்திடுமே 7

பம்பையின் பாலன் பெயர் சொல்லிடவும்
பகைவர்கள் எல்லாம் பணிந்தே வணங்குவர்
ஐயப்பன் பாதம் அநுதினம் நினைக்க
அவனியிலுள்ளோர் அடிபணிந்தேத்துவர் 8

சரணம் சரணம் ஐயப்பா
சரணம் சரணம் சபரி கிரீசா
சரணம் சரணம் சத்குரு நாதா
சரணம் சரணம் ஸ்வாமியே சரணம் 9

## வேண்டுதல்

சிவனார் மகன் என் சிரசினைக் காக்க
நெடுமால் மைந்தன் நெற்றியை காக்க
கஜமுகன் தம்பி என் கண்ணினைக் காக்க
நாரணன் பாலன் நாசியைக் காக்க 10

இருமூர்த்தி மைந்தன் என் இகசெவி காக்க
வாபரின் தோழன் வாயினைக் காக்க
பம்பையின் பாலன் பற்களைக் காக்க
நான்முகப் பூஜியின் நாவினைக் காக்க 11

கலியுக வரதன் என் கழுத்தினைக் காக்க
குமரன் தம்பி என் குரல்வளைக் காக்க
புஷ்களை நாதன் புஜங்களைக் காக்க
முக்கண்ணன் பாலன் முழுங்கையைக் காக்க 12

வீரமணி கண்டன் விரல்களைக் காக்க
கயிலை மைந்தன் கைகளைக் காக்க
மணிகண்ட தேவன் மார்பினைக் காக்க
வன்புலி வாகனன் வயற்றினைக் காக்க 13

முழுதற் கடவுள் என் முதுகினைக் காக்க
இருமுடிப் பிரியன் என் இடுப்பினைக் காக்க
பிரம்பாயுதன் என் பிட்டங்கள் காக்க
தர்மசாஸ்தா துடைதனைக் காக்க 14

முருகன் சோதரன் முழங்கால் காக்க
கற்பூரஜோதி என் கணைக்கால் காக்க
பந்தளபாலன் பாதத்தினைக் காக்க
விஜயகுமாரன் விரல்களைக் காக்க 15

அன்னதானப் பிரபு அங்கமெலாம் காக்க
ஆரியங்கா ஜோதி அன்புடன் காக்க
காட்டாளரூபி காலையில் காக்க
நவக்ரஹநாதன் நடுப்பகல் காக்க 16

மாலின் மகனார் மாலையில் காக்க
அரிஹரசுதனார் அந்தியில் காக்க
இன்பமய ஜோதி இரவினில் காக்க
எருமேலி சாஸ்தா என்றுமே காக்க 17

அரியன் மகனார் அநுதினம் காக்க
நடராஜன் பாலன் நாள்தோறும் காக்க
வாசவன் செல்வன் வலப்புறம் காக்க
இருமுடி ஈசன் இடப்புறம் காக்க 18

காக்க காக்க கருணையால் காக்க
பார்க்க பார்க்க என்பாபம் பொடிபட
இம்மையும் மறுமையும் இல்லா தொழிந்திட
ஈசன் மகன் எனை என்றுமே காக்க 19

கொடிய விஷயங்களும் கொள்ளை நோய்களும்
குருதியைக் குடிக்கும் துஷ்டப் பேய்களும்
காந்தமலை தனைக் கருத்தில் கொண்டிட
கலங்கி மறைந்திடக் கருணை புரிவாய் 20

பில்லி சூனியம் பலவித வஞ்சனை
பம்பையின் பாலன் பெயர் சொல்லிடவும்
பஞ்சாய்ப் பறக்க வரமெனக்கருள்வாய்
பயங்களைப் போக்கி அபயம் அளிப்பாய் 21

வாதம், பித்தம் சிலேட்சுமத் துடனே
வாந்தியும், பேதியும், வலிப்பும் சுளுக்கும்
எவ்வித நோயும், எனையனுகாமல்
என்றுமே காப்பாய் எருமேலி தேவா 22

கல்வியும், செல்வமும் கள்ளமில்லா மனமும்
நல்லோர் உறவும் நாளும் அருள்வாய்
நல்ல மனத்துடன் உனை நான் துதிக்க
நித்தமும் அருள்வாய் சபரி கிரீசா 23

காமம், குரோதம், லோபம் மோஹம்
மதமாச்சர்ய மெனும் ஐம்பெரும் பேய்கள்
என்றுமே என்னை அணுகி விடாமல்
ஐயப்பதேவா வரமெனக் கருள்வாய் 24

சூது, பொறாமை, பொய், கோபமில்லாமல்
சோரம், லோபம், துன்மார்க்கம் கல்லாமல்
வேதநெறியினை விலகி நில்லாமல்
வீரமணிகண்டா வரமெனக் கருள்வாய் 25

மூப்பும், பிணியும், வறுமையும், பசியும்
வந்தெனை வாட்டி வதைசெய்யாமல்
உள்ளன்புடனே உன் திருநாமம்
அநுதினம் சொல்ல அருள் தருவாயே 26

## நமஸ்காரம்

அரிஹர புத்ரா அன்பா நமோ நமோ
சபரிகிரீசா சாஸ்தா நமோ நமோ
பதினென் படிவாழ் பரமா நமோ நமோ
ஐங்கரன் சோதரா ஐயப்பா நமோ நமோ 27

பொன்னம்பலத்துறை புண்ணியா நமோ நமோ
புலிப்பால் ஈந்த புண்ணியா நமோ நமோ
கரிகாயுத முடைச்சுந்தரா நமோ நமோ
மஹிஷிமர்த்தனா மணிகண்டா நமோ நமோ 28

சரணம் சரணம் சபரி கிரீசா
சரணம் சரணம் சத்ய ஸ்வரூபா
சரணம் சரணம் சர்வ தயாளா
சரணம் சரணம் ஸ்வாமியே சரணம் 29

பிரம்மாண்ட புராணத்தில் கேரளிய மஹாத்மியத்தில் ஸ்ரீ பரசுராமரால் துதிக்கப்பட்ட ஐயப்பன் கவசம்.

***

## ஸ்ரீ சரபேஸ்வரர்



எதிரிகள் குலநாசம், மோட்ச பலம், புத்தி, முத்தி ஏற்படுதல், அபஸ்மார பில்லி சூன்ய ஒழிப்பு, ராஜ உபச்சாரம், காலன் மிருத்யூ அருகே வரவிடாத நிலை, எந்தவித நோயும் ஏற்படாத நிலை இவைகளுக்கு வழி என்ன?

சரபேஸ்வரரை ஒரு கணம் நிச்சிந்தையாக உளமாற மனக்கண் முன் நிறுத்திப் பிரார்த்திக்க வேண்டும்.

நமக்கு வெற்றியைத் தரும் தெய்வம், கொடிய சத்ருக்களை அழிக்கும் தெய்வம். தீராத இன்னல்களைத் தீர்த்து வைத்து தன்னிடம் வந்தவர்களுக்கு, சரணடைந்தவர்களுக்கு அபயமளிக்கும் தெய்வம் ஸ்ரீ சரபேஸ்வரர் ஆவார். இவரைத் தியானிப்பதால் விஷபயம் நீங்கும். ஞாபகமறதி விலகும். கல்வியில் மேன்மை ஏற்படும். சித்த பிரமை தீரும்.

இவரை வேதங்கள், அழிக்கும் கடவுளான அக்னித் தத்துவத்திற்கு உரியவரான ஸ்ரீருத்திரனே எனச் சொல்கிறது. இவன் பிரபாவத்தைத் தாங்கத் தேவர்களும் அசுரர்களும் கூட பயப்படுகின்றனர் என வேத மந்திரங்களில் காணப்படுகிறது.

சரபர் சிவபெருமானின் அவதாரம். இவர் இரண்ய கசிபுவை வதம் செய்த ஸ்ரீ நரசிம்ம மூர்த்தியைச் சாந்தம் செய்ய எடுத்த அவதார மூர்த்தியாகும். ஒரு சக்தி கட்டுக்கடங்காது செல்லும்போது அதை அடக்க வேறொரு சக்தி தேவைப்படுகிறது.

பரம சாத்வீக மூர்த்தியான ஸ்ரீமன் நாராயணன் ஹிரண்யகசிபுவைக் கொன்று அவனது ரத்தத்தைக் குடித்ததால் ரஜோ குணம் மேலிட போர் செய்ய முயன்றார். சரபேஸ்வரர் வானத்தில் எழுந்து பறந்துவந்து ரஜோகுணத்தைப் போக்கினார்.

**பெயர்க் காரணம் :**

''சரபம்'' என்ற பெயர்க் காரணத்தைப் பார்க்கலாம். ச்ர என்றால் ஜீவன்களுக்கும் அம்புக்கும் பொதுவான பெயர்.

ஸ்ரீ மகாவிஷ்ணு திரிபுர ஸம்ஹார காலத்தில் பரமேஸ்வரரின் அம்பாக இருந்தார். பரமேஸ்வரன் மகாவிஷ்ணு ஆகிய இருவரின் ஐக்கியத்தைக் கூறவே சரபம் என்ற நாமம் ஈசனுக்கு ஏற்பட்டது. இதைச் சரப உபநிஷதம் கீழ்கண்டவாறு கூறுகிறது.

*"சரஜீவாஸ் ததங்கே ஷு*
*பாதிநித்யம் ஹரீஸ் வயம்*
*ப்ரஹ்னுமவ சரபஸ் ஸாக்ஷிரத்*
*மோக்ஷ தோயம் மஹாமுனே"*

சரமாகிய அம்பின் வேகத்தை உடையவர். ஆதலால் சரபர் என்ற நாமதேயம் மகேஸ்வரன் பெற்றார்.

ஸ்ரீ சுப்ரமண்ய சத்ருஸம்ஹார த்ரிசதி எனும் மிக உயர்ந்த மந்த்ர சாஸ்த்திரம். முருகனை சரபவே காயுததராய நம: என்று துதிக்கிறது. சரபத்தைப் போன்ற வேகமுள்ள ஆயுதங்களை முருகப் பெருமான் தரிப்பதாக் கூறப்படுவதால் சரபத்தின் பெருமை விளங்கும்.

**சரபேஸ்வரர் எழுந்தருளியிருக்கும் ஆலயங்கள்:**

சரபேஸ்வரருக்கு சாளுவேசர் என்ற நாமமும் உண்டு. கீழைச் சாளுக்கிய மன்னர்களின் இஷ்ட தெய்வமாக இவர் இருந்து வந்ததால் இப்பெயர் ஏற்பட்டது. கீழைச் சாளுக்கியர்களுக்கும் சோழர்களுக்கும் சம்பந்தம் ஏற்படவே சோழ நாட்டிலும் திருபுவனம் போன்ற இடங்களில் திருஉருவங்கள் ஸ்தாபிக்கப்பட்டன.

கும்பகோணம் – மயிலாடுதுறை வழியில் உள்ளது திருபுவனம் என்ற சிற்றூர். இந்த ஊரில் உள்ளது கம்பகேஸ்வர ஆலயம். இது தருமை ஆதீனத்திற்கு உட்பட்டது.

நரசிம்ஹ அட்டகாசத்தால் உலகத்தோருக்கு ஏற்பட்ட நடுக்கத்தை இப்பெருமான் தீர்த்தவராகையால் மூலவரின் திருநாமம் கம்பகேஸ்வரர். நடுக்கம் தீர்த்த பெருமாள். சரபருக்குத் தனிச்சன்னதி உண்டு.

மதுரை மன்னர் வரகுணபாண்டியனைப் பிடித்த பிரம்மஹத்தி நீங்கி அதனால் ஏற்பட்ட நடுக்கம் அவனுக்குத் தீராமல் இருந்தது. இங்கு வந்து பூஜை செய்து நடுக்கம் நீங்கப் பெற்றான்.

இந்த ஸ்தலத்தில் கம்பகேஸ்வரர் லிங்க ரூபத்தில் கல்லில் இருக்கின்றார். சரபேஸ்வரர் உலோக விக்கிரகம்.

திருபுவனத்திற்கு அடுத்தாற்போல் உள்ளது. காரைக்குடியில் நகரத்தார் சிவன் கோயிலில் சரபருக்குத் தனி சன்னதி உள்ளது.

இதனையடுத்து சென்னை பல்லாவரம் அருகில் உள்ள திரிசூலம் ஆலயத்தில் மிக அபூர்வமான சரபேஸ்வரர் விக்கிரகம் உள்ளது.

**சரபேஸ்வரர் புராணவரலாறு**

'தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான்' என்ற பக்த பிரஹலாதனின் சொல்லை உண்மையாக்க வேண்டி தூணில் தோன்றியவர் நரசிம்மமூர்த்தி. ஹிரண்ய கசிபுவைக்கொன்றார்.

பரம சாத்வீக மூர்த்தியான ஸ்ரீமன் நாராயணன் ஹிரண்ய கசிபுவைக் கொன்று அவனது ரத்தத்தைக் குடித்ததால் ரஜோகுணம் மேலிட போர் செய்ய முயன்றார். இவ்வுலகத்தையே அழிக்க அதிபயங்கரமான கோரைப் பற்களும் தொங்குகின்ற நாக்கும், பயத்தைத் தரும் கண்களும், கூர்மையான நகங்களும் கொண்ட இவரின் கோபாவேசம் உலகத்தையே ஆட்டிப் படைத்தது. பிரம்மனும் மஹாலக்ஷ்மியும் பயந்து மகேசுவரனைத் தஞ்சமடைந்தார்கள்.

தேவர்கள் சிவபெருமானை நினைந்து

*'நமஸ்தே கால காலாய நமஸ்தே ருத்ர மான்யவே*
*நமசிவாய ருத்தராய சங்கராய சிவாயதே'*

என்று மனமுருகப் பிரார்த்தித்தனர்.

பரமசிவன் வீபரத்திரரை அனுப்பினார். நரசிம்மரோ அடங்குவதாயில்லை. இதனால் வீரபத்திரர் சிவபெருமானை நினைக்க, நினைத்த மாத்திரத்தில் கோடி சூரியன் உதித்தது போன்ற ஒரு ஜோதி வீரபத்திரரை அடைந்தது.

ஒரு வினோத உருவம் தரித்தார், சந்திரன் சூரியன், அக்னி மூவரையும் கண்களாகக் கொண்டும், வஜ்ராயுதம் போன்ற நகங்களைக் கொண்டும், அசைகின்றதும், மிகஉக்ரமானதுமான நாக்கைக் கொண்டும், காளி, துர்க்கை ஆகியவர்களை இரு இறக்கைகளாகக் கொண்டும் பைரவ மூர்த்தியையும் வடவாமுகாக்னியையும் தன் வயிற்றில் ஜடராக்னியாகக் கொண்டும் இரு தொடைகளை ரோக தேவதையையும் யமனையும் கொண்டும் ஒரு பக்ஷிராஜனாக சரப பக்ஷியாக பரமேஸ்வரன் உருவம் கொண்டார்.

நரசிம்மம், மனிதன் சிம்மம் இரண்டும் கலந்த உருவம். சரபம் மனிதன், யாளி, பக்ஷி இம்மூன்றும் கலந்த உருவம். மனிதனை மனிதனாக்குவதற்கே பக்ஷி மிருகம் இவை கலந்த உருவத்தை பரமேசுவரன் ஏற்றார்.

துஷ்ட நிக்ரஹம், சிஷ்ட பரிபாலனம் இரண்டும் முக்கியமானவை. இரண்டும் ஈசன் அருளின் இருபக்கமே என்பது இந்து சமயக் கொள்கை.

சரபேஸ்வரர், தன் கைகளில் மான், மழு, சர்ப்பம், தீ இவைகளை வைத்துக்கொண்டு இருக்கிறார். 'நான்' என்ற அகந்தையை ஒழிக்கக் கூடியது மழு. எப்பொழுதுமே சஞ்சலமான பார்வையைக் கொண்டது மான். அப்பார்வையை மூடி மனதை ஒருநிலைப்படுத்த வேண்டும். இதற்கே குரு பாதுகையை ஜபிக்கும்போது தலையில், 'மருகீ முத்திரையை' வைத்துக் கொள்ள வேண்டும் என்றிருக்கிறது.

யாருக்கும், எந்தவிதத் தீங்கும் நினைக்காத சாத்வீகப் பிராணி மான். ஒரு கையில் பாம்பு இருப்பது குண்டலினி சக்தியை எழுப்பிச் செயல்பட வேண்டும் என்பதை அறிவுறுத்துகிறது. மற்றொரு கரத்தில் இருப்பது ஞானாக்கினி. நல்லது செய்வதற்காகட்டும், இறைவனுக்கு பெண் ரூபமான சக்திகளே உதவியுள்ளன. இந்த வகையில், சரபேஸ்வரருக்கும், பத்ரகாளி என்ற பிரத்தியங்கிரா அடுத்து சூலினி என்ற துர்க்கையாகும்.

உபாசகன் இந்திரியங்களை அடக்கி ஒடுக்கி மனதைக் கட்டுப்படுத்தி ஒரு நிலைக்கு கிட்டத்தட்ட வந்து விடுகின்றான். இந்த நிலையில் அவனுக்குத் தன்னால்தானே இந்த நிலைக்கு வந்துவிட முடிந்தது என்று அகங்காரம் எழுகிறது. இதை அழிக்காவிட்டால் என்னதான் இந்திரியங்களை ஒடுக்கி வெற்றி பெற்றும் பயனில்லை. இந்த அகங்காரத்தை ஒடுக்கிய சக்தியே சரபேஸ்வரர்.

**தியான ஸ்லோகம்**

*ஸ்ரீம் காரீ சரபேஸ்வர: அஷ்ட சரண*
*பக்ஷசெதுர் பாஹூக*
*பாதா கிருஷ்ட நிருஸிம்ஹ விக்ர ஹதர*
*காலாக்னி கோடித்யுதி*
*விச்வ க்ஷிப நிருஸிம்ஹ தர்ப்பசமன*
*பிரும் மேந்திர முக்யை ஸ்துத*
*கங்கா சந்தரதர; புரஸ்த சாட*
*ஸத்யோரியுக் னோஸ்து ந;*

'சரபேஸ்வரருக்கு 8 கால்களும் 4 கைகளும் இரண்டு இறக்கைகளும் கருடனைப் போன்ற மூக்கும் கால்களால் நரசிம்மத்தை சாந்தபடுத்தி வைத்தும், காலாக்னி போன்ற பிரகாசமும், கங்கை, சந்திரன், மான், மழு ஏந்தி உலகத்தின் துயரத்தினைப் போக்க மனம் கொண்ட சரபேஸ்வரர் எம்முன் தோன்றி என்னைக் காத்து

அருளவேண்டும்' என்பது மேற்கண்ட சுலோகத்தின் பொருளாகும்.

**சரப காயத்திரி**

ஸாலுவேசாய வித்மஹே பக்ஷிராஜாய தீமஹி
தந்நோ சரப: ப்ரசோதயாத் :

**சரபரின் மூல மந்திரம்**

ஓம் கேம் காம் பட் பராணக்ர
ஹாஸி, ப்ராணக்ர ஹாஸி
ஹூம்பட் ஸர்வ சத்துரு சம்ஹாரணாய
சரப ஸாலுவாய பக்ஷிராஜாய ஹூம்பட் ஸ்வாஹா:

ரஜோகுணத்தைப் போக்கிய நரசிம்ம மூர்த்தி நினைத்ததற் வருத்தமுற்று 18 ஸ்லோகங்களைக் கூறி சிவபெருமானை துதித்தார். இது சரபேஸ்வரரின் அஷ்டோத்திர நாமாக்கள்.

ஜலமும் ஜலமும், பாலும் பாலும், நெய்யும் நெய்யும் ஒன்றுடன் கலந்தால் எப்படியோ அப்படி விஷ்ணுவும் என்னிடத்தில் உள்ளவர். நாங்கள் இருவரும் ஒருவரே. கோபம் அடங்கத்தான் நாங்கள் அத்தகைய உருவங்களை எடுத்தோம் என்று தேவர்களைப் பார்த்துக் கூறினார்.

கருடன் பக்ஷிராஜனாகிய சரபத்தை உபாஸித்ததாக புராணங்கள் கூறுகின்றன. ஸோமயாஜீ எனும் ஸோமாசிம நாயனார், ரோமசர் என்ற ரிஷி ஆகியோரும் சரபத்தை வழிபட உயர்ந்தவர்கள் ஆவார்கள்.

சரப மஹா மந்த்ரத்திற்கு பைரவி ரிஷி காயத்ரி, சந்தஸ், தேவதை ஆவார். சரபதியானம் பின்வருமாறு:

***ஸ்வலன குடில கேசம் ஸூர்ய சந்த்ராக்னி நேத்ர***
***நிசித கர நகாக்ர ஸ்யூதஸிம் ஹாஸ்ய தேஹம்***
***சரப மத - முனீந்த்ரை:ஸேவ்யமானம் ஸிதாபம்***
***ப்ரதை பய விநாசம் பாவயேத் பக்ஷிராஜம்***

நவதுர்க்கைகளில் பிரயோகங்கட்குச் சிறந்தவர்கள் சூலினி துர்க்கை, சாந்தி துர்க்கை, வனதுர்க்கை ஆகியோராவார்கள்.

யோகினிகள் ரத்த மாடன், அசிங்க மாடன் போன்ற துர்த் தேவதைகள் ஏவல் செய்யப்பட்டிருந்தால் அதற்குச் சுலபமான வழி சூலினி, துர்க்கையை திருப்திபடுத்துவது ஒன்றேயாகும்.

சூலினிக்கு முன்னால் எந்தச் சக்தியும் நில்லாது ஓடிப்போகும். இந்தச் சூலினி தேவியே சிறந்த உபாஸகனால் ஏவப்பட்டிருந்தால் அதைத் தீர்க்க சரபேஸ்வர மூர்த்தியைத்தான் உபாஸிக்க வேண்டும். பல மந்திர ரகஸ்யங்கள் ஆகாச பைரவ கல்பம் போன்ற மந்த்ர சாஸ்திர நூல்கள் மூலம் நமக்குத் தெரியவருகின்றன.

ஸ்ரீ மஹாபாரதம் விராட பர்வத்தில் வருவது:

*நமஸ்தே ஸித்த ஸேனானி ஸூர்யே மந்த்ர வாஸினி*
*குமரீ காளீ காபாலி கபிலே க்ருஷ்ண பிங்கலே!!*
*த்வம் ப்ரம்ஹ வித்யானாம் மஹா நித்ரக தேஹினாம்*
***ஸ்கந்த் மாதர் பகவது துர்கே காந்தார வாஸினீ!!***

இப்படிப்பட்ட சுலோகங்கள் நிரம்பிய சூலினி துர்க்கா ஸ்தோத்திரம் ஸர்வ மங்களத்தையும் அளிக்கும்.

ஞாயிற்றுக் கிழமை வரும் ராகுகால நேரத்தில் மாலை 4.30 மணி முதல் 6.00 மணிக்குள் இவரின் தியான சுலோகம் காயத்திரி மூலமந்திரத்துடன் வழிபட்டு எல்லா நலன்களையும் பெற்று வளமோடு வாழ்ந்திட சரபேஸ்வரரைத் துதிப்போம்.

---

## குடும்பத்தில் அமைதி ஏற்பட

**விதேஹி தேவி கல்யாணம்**
**விதேஹி பரமாம் ச்ரியம்**
**ரூபம் தேஹி ஜயம் தேஹி**
**யசோ தேஹி த்விசோ ஜிஹி.**
**(108 முறை சொல்லவும்)**

மகா விஷ்ணுவின் அருள் பெற வழிசெய்யும் விரதங்களில் ஒன்று சனிக்கிழமை விரதமாகும். சனிக்கிழமை ஒரு விசேஷமான நாள். மகாவிஷ்ணு சனி பகவான், அனுமன் ஆகியோரை வழி படுவதற்குரிய நாள்.

ஏழு சனிக்கிழமைகள் தொடர்ந்து விரதமிருந்து மகாவிஷ்ணுவை வழிபட்டால் எமனையும் ஜெயிக்கலாம். சனிக்கிழமைகளில் துளசி இலைகளால் அனுமனையும், நீலோத்பல மலர்களால் சனி பகவானையும் அர்ச்சித்தால் குடும்பத்தில் நிம்மதி தவழும்.

# சரபாஷ்டகம்

1. தேவாதிதேவாய ஜகன்மாய சிவாய நாலிக நிபானனாயை சர்வாய பீமாய சாரதிபாய நமோஸ்து துப்யம் சரபேச்வராய

2. சீதாம்சுசூடாய திகம் பராய ஸ்ருஷ்டிஸ்திதித்வம்ஸன காரணாய ஜடாகலாபாய ஜிதேந்திராய நமோஸ்து துப்யம் சரபேச்வராய

3. களங்க கண்டாய பவாந்தகாய கபால சூலாங்க கராம் புஜாய புஜங்கபூஷாய புராந்தகாய நமோஸ்து துப்யம் சரபேச்வராய

4. சமாதிஷ்டகாய யமாந்தகாய யமாதியோகாஷ்டக ஸித்திதாய உமாதிநாதாய புராதானாய நமோஸ்து துப்யம் சரபேச்வராய

5. த்ருணாதி பாசாஷ்டக வர்ஜிதாய கிலிக்ருதாஸ்மத் பதிபூர்வகாயு குணாதிஹீனாய குணத்ரயா யநமோஸ்துப்யம் சரபேச்வராய

6. காலாதி வேதாம்ருத கந்தலாய கல்யாண கௌதூகல காரணாய ஸ்தூலாய ஸுக்ஷ்மாய ஸ்வருபகாய நமோஸ்து துப்யம் சரபேச்வராய

7. பஞ்சானனாய அகில பாஸ்கராய பஞ்சாததேகர்ண பராசராய பஞ்சாக்ஷரேசாய ஜகத்திதாய நமோஸ்து துப்யம் சரபேச்வராய

8. ஹராய பீமாய ஹரிப்ரியாய பவாய காந்தாய பராத்பராயு ம்ருடாய ருத்ராய த்ரிலோசனாய நமோஸ்து துப்யம் சரபேச்வராயு

இமம் ஸ்தவம் ஜபேத்யஸ்து சரபேசாஷ்டகம் நர:
தஸ்ய நச்யந்தி பாபனி ரிபவஸ்சஸுரோத்தம:

**நமஸ்கார மந்திரம்**

நீலகண்டாய ருத்ராய சிவாய சசிமௌளயே
பவாய பவநாசாய பக்ஷிராஜாய தேநம:
பராத்பராய கோராய சம்பவே பரமாத்மனே
சர்வாய நிர்லாங்காய ஸாலுவாய நமோ நம:
கங்காதராய ஸாம்பாய பரமாநந்த தாயிநே
ஸர்வேச்வராய சாந்தாய சரபாய நமோ நம:
வரதாய வராங்காய வாமதேவாய சூலினே
கிரிசாய கிரீசாய கிரிஜாபதயே நம:

---

# ஏழு நற்குணங்கள்

| | | | |
|---|---|---|---|
| ★ | ஏழ்மையிலும் | ┤ | நேர்மை |
| ★ | கோபத்திலும் | ┤ | பொறுமை |
| ★ | தோல்வியிலும் | ┤ | விடாமுயற்சி |
| ★ | வறுமையிலும் | ┤ | பரோபகாரம் |
| ★ | துன்பத்திலும் | ┤ | தைரியம் |
| ★ | செல்வத்திலும் | ┤ | எளிமை |
| ★ | பதவியிலும் | ┤ | பணிவு |

## பஞ்சாட்சரம் - சிவாயநம (அர்த்தம்)

| | | | |
|---|---|---|---|
| சி | - நிறைந்த இன்பம் | - | சிவம் |
| வா | - இன்பத்தை அறிகின்ற அறிவு | - | அருள் |
| ய | - உயிர் | | |
| ந | - மருள் - திரோதனை சக்தி | - | பாசம் |
| ம | - இருள் - மலம் | - | பாசம் |

# கடமைகள்

1. காலையில் எழுந்தவுடன் கடவுளை இரண்டு நிமிடங்களாவது நினைத்துப் பிரார்த்தனை செய்க.
2. நெற்றியில் திலகம் வைத்துக் கொள்க.
3. அன்றைய நாள் நல்லநாளாக இருக்கவேண்டும் என்று இறைவனிடம் வேண்டிக்கொள்க.
4. வாரத்தில் ஒரு நாளிலாவது – வெள்ளிக் கிழமையிலாவது அருகில் உள்ள திருக் கோயிலுக்குச் சென்று கடவுளை வழிபடுக.
5. உன்பக்கத்தில் வாழ்பவர்களை நேசித்துப் பழகு.
6. சாப்பிடும் முன்பாக மிருகங்களுக்கோ பறவைகளுக்கோ ஆகாரம் அளித்துவிட்டுப் பிறகு சாப்பிடுக.
7. உறங்கச் செல்லும் முன் அன்றைய நாளில் நீ செய்த நல்லவை கெட்டவைகளை நினைத்துப் பார்க்க.
8. ஆண்டவன் நாமத்தை 108 முறை உச்சரித்து விட்டுப் பின்பு உறங்குக.

ஓம் ஸ்ரீ மஹா பத்ரகாளி ப்ரத்யங்கிராயை நமோநம :

# ஸ்ரீ சரப மூர்த்தி போற்றி நூற்றெட்டு

அருட்கவி தவத்திரு சாதுராம் ஸ்வாமிகள்

(உயிர்வர்க்க மாலை)

ராகம்: சங்கராபரணம் தாளம்:திஸ்ரத்ரிபுடை

1. ஓம் அரனான அரியே! போற்றி!
ஆண் எண்காற்புள்ளே! பேற்றி!
ஸிரஸிரு லிங்கம்! போற்றி!
ஸிங்கத்தீர் உடலாய்! போற்றி!
நரஸிங்கம் உரித்தாய்! போற்றி!
நளிர்த்தோலைப் போர்த்தாய்! போற்றி!
சரபமா மூர்த்தி போற்றி! ஸதாசிவா போற்றி போற்றி!

2. ஆளரி ஆணவத்தை அடக்கினாய்! போற்றி போற்றி
கோளரி சரீரா போற்றி
குல விரு சிறைப்புள் போற்றி
தாளரிமகன் துதிக்க ஐநித்தனை போற்றி போற்றி
சாளரிக் கண்ணாய் போற்றி
சரபமே போற்றி போற்றி

3. இடை இருதத்ரி போநந்திருப்பவா போற்றி போற்றி
உடைமாடம்பாக்கம் கோசை உறைபவா போற்றி போற்றி
ஜடை நடராஜர் தில்லை தலத்துள்ளாய் போற்றி போற்றி
தடை இலாச் சிம்புள்! போற்றி
சரபமே போற்றி போற்றி!

4. ஈசனே! பறவை ஏறே! இறைவனே போற்றி போற்றி
நாசமே நரஹரிக்கு நணவைத்தாய் போற்றி போற்றி
பேசுநந் தந தாளம்நின் போர்க்குற்றாய் போற்றி போற்றி
தாஸரைக் காப்பாய் போற்றி
சரபமே போற்றி போற்றி

5. உடம்பிரு ஸிம்மம் போல உடையவா போற்றி போற்றி
திடம்பெறு சிரஸிரெண்டு சிங்கத்தாய் போற்றி போற்றி
உடன்படு மிருகபக்ஷி உருவத்தாய் போற்றி போற்றி
தடஞ்சி றகிண்டாய் போற்றி சரபமே போற்றி!

6. ஊர்கள் பல் லிடத்தாய் போற்றி
உயர்ந்த மந்திரத்தாய் போற்றி
நேர்கொளச் சிங்கத்தைக் கொல்
நின்றிறல் போற்றி போற்றி
போர் செய வல்லாய் போற்றி
புராரியின் புணர்ப்பே போற்றி
தார்கொளும் மார்பா போற்றி
சரபமே போற்றி போற்றி

7. எட்டுக்காற் பறவே போற்றி
இரு தலைப் பட்சி போற்றி
சுட்டுக் காச் சிரம் சிங்கம் போல்
தோற்றுவாய் போற்றி போற்றி
பிட்டுக் காமன்சு மந்தபிரான் பேராய் போற்றி போற்றி
தட்டுப் பாடிலாதாய் போற்றி
சரபமே போற்றி போற்றி

8. ஏகாந்தத் திருப்பாய் போற்றி
எழில் கோசை நகரா போற்றி
ஸ்ரீகாந்த நாராஸிங்கம் செற்றனை போற்றி போற்றி
யோகாந்தர் கருள்வாய் போற்றி
உபாஸ நைக்கரியாய் போற்றி
சாகாந்த் காரீபோற்றி
சரபமே போற்றி போற்றி

9. ஐங்கரற் கப்பா போற்றி அறுமுதற் கத்தா போற்றி
கிங்கரற்க் காப்பாய் போற்றி
கேஸரிப் பகையே போற்றி
பொங்கரப் பூணா போற்றி
புலியூரா போற்றி போற்றி
சங்கரிக் கரசே போற்றி
சரபமே போற்றி போற்றி

10. ஒப்பில ஒருத்தா போற்றி
உறழ்ச்சி மற்றில்லாய் போற்றி
பிப்பிலா ரணியா போற்றி
பிரமன் தாழ் பரமா போற்றி
கைப்பிலா இனிப்பே போற்றி
கடவுளர்க் கியமான் போற்றி
தப்பிலாவடிவே போற்றி
சரபமே போற்றி போற்றி

11. ஓது காஞ்சி புராணத்துறை பெற்றாய் போற்றி
ஸாதுராம்ஸாமி என்பார்த் தமிழ் கேட்டாய் போற்றி போற்றி
மோது போர்பறவைச் சிம்புள் மூர்த்தமே போற்றி போற்றி
சழதர்யா எண்தாள் போற்றி
சரபமே போற்றி போற்றி

12. ஔவியம் இலாதாய் போற்றி
அரசராம் மலாடர்க் கெல்லாம்
செவ்விய குலத்தே போற்றி
ஸிம்மமாம் புள்ளே போற்றி
புவ்வியை ஆள்வாய் போற்றி
போற்றியோ போற்றி போற்றி
ஸவ்விய ஸசி போற்றும்
சரபமே போற்றி போற்றி
ஸ்ரீ சரபமே போற்றி போற்றி

– முற்றும் –

# சிவபுராணம்

திருச்சிற்றம்பலம்



நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!

கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க!
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருள்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க

ஈசன் அடிபோற்றி எந்தைஅடி போற்றி
தேசன் அடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி
ஆராத இன்பம் அருளு மலைபோற்றி
சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பன் யான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழல் இறைஞ்சி
விண்ணிறைத்து மண்ணிறைத்து மிக்காய் விளக்கொளியாய்
எண்இறந்து எல்லை இலாதானே நின்பெரும் சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவரச் சங்கமத்துள்

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டுஇன்று வீடுஉற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே!
வெய்யாய் தனியாய் இயமான னாம்விமலா
பொய்யாய் இனஎல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே

ஆக்கம் அளவு இறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெற்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல் போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே

தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்

பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே!
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே

அன்பருக்கு அன்பனே! யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமயனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே!
கூர்த்தமெய்ஞ்ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே! நுணுக்கரிய நுண் உணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே!
காக்கும்எங் காவலனே! காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக்காய் நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவே என் சிந்தனையுள்
ஊற்றானே உண்ணார் அமுதே உடையானே!
வேற்று விகார விடக்கு டம்பின் உட்கிடப்ப
ஆற்றேன் எம்ஐயா அரனேஓ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்கு ரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தானே தென்பாண்டி நாட்டானே

அல்லல் பிறவி அறுப்பானே ஓ என்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து

★ செயல் சிறிதோ, பெரிதோ, தம்மால் செய்யக்கூடியவற்றைச் சலிப்பின்றிச் செய்பவரே போற்றுதற்குரியவர்.

★ வாழ்நாள் முழுவதும் உழைத்தால்தான் ஒரு துறையில் தனிச்சிறப்பு நிலையை அடையமுடியும். அதற்குக் குறைந்த விலையில் அந்த நிலையை வாங்க முடியாது.

★ உழைப்பின்றி வெற்றி எதுவும் தழைப்பதில்லை. முறையான சிந்தனையால் வெற்றி கிடைக்கிறது. கண்ணுறங்காக் கவனத்தினால் அது காப்பாற்றப் பெறுகிறது.

**– ஜேம்ஸ் ஆலன்**

★ அடக்கமே அறிவுடைமையின் சிறந்த அடையாளம்.

★ மகிழ்ச்சி பொங்குகிற முகத்தைக் கொண்ட ஒருவர் வீட்டினுள் நுழைந்தால், உடனே அந்த வீட்டில் புதியதாக ஒரு ஒளி தோன்றிவிடுகிறது.

**– டீவன்ஸன்**

★ நூறு ஆசான்களுக்கு ஒப்பானவர் பொறுப்பு மிக்க ஒரு தந்தை.

**– இங்கிலாந்துப் பழமொழி**

★ சிக்கனமாகவும் எளிமையாகவும் வாழும் வழியைத் தன் பிள்ளைகளுக்குக் கற்றுத் தரும் தந்தையானவன், அளவற்ற செல்வத்தை விட்டுச் செல்லும் தந்தையை விட மேலானவன்.

**– வில்லியம் பென்**

★ துன்பத்தில் இருப்பவனை உடனே போய்ப்பார். ஆனால் செல்வத்தில் இருப்பவன் கூப்பிட்டால் போ.

★ மன அமைதி, மகிழ்ச்சி, இன்பம் இவை அன்பு, தவம், தியாகம் முதலியவற்றால் அன்றிப் பணத்தால் கிட்டாது.

★ நாம் பெற்ற பொருட் செல்வம் சிறிதளவேயாயினும் அதைக் கொண்டு நாம் திருப்தியுற வேண்டும்.

தொகுப்பு

**A.L. கிருஷ்ணா (எ) கிருஷ்ணமூர்த்தி**

# திருவண்ணாமலை கிரிவலம்

### கிரிவலம் மகிமை

திருவண்ணாமலையை ஒருமுறை சுற்றி வந்தால் (கிரிவலம்)
1கோடி புண்ணியம் கிடைக்கும் - சித்தர்கள் அருள் வாக்கு

### திரு–அண்ணாமலை மகிமை

(அண்ணாமலையார்–அருணாச்சலேஸ்வரர் - அருவம்).
திரு என்பது கடவுளை குறிப்பதாகும்.

அண்ணாமலை என்றால் அருவத்தை குறிப்பதாகும். அருவம் என்பது (நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் பஞ்சமூர்த்திகளாகும்).



இறைவன் (கடவுள்) அருவ நிலையில் இருந்து கொண்டு இப்பூவுலகையும், இப்பூவுலகை மட்டும் அல்லாது இதற்கு மேற்பட்ட கண்ணிற்கு எட்டிய தூரம் வரையிலும், நம் சிந்தனைக்கும் கற்பனைக்கும் அப்பாற்பட்டதும். சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள் இன்னும் பல கிரகங்களையும் படைத்து, காத்து, இரட்சித்து கொண்டு இருக்கிறார். இவைகள் அனைத்தையும் பாதுகாக்க வேண்டும் என்றால் அருவ நிலையில் இருந்தால் மட்டுமே பாதுகாக்க முடியும். அதனால் தான் பெரியவர்கள் இறைவனை அங்கு இங்கு எங்கினாதபடி எங்கும் நீக்கமர நிறைந்த பரம்பொருள் என்று குறிப்பிடுகிறார்கள். இப்படி எங்கும் நிறைந்த பரம் பொருளாகிய இறைவன் அருவமாகிய நிலையில் நம் கண்களுக்கு தெரிகின்ற வகையில் பஞ்ச மூர்த்திகளாகிய நிலம், நீர், காற்று, நெருப்பு பெற்று மலைவடிவமாகவும், ஆகாயத்தை நோக்கி நின்று பஞ்சமுக தரிசனமாகவும், மலை என்ற உருவத்தில் காட்சி கொடுக்கிறார். இவை ஈரேழு பதினான்கு உலகத்திலும், வேறு எங்கும் இல்லாத தனிச் சிறப்பு உடையதாகும்.

இவை மட்டும் அல்லாமல் திரு அண்ணாமலை (மலை-கிரி) சுற்றி வரும் பாதைகளில் இந்திர லிங்கம், அக்னி லிங்கம், எமலிங்கம், நிருதி லிங்கம், வருண லிங்கம். வாயு லிங்கம், குபேர லிங்கம், ஈசான்ய லிங்கம் என்ற எட்டு லிங்கங்கள் இருக்கின்றன. இவைகள் அட்டமாசித்திகளை கொடுக்கும் தன்மை உடையவை.

மேலும் இதன் சிறப்பு அண்ணாமலையாரின் இராஜ கோபுர வாசலில் இருந்து கிரியை சுற்றி வரும் பாதை 14 கிலோ மீட்டர் தூரம் உடையது. இந்த 14 கிலோ மீட்டர் தூரம் சுற்றி வந்தால் ஈரேழு உலகங்களையும் நாம் சுற்றிவந்ததாக பொருள்படும்.

### உண்ணாமுலை அம்மன் மகிமை

ஐயன் பரம்பொருள் அருவத்தில் இருந்து கொண்டு இப்பூவுலகை பஞ்ச மூர்த்திகளாக பிரித்து படைத்தார். அவ்வாறு படைத்த இப்பூவுலகை இமைப்பொழுதும் மாறாமல் இப்பூவுலகில் உள்ள அனைத்து ஜீவராசிகளையும் கண்ணை இமைக் காப்பதுபோல் தாயாகிய உண்ணாமுலை அம்மன் உருவத்தில் இருந்து இரட்சித்துக் காத்துக் கொண்டிருக்கிறார்.

நம் கண்ணுக்குத் தெரிகின்ற அத்தனை காட்சிகளும், உருவங்களும் உண்ணாமுலை தாயின் உருவங்களே ஆகும்.

அருவத்தில் அண்ணாமலையாரும், உருவத்தில் உண்ணாமுலை அம்மாளும் ஓங்காரமாகி, நமசிவாய என்னும் பஞ்சாட்சரத்தையும் பெற்று ஒருங்கே காட்சி கொடுப்பது திருவண்ணாமலையின் தனி சிறப்பு|

இவ்வளவு சிறப்பு வாய்ந்த திருவண்ணாமலைக்கு என்றும் பிறவி இல்லா பெருவாழ்வு கொடுக்கும் 8ம் 2ம் என்ற தீட்சா மந்திரத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இவற்றை பாரம்பரியத்தில் வந்த பெரியோர்களை (ஞான குருநாதர்) அணுகி அவர்களுடைய ஆசீர்வாதத்துடன் தாயின் கருணையும் (உண்ணாமலை அம்மாள்), தந்தையின் அருளும் (அண்ணாமலையார்) கிடைக்கப்பெற்றால், பிறவி இல்லா பெருவாழ்வு என்னும் பேரின்ப நிலையை (ஜீவசமாதி) அடைய முடியும். பக்திமுத்தினால் (அதிகமாக ஆனால்) யோகம் கிடைக்கும், யோகம் கிடைத்தால் ஞானம் நிறைவடையும். ஞானம் நிறைவடைந்தால் சித்திகள் பரிபூரண நிலை அடையும். சித்திகள் பரிபூரண நிலை அடைந்தால் முக்தி கிடைக்கும். (இங்கு முக்தி என்பது உயிரோடு ஜீவ சமாதி நிலையில் உள்ளவர்களையும் நன்றாக உணர்வோடு இருந்து கொண்டு இந்த உடலை (உருவம்) மட்டும் இங்கு விட்டுவிட்டு ஆத்மாவை (அருவம்) வெளியில் உள்ள பரம்பொருள் உடன் ஒன்றர கலப்பவர்கள்.

இவ்வளவு சிறப்பு வாயந்த திருவண்ணாமலையை பெரியவர்கள் நினைத்தாலே முக்தி தரும் திருவண்ணாமலை என்று கூறி இருப்பது எக்காலத்துக்கும் பொருத்தமானதாகும். நினைத்தல் என்பது காற்றுரூபமாக உள்ளது. காற்றின்வேகம் யாராலும் அளவிட முடியாது. அதேபோல் இறைவன் காற்று ரூபத்தில் எங்கும் நிறைவுற்று இருப்பதால் நினைத்தாலே உருவத்தில் உள்ள காற்றானது (உயிர்-ஆத்மா) அருவத்தில் உள்ள காற்றாகிய பரம்பொருள் (பரமாத்மா) உடன் ஒன்றாக கலப்பதால் இதனை பெரியவர்கள் நினைத்தாலே முக்தி தரும் திருவண்ணாமலை என்று சூசகமாக கூறி இருக்கிறார்கள்.

### கிரிவலம் சுற்றி வருவதற்கு சிறந்த நாட்கள்

இறைவனால் (இயற்கை) படைக்கப்பட்ட அனைத்து நாட்களும் சிறந்த நாட்கள்தான். இருப்பினும் ஒவ்வொரு நாட்களுக்கும் ஒவ்வொரு சிறப்பு உண்டு.

(எ-கா) மனிதன் அதிக அற்புதங்கள், அதிசயங்கள் நிறைந்த இப்பூவுலகில் ஜனனம் (பிறந்தநாள்) எடுத்த நாளையே அவர்களுடைய சிறந்த நாள் என்று கொண்டாடுவது போல், இறைவனும் சில தினங்களை அதிக சக்தி வாய்ந்த, அற்புதமான நாளாக உருவாக்கி உள்ளார். அவற்றில் சிறந்தது அமாவாசை (அருள்) மற்றும் பௌர்ணமி (பொருள்) நாட்கள். மேலே கூறிய இரண்டு நாட்களும் இறைவனுக்கு பிடித்தமான நாட்கள் ஆகும். இந்த இரண்டு கருத்துக்களையும் ஒப்பிட்டு பார்த்தாலே இறைவனும்–மனிதனும் ஒன்றே என்பது நன்றாகபுரியும்.

### பொருள் தரும் பௌர்ணமி (கிரி வலம்)

கிரி வலம் வருவதற்கு மற்றொரு சிறந்த நாள் பௌர்ணமி. அன்று முழு சந்திரன் மூலம் தாயானவள் உலகத்தில் உள்ள அனைத்து ஜீவராசிகளையும் கருணை கண் கொண்டு காத்து இரட்சித்து அருள் செய்கிறாள்.

பௌர்ணமி தினத்தன்று கிரிவலம் வருபவர்களுக்குப் பொருள், நோய் இல்லாத வாழ்க்கை, நினைத்த காரியம் போன்றவைகள் கைகூடும். மேலே கூறிய அனைத்து இடங்களையும் சரியாக செய்து கிரிவலம் வந்தால் பலன் கிடைக்கும்.

### கிரிவலம் வரும் போது கடைபிடிக்க வேண்டியவை

1. ஆண்கள் (அமாவாசை அன்று) காவி வேட்டியும், காவி துண்டும் அணிந்து, சட்டை அணியாமல் வெறும் உடம்புடன் கிரிவலம் வருவது மிகுந்த நன்மை தரும். (கழுத்தில் ருத்ராட்சம் மாலை அணிவது தனி சிறப்பு)
2. பெண்கள் (அமாவாசை அன்று) செவ்வாடை அணிந்து கிரிவலம் வருவது நன்மை ஆகும்.
3. ஆண்கள் (பௌர்ணமி அன்று) பச்சை வேட்டி அல்லது வெண்ணிறமான கதர் வேண்டி (அ) பச்சை வேட்டி அணிந்து கிரிவலம் வருவது மிகுந்த நன்மை தரும்.
4. பெண்கள் (பௌர்ணமி அன்று) பச்சை ஆடை அணிந்து கிரிவலம் செய்வது மிகவும் சிறப்புடையதாகும்.

5. ஒவ்வொரு ஆணும், பெண்ணும் எலுமிச்சம்பழம் கையில் வைத்து கொண்டு (எலுமிச்சை பழத்தில் கருப்பு பள்ளிகள் மற்றும் காயாக இருக்ககூடாது. எலுமிச்சை காயாக இருந்தால் பலன் கொடுக்காது பழமாக இருத்தல் வேண்டும்.

எலுமிச்சை பழத்தின் மகிமை, (எழும்+இச்சை) மனதில் எழுகின்ற ஆசைகளை நினைத்துக் கொண்டு அத்துடன் கிரிவலம் வந்தால் கிரிவலம் முடிந்ததும் நம் இச்சைகளை (ஆசைகளை) பரம்பொருள் நிறைவேற்றி தருவார் என்பது அனுபவத்தில் கண்ட உண்மை. அவ்வாறு எடுத்துவரும் எலுமிச்சம் பழத்தை வீட்டில் பூஜை அறையில் அல்லது வியாபாரம் செய்யும் இடத்தில் வைத்தால் மிகுந்த பலன் கொடுக்கும். எதிர்ப்பு சக்திகளை அறவே நீக்கும் சக்தி கொண்டது.

6. ஊதுபத்தி ஏற்றிக்கொண்டு கிரிவலம் வருவதால் நல்ல எண்ணங்களை மனதில் நினைப்பதுடன் (ஊதுபத்தி நறுமணம் போல்) வாழ்க்கையில் இறைவன் நமக்கு நறுமணம் போன்ற வாழ்க்கை அமைத்துக் கொடுப்பார். தீய எண்ணங்கள் வராது ஊதுபத்தி நறுமணம் தீய எண்ணங்களை தடுக்கும் சக்தி வாய்ந்தது.

7. கற்பூரம் அவசியம் ஏற்ற வேண்டும். எவ்வளவு கற்பூரம் ஏற்றுகிறோமோ உள்ளே உள்ள ஜீவாத்மா வெளியே உள்ள பரமாத்மா உடன் ஒன்றர கலப்பதற்கு இந்த கற்பூரமே சாட்சியாகும். கற்பூரம் எவ்வளவு சுடர்விட்டு எரிந்து சிறிது சிறிதாக காற்றோடு காற்றாக கலக்கின்றதோ அதேபோல், நம்முடைய தீய வினைகள் எல்லாம் சுட்டெரிந்து காற்றோடு கலந்து, நன்மைகள் கிடைக்க வழி செய்யும்.

8. கற்பூரம் ஏற்றியதும் இரண்டு கைகளையும் தலைக்குமேல் குவித்து வணங்க வேண்டும். அவ்வாறு வணங்குவது உருவத்தில் உள்ள ஆத்மாவையும் அருவத்தில் உள்ள பரமாத்மாவையும் சேர்த்து வணங்குவதாக பொருள்படும். நெற்றிக்கு நேராக நமஸ்காரம் செய்தால் ஆக்ஞாவில் உள்ள (சுழிமுனை) ஜீவாத்மாவாகிய ஆதி சக்தியை வணங்குவதாக பொருள்படும். நெஞ்சுக்கு நேராக நமஸ்காரம் செய்வதால் இதய கமலத்தில் வீற்றிருக்கும் மகேஸ்வரன், மகேஸ்வரியை வணங்குவதாக பொருள்.

பொருள் அறிந்து அதன்படி நமஸ்காரம் செய்தால் பலன் கிடைக்கும்.

9. அமாவாசை – பௌர்ணமி திதி எப்பொழுது ஆரம்பமாகிறது என்று சரியாக பார்த்து இரவு 12 மணிக்கு முன்னதாக திதி முடிகிறது என்றால் முதல்நாள் அதிகாலையிலும், மாலையிலும் சுற்ற வேண்டும். இரவு முழுவதும் திதி இருந்தால் அந்த இரவில் கிரிவலம் வருவது அதி அற்புத பலன் கொடுக்கும். அமாவாசை தினத்தன்று தனியாக சுற்றுபவர்கள் பல அற்புதங்களையும், அறிய சக்திகளையும் அவரவர்கள் நிலைக்கு ஏற்ப பார்க்கலாம், அறியலாம் இவை திருவண்ணாமலையின் மகிமை.

10. கிரிவலம், காலணி போடாமல் சுற்ற வேண்டும். வயதானவர்கள், குழந்தைகள், நோயுள்ளவர்கள். நடக்க முடியாதவர்கள் மட்டும் வாகனத்தில் கிரி சுற்றலாம். மற்ற அனைவரும் வெறும் காலுடன் நடந்து கிரிவலம் வந்தால்தான் மகிமை. பலன் கிடைக்கும்.

11. கிரிவலம் வரும்போது அமைதியாக பஞ்சாட்சர தியானத்தை பயன்படுத்தி கொண்டு வாய் அசைவே இல்லாமல் உள்ளே தியானம் செய்துகொண்டு கிரிவலம் வருவது அதிக அற்புத பலன் கொடுக்கும்.

12. அமாவாசை தினத்தன்று கிரிவலம் வரும்போது ஒரு முறை பயன் படுத்தும் பஞ்சாட்சர மந்திரம் (தியானம்) ஒரு இலட்சமாக மாறும். பௌர்ணமி தினத்தன்று 50 ஆயிரமாகவும், பலன் கொடுக்கும். மற்ற நாட்களில் ஒரு முறை தான் பலன் கொடுக்கும்.

13. கிரிவலம் முடித்து அண்ணாமலையார், உண்ணாமுலையம்மாள் தரிசனம் முடித்து நேராக அவரவர்கள் அவரவர்கள் வீட்டிற்கு சென்றால் முழு பலனையும் வீட்டிற்கு கொண்டு சேர்க்கலாம்.

அவ்வாறு இல்லை எனில் எல்லா இடங்களையும் சுற்றி விட்டு கடைசியாக வீட்டிற்குச் சென்றால் ஒரு பலனும் கிடைக்காது.

14. கிரிவலம் சுற்றும்போது ஒரு சிந்தனையுடன் என்ன காரியத்திற்காக கிரிவலம் போகிறீர்களோ அதே சிந்தனையுடன் கிரிவலம் வர வேண்டும். அவ்வாறு இல்லாமல் நண்பர்களுடன் சேர்ந்து கதை, கேளிக்கை போன்ற செயல்களில் ஈடுபட்டு கொண்டு கிரிவலம் வருவதால் பலன் கிடைக்காது. அதனுடன் மற்றவர்கள் தியானத்திற்கு இடையூறு இருப்பதால் மேலும் பாவங்கள் வந்து சேரும் என்பது உண்மை.

15. பரம்பரையில் வந்த நல்ல குருநாதர்களிடம் (ஞானாசிரியர்) சீவதிட்சை பெற்று கொண்டு கிரிவலம் வந்தால் பிறவியில்லா பெருவாழ்வு என்னும் பேரானந்தம் நிலை கிடைக்கும். மேலும், பல அற்புதங்கள், அதிசயங்கள் கண்கூடாக ஒவ்வொருவரும் பார்க்கலாம். உணரலாம்.

16. அமாவாசை அன்று கிரிவலம் வரும் ஜீவாத்மாக்களின் முற்பிறப்பின் பலன், இப்பிறப்பின் பலன், அடுத்த பிறப்பின் பலன் மூன்று கணக்கிட்டு அதற்கு தகுந்தாற்போல் அருள் கிடைக்கப்பெறுவர். முற்பிறவியில் செய்தவற்றை சரிசெய்து, அடுத்த பிறவி என்று ஒன்று இருந்தால் அதற்கு தேவையான அருளை சேமித்து வைத்துவிட்டு அதற்கு பிறகுதான் இப்பிறப்பிற்கு பலன் கிடைக்கும். அதனால் அவரவர்கள் பிறப்பிற்கு ஏற்ப காலதாமதம் ஆகும். ஆனால் பலன் கட்டாயம் உண்டு. பௌர்ணமி அன்று கிரிவலம் வந்தால் முற்பிறப்பு மற்றும் அடுத்த பிறப்பு கணக்கில் எடுக்காமல் நடக்கின்ற பிறப்பில் தகுதிக்கு ஏற்ப கரும பலனுக்கு தகுந்தார்போல் உடனுக்குடன் பலன் கிடைக்கும். மேலே உள்ள அனைத்தையும் நன்கு படித்து உணர்ந்து ஏகமனத்தோடு பரம்பொருளை நினைத்து கிரிவலம் வந்தால் அனைத்து காரியங்களும் சித்தியாகும். இவை அனைத்தையும் அனுபவப்பூர்வமாக கண்ட உண்மை.

ஒவ்வொரு ஜீவாத்மாவும் பரமாத்மாவில் குடிகொண்டு இருக்கிறது. ஆகையால் ஒவ்வொரு ஜீவாத்மாவும் பரமாத்மாவே என்பது உண்மை. ஆகையால் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்பதை உணர்ந்து அந்த பரம்பொருளின் (பரமாத்மாவில்) பாதகமலங்களில் கோடிக்கணக்கான மலர்களால் இந்த ஜீவாத்மா அர்ச்சனை செய்து மஹா குரு சன்னிதானத்தின் ஆசீர்வாதமும், தாயின் கருணையும், தந்தையின் (பரம்பொருள்) அருளும் அனைவருக்கும் கிடைத்திட என்றும் அருவத்திலும் உருவத்திலும் கலந்துநின்ற பரம்பொருளை தாழ்ந்து பணிந்து வணங்குவோம்.

## சகல இந்துக்களுக்கும் இகபர - க்ஷேமம் தரும் சுலபமான வழிகள்

1. அவரவர் ஸம்ப்ரதாயப்படி பளபளவென்று நெற்றியில் விபூதி, சந்தனம் முதலியவைகளை எப்பொழுதும் தரித்திருத்தல்; இரவில் இது மிகமிக அவசியம்.
2. தினமும் தூய மனத்துடன் சில நிமிஷங்களாவது பகவந்நாம ஜபம்செய்தல்; அடிக்கடி "ஸர்வே ஜநாஸ் ஸுகிநோபவந்து" என்று உள்ளம் உருகி ப்ரார்த்தித்தல்.
3. இயன்றவரை பிறருக்கு உதவுதல்.
4. உபநயனம், விவாஹம், பூஜைகள் போன்றவைகளில் மந்த்ரங்களைச் சரியாக உச்சரித்தல்.
5. த்ரிமதஸ்தர்கள் காலை ஸந்த்யாவந்தனம், மாத்தியான்னிகம், மாலை ஸந்த்யாவந்தனம் இவைகளைத் தவறாமல் (சுருக்கமானாலும் சரி) செய்தல்.
6. வைதிக காரியங்களைச் செய்யும்போதும், கோயில்களுக்குப் போகும்போதும் பெரியோர்களை ஸேவிக்கும் போதும் கலியாணமானவர்கள் கச்சத்துடன் வேஷ்டி தரித்தல்.
7. சாஸ்திரி ப்ருஹஸ்பதிகளையும், தேவவித்துக்களையும் தக்கபடி கௌரவித்தல்.

# சிவாலய வழிபாட்டு முறை

எப்பணிக்கும் ஓர் செய்முறை உண்டு. அம்முறைப்படி அப்பணியை செய்தால்தான் அப்பணி பயனுள்ளதாய் அமையும். அது போல் ஆலய வழிபாட்டிற்கும் ஓர் முறை உண்டு. ஆகையால் அடியார்கள் இறையன்போடு சிவாலயம் சென்று முறைப்படி இறைவனை வழிபட்டுய்ய உதவியாக இருக்குமென்று இது எழுதப் பெற்றுள்ளது. முறைப்படி சிவாலய வழிபாடு செய்து இறைவன் அருளுக்குப் பாத்திரமாகுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

1. சிவாலய வழிபாட்டிற்குப் புறப் படுமுன் மனதிலுள்ள எல்லாச் சிந்தனை களையும், கவலைகளையும் அகற்றிவிட வேண்டும். கால்கள், கைகள், முகம் நீரால் கழுவிச் சுத்தம் செய்து, தூய உடையுடுத்தி, திருநீறு உத்திராட்சம் முதலிய சிவ சின்னங்களைத் தரித்துக் கொண்டு செல்ல வேண்டும்.

2. ஆலயம் செல்லும்போது மலர்கள், தேங்காய், பழம், சூடம், ஊதுபத்தி, தீபத்திற்கு எள் எண்ணை அல்லது நெய் இவைகளில் ஏதேனும் ஒன்றை எடுத்துச் செல்ல வேண்டும். மாதா, பிதா, குரு, தெய்வம், வயோதிகர்கள், குழந்தைகள், நோய்வுற்றோர், கர்பிணிகள் இவர்களைப் பார்க்கச் செல்லும் போது வெறும்கையுடன் செல்லலாகாது என்பது விதி.

3. கோபுர வாயிலை அடைந்ததும் இருகைகளையும் தலைக்கு மேல் உயர்த்திக் கோபுரத்தை வணங்க வேண்டும்.

4. கோபுர வாயிலில் வலது புறமிருக்கும் துவார வினாயகரை வணங்கிய பிறகே ஆலயத்திற்குள் செல்ல வேண்டும்.

5. ஆலயத்திற்குள் சென்று பலிபீடத்திற்கு முன்பாக பூமியில் அஷ்டாங்கமாகப் பணிந்து வணங்க வேண்டும்.

6. பலிபீடத்தைக் கடந்து கோயிலுக்குள்ளே சென்றுவிட்டால் திரும்பி வந்து மறுமுறை பலிபீடத்தின் முன் வணங்கும் வரை கோவிலுக்குள் எந்த இடத்திலும் ஆண் பெண் இருபாலரும் அஷ்டாங்கமாகப் பூமியில் பணிந்து வணங்கக் கூடாது. இருகைகளை மட்டிலுமே கூப்பி வணங்க வேண்டும். கோயிலுக்குள் பெரியவர்களையோ, துறவிகளையோ, கண்டால் அவர்களையும் பூமியில் பணிந்து அஷ்டாங்க வணக்கம் செய்தல் கூடாது. கைகளை கூப்பி மாத்திரமே வணங்க வேண்டும். கோவிலுக்குள் தன்னைத்தானே சுத்திக் கொள்வதும் (ஆத்மப்ரதக்ஷணம்) கூடாது.

7. பலிபீடத்தைக் கடந்து நந்தியம் பெருமானை வணங்கி அவரிடம் உத்திரவு பெற்று இறைவன் முன் செல்ல வேண்டும். நந்திக்கும் கருவறை யிலுள்ள லிங்கத்திற்கும் இடையே குறுக்காகப் போக கூடாது. ஆனால் பெரிய கோவில்களில் நந்திக்கும் லிங்கத்திற்கும் உள்ள இடைவெளி வெகு நீண்டிருக்குமாதலால் இது தவிர்க்க முடியாததாகி விடும். அதற்காக லிங்கம் இருக்கும் கருவறைக்கு முன்னுள்ள மகாமண்டபத்தில் ஒரு சிறிய நந்தி வைத்திருப்பார்கள் அந்த நந்திக்கும் லிங்கத்திற்கும் இடையில் குறுக்கே போகக்கூடாது.

8. செல்லும் வழியிலுள்ள துவார பாலகர்களைக் கை கூப்பி வணங்கிச் செல்ல வேண்டும்.

9. இறைவனின் முன்னிலையை அடைந்ததும் இறைவனை வணங்க வேண்டும். அர்ச்சகர் கொடுக்கும் திருநீறு, குங்குமம் இவைகளை இருகைகளாலும் வாங்கி தலையை அண்ணாந்து கொண்டு நெற்றியில் பூசிக் கொள்ள வேண்டும். இவை தரையில் விழாமல் தன் இருதோள்களிலுமே விழும்படி அணிய வேண்டும். மிகுதியை உடலில் பூசிக் கொள்ள

வேண்டும். கீழே போடுதல் வாயால் ஊதி காற்றில் விடுதல் போன்ற செய்கைகளைத் தவிர்க்க வேண்டும்.

10. அதன்பின் சோமாஸ்கந்தர், நடராஜர் முதலிய மூர்த்திகளை வணங்கி விட்டு ப்ராகாரத்திற்கு வரவேண்டும்.

11. பிராகாரத்தில் தக்ஷிணாமூர்த்தி, நால்வர், வினாயகர், முருகன், சரஸ்வதி, இலக்குமி, துர்க்கை முதலிய மூர்த்திகளை முறைப்படி வணங்க வேண்டும்.

12. அதன்பின் சண்டிகேசுவரரை வணங்க வேண்டும். சண்டிகேசுவரர் சன்னதியில் கையைத் தட்டுவது, துணியிலிருந்து நூலை எடுத்துப் போடுவது முதலியவைகளை செய்யக் கூடாது. சண்டிகேசுவரர் ஆலயத்திலுள்ள எல்லா சொத்துக்களுக்கும் பொறுப்பாளர். ஆதலால் அவரிடம் அடியேன் ஒன்றும் எடுத்துப் போகவில்லை வெறுங்கையுடன் தான் போகிறேன் என்பதற்கு அடையாளமாக இருகைகளையும் பிரித்துக் காட்டி விட்டு சிவதரிசனம் செய்தபலனை அடியேனுக்கு தரவேண்டும் என்று வேண்டிக் கொண்டு, அங்கிருந்து அம்மன் சன்னதிக்குச் செல்ல வேண்டும்.

13. அம்மையை வணங்கி பிரசாதம் (குங்குமம்) பெற்று அங்கிருந்து நவக்கிரகங்கள் இருக்குமிடம் வரவேண்டும்.

14. நவக்கிரகங்களை 9 முறையாவது அல்லது 3 முறையாவது வலம் வந்து வணங்கிப் பின் பைரவரை வணங்க வேண்டும். சிலைகளைக் கையால் தொட்டுத் தொட்டு கும்பிடுதல் கூடாது. அதன் பின் பலிபீடத்திற்கு முன் வரவேண்டும்.

15. பலிபீடத்திற்கு முன் மறுமுறை இறைவனைத் தொழுது விண்ணப்பித்து, அஷ்டாங்கமாக பூமியில் படிந்து வணங்கி எழுந்து சற்று விலகி ஓரிடத்தில் நன்றாக உட்கார்ந்து கொண்டு சிவ நாமத்தை 108 தடவை அல்லது முடியும் வரை மனத்திற்குள் தியானம் செய்ய வேண்டும். பிறகு எழுந்து நந்தி எம்பெருமானை கைகூப்பி வணங்கி விட்டு ஆலயத்தை விட்டு அகல வேண்டும்.

16. ஒவ்வொரு சன்னதியிலும் துதித்து வணங்க திருமுறைகளில் இருந்து பதிகங்கள் இத்துடன் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. அவைகளல்லாமலும் வேறு தெரிந்த, அந்த சன்னதிக்கு தகுந்த பதிகங்களைப் பாடித் துதிக்கலாம். ஆனால் பிறர் அமைதிக்குப் பங்கம் வராமல் செய்ய வேண்டும்.

17. இறைவன், தேவி இவர்களின் கோயிலை மும்முறையாவது வலம் வரவேண்டும்.

18. ஆலயத்திற்குள் நுழைந்தது முதல் ஆலயத்தை விட்டு வெளியே வரும் வரையில் மனதிற்குள் சிவபுராணத்தையோ, சிவ நாமத்தையோ, முருகன் திருநாமத்தையோ அல்லது உள்ளன்புள்ள வேறு எந்த தெய்வத்தின் நாமத்தையோ ஓதிக் கொண்டிருக்க வேண்டும். அப்படிச் செய்வது, மனம் வேறு எங்கும் செல்லாமல் இறைவனிடம் ஒன்றியிருக்க உதவும் ஓர் நற்பயிற்சியாகும்.

19. ஆலயத்திற்குள் தேங்காய், ஓடு, வாழைப்பழத்தோல் போன்றவைகளை கண்ட இடங்களில் போடக் கூடாது. அதற்கென வைத்திருக்கும் தொட்டி அல்லது கூடையில் போட வேண்டும் ஆலயத்திற்குள் சாப்பிடுதல் முதலியவைகள் செய்து எச்சிலாக்கக்கூடாது. கோவிலுக்குள்ளேயே சாப்பிட நேர்ந்தால் அந்த இடத்தை உடனே சுத்தம் செய்திட வேண்டும். கோவிலுக்குள் எச்சில் துப்புவது கூடாது. நம் அகம், புறம் இரண்டையும் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பது போல இறைவனின் அகத்தின் தூய்மைக்குப் பங்கம் வராமல் நாம் நடந்து கொள்ள வேண்டியது நம் கடமையாகும். இந்த விதிகள் அனைத்தும் ஆலய வழிபாட்டிற்கும் பொருந்தும்.


தொகுப்பு

திரு. K. லக்ஷ்மிகாந்தன்,
திரு. A.L. கிருஷ்ணா (எ) கிருஷ்ணமூர்த்தி
திரு. E. சேகர்
திரு. G. கன்னியப்பன்
திரு. M. ராதாகிருஷ்ணன்

# பிரதோஷ மகிமை

பிரதோஷம் என்பது ஜீவர்கள் முற்பிறப்பிற் செய்த குற்ற நீக்கமாகும். பிரதோஷ விரதம் சிவபெருமானுக்குரிய விரதங்களுள் ஒன்று. மாதந்தோறும் உண்டாகின்ற சுக்கிலபட்சம் என்னும் வளர்பிறைக் காலத்திலும், கிருஷ்ண பட்சம் எனப்படும் தேய்பிறைக் காலத்திலும் உண்டாகின்ற பதின்மூன்றாம் நாளைப் பிரதோஷ காலம் என்பர்.



தேவர்களும் அசுரர்களும் அமுதம் பெறுவதற்காகத் திருப்பாற் கடலைக் கடைந்தபோது மந்திரமலையை மத்தாகவும், வாசுகிப் பாம்பைக் கயிராகவும் கொண்டார்கள். இரு பகுதியாரும் வேகமாகக் கடைந்த வேகத்தால் வேதனையுற்ற வாசுகி, ஆலகாலம் என்னும் விஷத்தைக் கக்கிற்று, அந்த விஷம் அருகில் நின்றவர்களை எரித்துத் தகித்துத் துன்புறுத்தியபோது அங்கே நின்ற திருமாலின் நிறத்தையும் நீலமாக்கி விட்டது. விஷத்தின் வேதனையைத் தாங்க முடியாது தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டபோது: அவர் சுந்தரரை அனுப்பி விஷத்தை எடுப்பித்து அடக்கி உண்டு தமது கண்டத்தில் நிறுத்தி நீலகண்டராயினார். இது மற்றவர் வாழ சிவன் நஞ்சுண்ட வரலாறு. இதனை நினைவுபடுத்தும்நாள் ஏகாதசி விரத நாளாகும். விஷத்தின் வேதனை ஒழிந்தபின் தேவர்களும் அசுரர்களும் தொடர்ந்து திருப்பாற்க் கடலைக் கடைந்து சகல செல்வங்களையும் பெற்றுத் தம்முட் பகிர்ந்து, அங்கே எழுந்த அமுதத்தையும் உண்டு இறவாநிலை எய்தினர். அமுதம் தோன்றிய நாள் துவாதசி என்னும் பன்னிரண்டாம் நாளாகும். அது விடியற்காலை நேரமாயிருந்தது. அமுதமுண்ட தேவர்கள் ஆடிப்பாடி மகிழ்ச்சிப் பெருக்கில் பன்னிரண்டாம் நாளைப் போக்கியபின், பதிமூன்றாம் நாள் விடிந்தது.

தேவர்கள் தங்களுக்கு வாழ்வளித்த இறவாப் பெருமை தந்தருளிய சிவபெருமானுக்கு முன்னமேயே வணக்கஞ்செய்து வழிபட மறந்தனர். தங்கள் குற்றத்தைப் பதின்மூன்றாம் நாளில் திரயோதசி தினத்தில் உணர்ந்தனர். கருணைக்கடலாகிய நீலகண்ட மகாதேவரிடம் சென்றனர். குற்றத்தைப் பொறுத்தருளி ஆட்கொள்ளுமாறு இரந்து பணிந்து உருகிநின்றனர்.

வழிபாட்டுக்கு இரங்கியருளும் கருணா மூர்த்தியாகிய சிவபெருமான் தேவர்கள் கண்டு களிக்குமாறு அம்பிகையோடு எழுந்தருளித் தமது நந்தி தேவரின் இரு கொம்புகளுக்கும் இடையில் தேவர்கள் காணுமாறு தமது ஒப்பில்லாத திருநடனத்தைச் செய்தருளினார். சிவபெருமான் திருநடனஞ்செய்தருளிய வேளை திரயோதசி என்னும் பதின்மூன்றாம் நாள் மாலைப் பொழுதாகும். அதுவும் ஏறக்குறைய 4.30 – 6.00 மணி எனக் கணக்கிடக்கூடிய வேளையாகும். அவ்வேளை பாவத்தைப் போக்கிய வேளை எனவே பிரதோஷம் எனப்படலாயிற்று. அது ரஜனீமுக வேளை எனப்படும். அது மஞ்சள் வெயில் காயும் பொழுதாகும்.

தேவர்கள் நந்தி தேவரின் கொம்புகளுக்கு இடையில் இறைவன் திருநடனத்தைக் கண்டு அருள் பெற்றுப் பாவம் நீங்கினார்கள். எனவே நாம் முற்பிறவிகளிலும், இளமையிலும் செய்த பாவங்களை நீக்கியருளுமாறு எல்லாம் வல்ல இறைவனைப் பணிந்து பாவ மன்னிப்பும் பேரருளும் பெற்றுப் பெரும் பேறெய்தி இன்புற்று பெருவாழ்வு வாழ்வதற்கு பிரதோஷ வேளை மிகவும் மேலானதாகும். இந்த உடம்பு வசதியாகவும் வாய்ப்பாகவும் இருக்கும்போதே நாம் வழிபாடு செய்து பயனடையவேண்டும்.

பிரதோஷ காலத்து வழிபாடு பரார்த்தமாகவும் பயன்தருவது. நமக்காகவன்றி நம் குடும்பத்தாருக்கும் நம்மைச் சேர்ந்தவர்களுக்கும் அவ்வழிபாடு பயன் தருவதாகும். பிரதோஷ காலத்திலே நியமமாக மெய்யன்போடு சிவ தரிசனம் செய்து கொண்டவரின், கடன் வறுமை, நோய், பயம், கிலேசம், அவமிருத்து மரணவேதனை, பாவம் என்னும் இவைகள் நீங்கும்.

சிவபெருமானுக்குரிய விசேஷ விரதமாகிய பிரதோஷத்தைப் பற்றி சகலாகம சங்கிரகம். உத்தரகாரணம், பிரமோத்திரம் காண்டம், சிவ தருமோத்திரம் முதலிய பெரிய நூல்களில் விபரமாகக் கூறப்பட்டுள்ளது.

**பிரதோஷ விரதமுறை**

பிரதோஷ விரதம் அனுஷ்டிப்போர் அன்று காலை நித்திரைவிட்டெழுந்து காலைக்கடன் கழித்து நீராடித் தூய்மையாகச் சிவாலயத்துக்குச் சென்று வழிபட்டு, அன்று நல்ல வழியில் அருள் நூல்களையும் தேவார திருவாசகங்களையும் ஓதிக்கொண்டிருத்தல் நன்று. அன்று மாலை சிவாலயத்துக்குச் சென்று சுவாமிக்கும், அம்பாளுக்கும் இயன்றவரையில் அபிஷேகம், அர்ச்சனை ஆகியன செய்வித்து அலங்காரம், நிவேதனம் ஆகியவற்றுக்குத் தம்மாலானவரை உதவி, உபகரித்துத் திருவிழாப் பொழிவு கண்டல் வேண்டும். மூன்று தரமாயினும் ஐந்து தரமாயினும் திருவீதியை வலம் வந்து வணங்குதல் வேண்டும்.

சுவாமிக்கு முன் எழுந்தருளியிருக்கும் இடப தேவருக்கு அறுகம்புல் மாலையுதவி, சிவப்பு அரிசி நிவேதிக்கக் கொடுத்து, நெய் விளக்கு எரிக்கச் செய்தல் நன்று. ஆலயத்து மூலஸ்தானத்தில் எழுந்தருளியுள்ள சிவலிங்கப் பெருமானைப் பிரதோஷ தினத்தன்று இடபதேவரின் இரு கொம்புகளுக்கு இடையிற்கண்டு வணங்குதல் முறையாகும். இறைவனை வணங்கியபின் ஓரிடத்திலிருந்து இயன்றவரை திருவைந் தெழுத்து என்னும் பஞ்சாட்சரம் உச்சரித்துத் தானதருமஞ் செய்து வீட்டுக்கேகி உபவாசம் இருத்தல் உத்தமம். அஃதியலாதவர் பிரதோஷ காலம் கழிந்தபின் தமக்கு ஆகாரமாக ஏதேனும் சிறிதளவு உட்கொண்டு, அடுத்தநாள் காலை பாரணை செய்து கொள்ளலாம்.

**பிரதோஷ காலத்தில் செய்யக்கூடாதவைகள்**

போசனம், சயனம், ஸ்நானம், விஷ்ணு மற்றும் இதர தேவதா தரிசனம், எண்ணெய் தேய்த்தல், வாகனமேறல், நூல் படித்தல் என்பனவாகும்.

**சனிப் பிரதோஷம்**

சிவபெருமான் தேவர்களின் குற்றத்தை மன்னித்தருளி அவர்களுக்குத் தம் திருநடனத் திருக்காட்சி கொடுத்தருளியமை ஒரு சனிக்கிழமையோடு கூடியபிரதோஷம், ஆகையால் சனிப்பிரதோஷம் மிக மேலானது என்பர். எனவேதான் பிரதோஷ விரதம் அனுஷ்டிக்கத் தொடங்குவோர் ஒரு சனிப் பிரதோஷத்தில் ஆரம்பித்து ஒரு சனிப்பிரதோஷத்தில் நிறுத்திக் கொள்ளுதல் வழக்கமாயிருக்கிறது. அத்தகைய சனிப் பிரதோஷமும் சித்திரை, வைகாசி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய மாதங்களில் வருவதாயின் மிக மிக நன்றாகும்.

## வெக்காளியம்மனுக்கு மாதந்தோறும் நடைபெறும் அபிசேஷகமும், நிவேதனமும்

| | |
|---|---|
| சித்திரை மாதம் | மருவு, மரிக்கொழுந்து |
| வைகாசி மாதம் | முப்பழம் அபிஷேகம் |
| ஆனி மாதம் | சந்தனம், பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ அபிஷேகம் |
| ஆடி மாதம் | பால் அபிஷேகம் |
| ஆவணி மாதம் | எள்ளுடன் கலந்த சர்க்கரை |
| புரட்டாசி மாதம் | அப்பம் |
| ஐப்பசி மாதம் | அன்ன அபிஷேகம் |
| கார்த்திகை மாதம் | ஜ்யோதி |
| மார்கழி மாதம் | பசும்நெய் அபிஷேகம் |
| தை மாதம் | தேன் அபிஷேகம் |
| மாசி மாதம் | க்ருதய கம்பளம் |
| பங்குனி மாதம் | பசுந்தயிர் அபிஷேகம் |

ஸ்ரீ விருஷப தேவர் அருளிச் செய்த

## ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்

1. அகணித குணகண மப்ரமேயமாத்யம்
ஸகல ஜகத் ஸ்திதி ஸம்யமாதி ஹேதும்!
உபரத மனோயோகி ஹ்ருந் மந்திரம்தம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே

2. நிரவதி ஸுகம் இஷ்ட தாதார மீட்யம்
நதஜன மநஸ்தாப பேதைக தக்ஷம்
பவ விபிந தவாக்னி நாமதேயம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே

3. த்ரிபவன குரும் ஆகமைகப்ரமாணம்
த்ரி ஜகத்காரண ஸூத்ரயோக மாயம்
ரவி சத பாஸ்வரம் ஈஹித ப்ரதானம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே

4. அவிரத பவ பாவனாதி தூரம்
பத பத்மத்வய பாவினா மதூரம்
பவ ஜலதிஸுதா ரணரங்க்ரி போதம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே

5. க்ருத நிலய மநிசம் வடாக் மூலே
நிகம சிகா வ்ராத போதிதைக ரூபம்
த்ருத முத்ராங்குளி கம்ய சாரு போதம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே

6. த்ருஹிண ஸுத பூஜிதாங்க்ரி பத்மம்
பத பத்மாநத மோக்ஷ தாந தக்ஷம்
க்ருத குருகுல வாஸயோகி மித்ரம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே

7. யதி வர ஹ்ருதயே ஸதா விபாந்தம்
ரதிபதி சதகோடி ஸுந்தராங்க மாத்யம்
பரஹித நிரதாத்மனாம் ஸுஸேவ்யம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே

8. ஸ்மித தவள விகாஸிதா நாப்ஜம்
ச்ருதி ஸுலபம் வ்ருஷபாதிரூட காந்திம்
ஸித ஜலஜ ஸுசோப தேஹ காந்திம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே

9. வ்ருஷப க்ருதமிதம் இஷ்ட ஸித்திதம்
குருவரதேவ ஸந்நிதௌ படேத்ய:
ஸகல துரித துக்க வர்க ஹாநிம்
வ்ரஜதிசிரம் க்ஞானவான் சம்புலோகம்:

## ஸ்ரீ ரங்கநாதாஷ்டகம்

(ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் அருளிச் செய்தது)

ஆநந் தரூபே நிஜபோதரூபே
ப்ரஹ்ம ஸ்வரூபே ஷ்ருதிமூர்த்திரூபே
ஸஸாங்கரூபே ரமணீயரூபே
ஸ்ரீரங்கரூபே ரமதாம் மநோமே (1)

காவேரி தீரே கருணாவிலோலே
மந்தாரமூலே த்ருதசாருகேலே
தைத்யாந்தகாலே (அ) கிலலோகலீலே
ஸ்ரீரங்கலீலே ரமதாம் மநோமே (2)

லக்ஷ்மீநிவாஸே ஜகதாம் நிவாஸே
ஹ்ருத்பத்மவாஸே ரவிபிம்ப வாஸே
க்ருபாநிவாஸே குணவ்ருந்தவாஸே
ஸ்ரீரங்கவாஸே ரமதாம் மநோமே (3)

ப்ரஹ்மாதிவந்த்யே ஜகதேகவந்த்யே
முகுந்தவந்த்யே ஸுரநாத வந்த்யே
வ்யாஸாதி வந்த்யே ஸநகாதி வந்த்யே
ஸ்ரீரங்க வந்தயே ரமதாம் மநோமே (4)

ப்ரஹ்மாதிராஜே கருடாதிராஜே
வைக்குண்ட்ட ராஜே ஸுரராஜ ராஜே
த்ரைலோக்ய ராஜே (அ)கிலலோக ராஜே
ஸ்ரீரங்கராஜே ரமதாம் மநோமே (5)

அமோகமுத்ரே பரிபூர்ணநித்ரே
ஸ்ரீயோகநித்ரே ஸஸமுத்ரநித்ரே
ஸ்ரிதைகபத்ரே ஜகதேகநித்ரே
ஸ்ரீரங்கபத்ரே ரமதாம் மநோமே (6)

ஸசித்ரஸாயீ புஜகேந்த்ரஸாயீ
நந்தாங்கஸாயீ கமலாங்கஸாயீ
க்ஷீராப்திஸாயீ வடபத்ரஸாயீ
ஸ்ரீரங்கஸாயீ ரமதாம் மநோமே (7)

இதம் ஹிரங்கம் த்யஜதா மிஹாங்கம்
புநர் நசாங்கம யதி சாங்கமேதி
பாணௌ ரதாங்கம் சராணம் புகாங்கம்
யானே விஹங்கம்சயநே புஜங்கம் (8)

ரங்கநாதாஷ்டகம் புணயம் ப்ராதருத்தாய ய:படேத்
ஸர்வாந் காமாநவாப்நோதி ரங்கிஸாயுஜ்யமாப்நுயாத் (9)

ஸ்ரீ ரங்கநாதாஷ்டகம் ஸம்பூர்ணம்.

வேதோகிலோ தர்ம மூலம்



# ஸ்ரீ வேதபாராயண சபை



ஆதம்பாக்கம், பிருந்தாவன் நகரில் முதலில் பிள்ளையார் கோவில் மட்டும் ஏற்பட்டு பின்பு ஸ்ரீமுருகன், ஸ்ரீ கோதண்டராமர், ஸ்ரீ ஆஞ்சநேயர், நவகிரகங்கள் ஆகிய தெய்வங்களுக்கு சந்நிதி கட்டி 1978ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இது சமயம் வைதீகர்களும், ஆஸ்திகர்களும் தினசரி ஸ்ரீ ருத்ரம் முதலான பஞ்ச சூத்ரங்கள் கோயிலில்பாராயணம் செய்து வந்தார்கள். நாளடைவில் வேதபாராயண சபையாக உருவாகியது. தினசரி வேதபாராயண பயிற்சி அளித்து வரப்பட்டது. தொடர்ந்து பிரதோஷ கால அபிஷேக கட்டளையும் நடந்து வந்தது. பொதுமக்களின் விருப்பத்திற்கினங்கவும் பேராதரவினாலும் சிவன் பார்வதிக்கு வேதபாராயண சபையினரால் சந்நதிகள் கட்டப்பட்டு 13–7–86 அன்று மகாகும்பாபிஷேகம் நடைப்பெற்றது. சிவன் பார்வதி சந்நிதி பரிபாலனத்திற்காக ஐ.ஓ.பி. ஆதம்பாக்கம், பிரிவில் 45,000 ரூபாய் வைப்பு நிதியாக வைத்து அதன் வட்டியை சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானத்திற்கு கொடுக்க வேதபாராயண சபா ஏற்பாடு செய்தது, இன்றும் நடைமுறையில் உள்ளது.

சிவன் சந்நிதிக்கு ஸ்ரீ காஞ்சி பரமாச்சாரியாள் பாணலிங்கம் ஆசீர்வதித்து கொடுத்தது குறிப்பிடத்தக்கது!

ஸ்ரீ வேதபாராயண சபையின் வளர்ச்சிக்கு பாடுபட்டவர்களுக்கும் உதவியவர்களுக்கும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

சிவாலயம் கட்டிய பின்பு 17 ஆண்டுகளாக ஒவ்வொரு ஆண்டும் வைகாசி மாதம் சிவன், பார்வதிக்கு பிரம்மோஸ்தவம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

**வேண்டுகோள்**

1. தினந்தோறும் குழந்தைகளுடன் கோவில் வழிபாடு செய்யுங்கள்.
2. கோவிலில் நடைபெறும் வேதபாராயணம், பிரபந்த சேவை, ஸஹஸ்ர நாம பாராயணம் பஜனை மற்றும் வேத வகுப்புகளில் கலந்து கொள்ளுங்கள், குழந்தைகளையும் அனுப்புங்கள்!

இவண்,

**M. ராதாகிருஷ்ணன்**

ஸ்ரீவேதபாராயண சபை

## அபிஷேக பொருட்களும் அதன் பலன்களும்

| | | | |
|---|---|---|---|
| 1. | சந்தனாதித் தைலம் | - | சுகம் தரும் |
| 2. | நறுமண திருமஞ்சனப் பொடி | - | கடன் நோய் தீரும் |
| 3. | பால பஞ்சாமிர்தம் | - | சம்பது நல்கும் |
| 4. | பஞ்சாமிர்தம் | - | உடல் வலிமை தரும் |
| 5. | பால் | - | நீடிய ஆயுள் பெறலாம் |
| 6. | தயிர் | - | நன் மக்கட் பேறு கிடைக்கும் |
| 7. | நெய் | - | வீடு பேறு அடையலாம் |
| 8. | தேன் | - | சுகம், குரல் இனிமை தரும் |
| 9. | கரும்பின்சாறு | - | நல் உடல் பெறலாம் |
| 10. | இளநீர் | - | போகம் அளிக்கும் |
| 11. | எலுமிச்சைப்பழம் | - | பகைமையை அளிக்கும் |
| 12. | விபூதி | - | போகமும் மோட்சமும் நல்கும் |
| 13. | சந்தனக் குழம்பு பன்னீர் | - | திருமகள் வருவாள் |
| 14. | சகஸ்ரதாரை சொர்ணா பிஷேகம் | - | லாபம் தரும் |
| 15. | வலம்புரி சங்கு அபிஷேகம் | - | தீவினை நீக்கும் நல்வினை ஆக்கும். |
| 16. | கலசாபிசேகம் | - | நினைத்தவை நடக்கும் |
| 17. | நெல், எண்ணெய் | - | விஷசுரம் நிவர்த்தி |
| 18. | நீர் | - | சாந்தி உண்டாக்கும் |
| 19. | வாழைப்பழம் | - | பயிர் விருத்தியாகும் |
| 20. | வெல்லம் | - | துக்க நிவர்த்தி |
| 21. | சர்க்கரை | - | சத்ருநாசம் |
| 22. | சாதம் (அன்னம்) | - | சகல பாக்கியம் கிடைக்கும் |
| 23. | மாம்பழம் | - | வெற்றியை அருளும் |

### கற்பூரத்தின் நன்மைகள்

கோயில்களிலும், வீட்டில் செய்யும் பூஜைகளிலும் கற்பூரம் ஏற்றி இறைவனை வழிபடுகிறோம். தன்னை அழித்துக் கொண்டு இறைவனுடைய திருமேனியை பக்தர்கள் தரிசனம் செய்ய வழிகோலுகிறது. கற்பூரம் தீபம், கற்பூரத்தைப் போலவே தன்னுடைய சுயநலங்களை அழித்துக் கொண்டால் இறைவனை உணர முடியும் என்பதே கற்பூரம் உணர்த்தும் உண்மையாகும்.

### விரதம் என்றால் என்ன?

"கர்த்தவ்ய விஷயே நியத ஸங்கல்ப வ்ரதம்" அதாவது தான் செய்ய வேண்டிய விஷயத்தில் உறுதியாக மனதில் தீர்மானம் செய்வதற்கே "வ்ரதம்" என்று பெயர். ஆகவே, விரதம் அனுஷ்டிக்கும்போது என்ன என்ன செய்யவேண்டும்; எது எதைச் செய்யக்கூடாதென்பதைச் சாஸ்திரம் கூறுகிறது.

## பூஜை அறையில் படங்கள் வைக்கும் முறை

இதற்கெல்லாம் விதிமுறைகள் ஏதும் இல்லை. விநாயகரை முன்னிலைப்படுத்தி படங்களை நம் வசதிப்படி வைத்துக் கொள்ளலாம். விநாயகரை நடுவிலும் வைத்துக் கொள்ளலாம். பூஜை அறை சுத்தமாக இருக்க வேண்டும் அவ்வளவுதான்.

## துளசி மாடம்

குழந்தைகள் ஆரோக்கியமாக வளர...

ஒவ்வொரு வீட்டிலும் துளசி மாடம் கட்டாயம் இருக்க வேண்டும். துளசிச் செடியை வளர்த்து வழிபட வேண்டும்.

குளித்து முடித்தபின் தூய நீரும், பாலும் விட்டு துளசியை வளர்க்க வேண்டும். தினமும் வலம் வந்து வழிபட வேணடும். மாலையில் துளசிக்கு முன் விளக்கேற்றி வைக்க வேண்டும். விசேஷ நாட்களில் அர்ச்சனை செய்து வழிபடலாம்.

இப்படியெல்லாம் பக்தியுடன் வழிபட்டால் அந்த வீட்டிலிருக்கும் குழந்தைகள் ஆரோக்கியமாக வளர்வார்கள். உயர்ந்த நிலையை அடைவார்கள். அந்த வீட்டில லட்சுமி கடாட்சம் தாண்டவமாடும். துளசி இலை விஷங்களை முறிக்கக்கூடிய தன்மை படைத்தது. துளசி காற்றுபடும் இடத்தில் விஷ ஜந்துக்களோ, விஷக்காற்றோ இருக்காது என்பது வைத்திய சாஸ்திரம்.

## ருத்ராட்சத்தின் மகிமை மற்றும் அணியும் முறை

மலஜலம் கழிக்கும் போது கழுத்தில் இருக்கும் ருத்ராட்ச மாலையைக் கழற்றி வைத்துச் செல்ல வேண்டும். தவறிப் போய் போட்டுக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் அதை நல்ல நீரில் அலம்பி பஞ்சாட்சரம் சொல்லி அணிந்து கொள்ள வேண்டும். கழுத்தில் அணியும் ஒற்றை ருத்ராட்சத்தை (கண்ட ருத்ராட்சம்) கழற்ற வேண்டியதில்லை.

## விளக்கேற்றத் தக்க திரிகளும், அதன் பயன்களும்

- **வாழைத் தண்டின் நாரினால் உருவாக்கப்பட்ட திரி**
  தெய்வகுற்றம், பிதுர்சாபம் நீங்கி சாந்தி ஏற்படும்.
- **பருத்தி பஞ்சினால் திரிக்கப்பட்ட திரி**
  நல்லவை அனைத்தும் செய்யும்.
- **தாமரைத் தண்டின் நூலால் திரிக்கப்பட்ட திரி**
  முன்வினை பாவம் போக்கும். இருக்கும் செல்வம் நிலைத்து நிற்கச் செய்யும்.
- **வெள்ளை எருக்கம் இலைப்பட்டையைத் திரித்த திரி**
  நிறை செல்வம் ஏற்படும். பேய் பிடித்தவர்களுக்கு அதன் தொல்லை நீங்கும்
- **புது மஞ்சள் சேலை துண்டினால் செய்யப்பட்ட திரி**
  தேவியின் அருள் கிட்டும். வியாதிகள் குணமாகும். காற்று சேட்டைகள் நீங்கும்.
- **சிகப்பு கலர் சேலைத் துண்டினால் திரிக்கப்பட்ட திரி**
  திருமணத் தடை நீங்கும். மலட்டுத் தன்மை போகும். செய்வினை தோஷங்கள் விலகும்.
- **பன்னீர்விட்டு காயவைத்த வெள்ளை வஸ்திரத்துண்டால் திரிக்கப்பட்ட திரி**
  உத்தம பலன் அத்தனையும் உதயமாகும்.

# அபிராமி அந்தாதி

### காப்பு
### (கட்டளைக் கலித்துறை)

தாரமர் கொன்றையும் சண்பக
மாலையும் சாத்தும்தில்லை
ஊரர்தம் பாகத் துமைமைந்த
னேஉல கேழும்பெற்ற
சீர்அபி ராமிஅந் தாதிஎப்
போதும்என் சிந்தையுள்ளே
கார்அமர் மேனிக் கணபதி
யேநிற்கக் கட்டுரையே

### நூல்

உதிக்கின்ற செங்கதிர் உச்சித்
திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம்
போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக்
குங்கும தோயம்என்ன
விதிக்கின்ற மேனி அபிராமி
என்றன் விழுத்துணையே. 1

துணையும் தொழும்தெய்வ மும்பெற்ற
தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட
வேரும் பனிமலர்ப்பூங்
கணையும் கருப்புச் சிலையும்மென்
பாசாங் குசமும்கையில்
அணையும் திரிபுர சுந்தரி
ஆவ தறிந்தனமே. 2

அறிந்தேன் எவரும் அறியா
மறையை அறிந்துகொண்டு
செறிந்தேன் உனது திருவடிக்
கேதிரு வேவெருவிப்
பிறிந்தேன்நின் அன்பர் பெருமைஎண்
ணாத கருமநெஞ்சால்
மறிந்தே விழுநர குக்குற
வாய மனிதரையே. 3

மனிதரும் தேவரும் மாயா
முனிவரும் வந்துசென்னி
குனிதரும் சேவடிக் கோமள
மேகொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும்
பகீரதி யும்படைத்த
புனிதரும் நீயும்என் புந்திஎந்
நாளும் பொருந்துகவே. 4

பொருந்திய முப்புரை செப்புரை
செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்குல்
மனோன்மணி வார்சடையோன்
அருந்திய நஞ்சமு தாக்கிய
அம்பிகை அம்புயமேல்
திருந்திய சுந்தரி அந்தரி
பாதம்என் சென்னியதே. 5

சென்னிய துன்பொற் றிருவடித்
தாமரை சிந்தையுள்ளே
மன்னிய துன்திரு மந்திரம்
சிந்தூர வண்ணப்பெண்ணே
முன்னிய நின்அடி யாருடன்
கூடி முறைமுறையே
பன்னிய தென்றும்உன் றன்பர
மாகம பத்ததியே. 6

ததியுறும் மத்திற் சுழலும்என்
ஆவி தளர்விலதோர்
கதியுறு வண்ணம் கருதுகண்
டாய்கம லாலயனும்
மதியுறு வேணி மகிழ்நனும்
மாலும் வணங்கிஎன்றும்
துதியுறு சேவடி யாய்சிந்து
ரானன சுந்தரியே. 7

சுந்தரி எந்தை துணைவியென்
பாசத் தொடரையெல்லாம்
வந்தரி சிந்துர வண்ணத்தி
னாள்மகி டன்தலைமேல்
அந்தரி நீலி அழியாத
கன்னிகை ஆரணத்தோன்
கந்தரி கைத்தலத் தாள்மலர்த்
தாள்என் கருத்தனவே. 8

கருத்தன எந்தைதன் கண்ணன
வண்ணக் கனகவெற்பிற்
பெருத்தன பால்அழும் பிள்ளைக்கு
நல்கின பேரருள்கூர்
திருத்தன பாரமும் ஆரமும்
செங்கைச் சிலையும்அம்பும்
முருத்தன மூரலும் நீயும்அம்
மேவந்தென் முன்னிற்கவே. 9

நின்றும் இருந்தும் கிடந்தும்
நடந்தும் நினைப்பதுன்னை
என்றும் வணங்குவ துன்மலர்த்
தாள்எழு தாமறையின்
ஒன்றும் அரும்பொரு ளேஅரு
ளேஉமை யேஇமயத்
தன்றும் பிறந்தவ ளேஅழி
யாமுத்தி ஆனந்தமே 10

ஆனந்த மாய்என் அறிவாய்
நிறைந்த அமுதமுமாய்
வானந்த மான வடிவுடை
யாள்மறை நான்கினுக்கும்
தானந்த மான சரணார
விந்தம் தவளநிறக்
கானந்தம் ஆடரங் காம்எம்பி
ரான்முடிக் கண்ணியதே. 11

கண்ணிய துன்புகழ் கற்பதுன்
நாமம் கசிந்துபத்தி
பண்ணிய துன்இரு பாதாம்
புயத்தில் பகல்இரவா
நண்ணிய துன்னை நயந்தோர்
அவையத்து நான்முன்செய்த
புண்ணியம் ஏதென்அம் மேபுவி
ஏழையும் பூத்தவளே. 12

பூத்தவ ளேபுவ னம்பதி
னான்கையும் பூத்தவண்ணம்
காத்தவ ளேபின் கரந்தவ
ளேகறைக் கண்டனுக்கு
மூத்தவ ளேஎன்றும் மூவா
முகுந்தற் கிளையவளே
மாத்தவ ளேஉன்னை அன்றிமற்
றோர்தெய்வம் வந்திப்பதே. 13

வந்திப் பவர்உன்னை வானவர்
தானவர் ஆனவர்கள்
சிந்திப் பவர்நற் றிசைமுகர்
நாரணற் சிந்தையுள்ளே
பந்திப் பவர் அழி யாப்பர
மானந்தர் பாரில்உன்னைச்
சந்திப் பவர்க்கெளி தாம்எம்பி
ராட்டிநின் தண்ணளியே. 14

தண்ணளிக் கென்றுமுன் னேபல
கோடி தவங்கள் செய்வார்
மண்ணளிக் கும்செல்வ மோபெறு
வார்மதி வானவர்தம்
விண்ணளிக் கும்செல்வ மும்அழி
யாமுத்தி வீடுமன்றோ
பண்ணளிக் கும்சொற் பரிமள
யாமளைப் பைங்கிளியே. 15

கிளியே கிளைஞர் மனத்தே
கிடந்து கிளர்ந்தொளிரும்
ஒளியே ஒளிரும் ஒளிக்கிட
மேஎண்ணில் ஒன்றும்இல்லா
வெளியே வெளிமுதற் பூதங்கள்
ஆகி விரிந்தஅம்மே
அளியேன் அறிவள விற்கள
வான ததிசயமே. 16

அதிசய மான வடிவுடை
யாள்அர விந்தமெல்லாம்
துதிசய ஆனன சுந்தர
வல்லி துணைஇரதி
பதிசய மான தபசய
மாகமுன் பார்த்தவர்தம்
மதிசய மாகஅன் றோவாம
பாகத்தை வவ்வியதே. 17

வவ்விய பாகத் திறைவரும்
நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக்
கோலமும் சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்தென்னை ஆண்டபொற்
பாதமும் ஆகிவந்து
வெவ்விய காலன்என் மேல்வரும்
போது வெளிநிற்கவே 18

வெளிநின்ற நின்திரு மேனியைப்
பார்த்தென் விழியும்நெஞ்சும்
களிநின்ற வெள்ளம் கரைகண்ட
தில்லை கருத்தினுள்ளே
தெளிநின்ற ஞானம் திகழ்கின்ற
தென்ன திருவுளமோ
ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும்
மேவி உறைபவேள. 19

உறைகின்ற நின்திருக் கோயில்நின்
கேள்வர் ஒருபக்கமோ
அறைகின்ற நான்மறை யின்அடி
யோமுடி யோஅமுதம்
நிறைகின்ற வெண்திங்க ளோகஞ்ச
மோஎன்றன் நெஞ்சகமோ
மறைகின்ற வாரிதி யோபூர
ணாசல மங்கலையே. 20

மங்கலை செங்கல சம்முலை
யாள்மலை யாள்வருணச்
சங்கலை செங்கைச் சகல
கலாமயில் தாவுகங்கை
பொங்கலை தங்கும் புரிசடை
யோன்புடை ஆளுடையாள்
பிங்கலை நீலிசெய் யாள்வெளி
யாள்பசும் பெண்கொடியே. 21

கொடியே இளவஞ்சிக் கொம்பே
எனக்குவம் பேபழுத்த
படியே மறையின் பரிமள
மேபனி மால்இமயப்
பிடியே பிரமன் முதலாய
தேவரைப் பெற்றஅம்மே
அடியேன் இறந்திங் கினிப்பிற
வாமல்வந் தாண்டுகொள்ளே. 22

கொள்ளேன் மனத்தில்நின் கோலம்அல்
லாதன்பர் கூட்டந்தன்னை
விள்ளேன் பரசம யம்விரும்
பேன்வியன் மூவுலகுக்
குள்ளே அனைத்தினுக் கும்புறம்
பேஉள்ளத் தேவிளைந்த
கள்ளே களிக்கும் களியே
அளியஎன் கண்மணியே 23

மணியே மணியின் ஒளியே
ஒளிரும் மணிபுனைந்த
அணியே அணியும் அணிக்கழ
கேஅணு காதவர்க்குப்
பிணியே பிணிக்கு மருந்தே
அமரர் பெருவிருந்தே
பணியேன் ஒருவரை நின்பத்ம
பாதம் பணிந்தபின்னே. 24

பின்னே திரிந்துன் அடியாரைப்
பேணிப் பிறப்பறுக்க
முன்னே தவங்கள் முயன்றுகொண்
டேன்முதல் மூவருக்கும்
அன்னே உலகுக் கபிராமி
என்னும் அருமருந்தே
என்னே இனிஉன்னை யான்மற
வாமல்நின் றேத்துவனே. 25

ஏத்தும் அடியவர் ஈரே
ழுலகினை யும்படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவ
ராம்கமழ் பூங்கடம்பு
சாத்தும் குழல் அணங் கேமணம்
நாறும்நின் தாளிணைக்கென்
நாத்தங்கு புன்மொழி ஏறிய
வாறு நகையுடைத்தே. 26

உடைத்தனை வஞ்சப் பிறவியை
உள்ளம் உருகும்அன்பு
படைத்தனை பத்ம பதயுகம்
சூடும் பணிஎனக்கே
அடைத்தனை நெஞ்சத் தழுக்கைஎல்
லாம்நின் அருட்புனலால்
துடைத்தனை சுந்தரி நின் அருள்
ஏதென்று சொல்லுவதே. 27

சொல்லும் பொருளும் எனநட
மாடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி
யேநின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழும்அவர்க்
கேஅழி யாஅரசும்
செல்லும் தவநெறி யும்சிவ
லோகமும் சித்திக்குமே. 28

சித்தியும் சித்தி தரும்தெய்வம்
ஆகித் திகழும்பரா
சத்தியும் சத்தி தழைக்கும்
சிவமும் தவம்முயல்வார்
முத்தியும் முத்திக்கு வித்தும்வித்
தாகி முளைத்தெழுந்த
புத்தியும் புத்தியி னுள்ளே
புரக்கும் புரத்தையன்றே 29

அன்றே தடுத்தென்னை ஆண்டுகொண்
டாய்கொண்ட தல்லஎன்கை
நன்றே உனக்கினி நான்என்
செயினும் நடுக்கடலுள்
சென்றே விழினும் கரையேற்
றுகைநின் திருவுளமே
ஒன்றே பலஉரு வேஅரு
வேஎன் உமையவளே. 30

உமையும் உமையொரு பாகனும்
ஏக உருவில்வந்திங்
கெமையும் தமக்கன்பு செய்யவைத்
தார்இனி எண்ணுதற்குச்
சமயங் களும்இல்லை ஈன்றெடுப்
பாய்ஒரு தாயும் இல்லை
அமையும் அமையுறு தோளிர்
மேல் வைத்த ஆசையுமே. 31

ஆசைக் கடலில் அகப்பட்
டருள்அற்ற அந்தகன்கைப்
பாசத்தில் அல்லற் படஇருந்
தேனைநின் பாதமெனும்
வாசக் கமலம் தலைமேல்
வலியவைத் தாண்டுகொண்ட
நேசத்தை என்சொல்லு வேன்ஈசர்
பாகத்து நேரிழையே. 32

இழைக்கும் வினைவழி யேஅடும்
காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழுதுவந் தஞ்சல்என்
பாய்அத்தர் சித்தம்எல்லாம்
குழைக்கும் களபக் குவிமுலை
யாமளைக் கோமளமே
உழைக்கும் பொழுதுன்னை யேஅன்னை
யேஎன்பன் ஓடிவந்தே. 33

வந்தே சரணம் புகும்அடி
யாருக்கு வானுலகம்
தந்தே பரிவொடு தான்போய்
இருக்கும் சதுர்முகமும்
பைந்தேன் அலங்கற் பருமணி
ஆகமும் பாகமும்பொற்
செந்தேன் மலரும் அலர்கதிர்
ஞாயிறும் திங்களுமே. 34

திங்கட் பகவின் மணம்நாறும்
சீறடி சென்னிவைக்க
எங்கட் கொருதவம் எய்திய
வாஎண் இறந்தவிண்ணோர்
தங்கட்கும் இந்தத் தவம்எய்து
மோதரங் கக்கடலுள்
வெங்கட் பணிஅணை மேல்துயில்
கூரும் விழுப்பொருளே. 35

பொருளே பொருள்முடிக் கும்போக
மேஅரும் போகம்செய்யும்
மருளே மருளில் வரும்தெரு
ளேஎன்மனத்துவஞ்சத்
திருள்ஏதும் இன்றி ஒளிவெளி
ஆகி இருக்கும் உன்றன்
அருள்ஏ தறிகின்றி லேன்அம்பு
யாதனத் தம்பிகையே. 36

கைக்கே அணிவது கன்னலும்
பூவும் கமலம்அன்ன
மெய்க்கே அணிவது வெண்முத்து
மாலை விடஅரவின்
பைக்கே அணிவது பன்மணிக்
கோவையும் பட்டும்எட்டுத்
திக்கே அணியும் திருவுடை
யானிடம் சேர்பவளே 37

பவளக் கொடியிற் பழுத்தசெவ்
வாயும் பனிமுறுவல்
தவளத் திருநகை யும்துணை
யாளங்கள் சங்கரனைத்
துவளப் பொருது துடியிடை
சாய்க்கும் துணைமுலையாள்
அவளைப் பணிமின்கண் டீர்அம
ராவதி ஆளுகைக்கே. 38

ஆளுகைக் குன்றன் அடித்தா
மரைகள்உண் டந்தகன்பால்
மீளுகைக் குன்றன் விழியின்
கடைஉண்டுமேல் இவற்றின்
மூளுகைக் கென்குறை நின்குறை
யேஅன்று முப்புரங்கள்
மாளுகைக் கம்பு தொடுத்தவில்
லான்பங்கில் வாணுதலே. 39

வாணுதற் கண்ணியை விண்ணவர்
யாவரும் வந்திறைஞ்சிப்
பேணுதற் கெண்ணிய எம்பெரு
மாட்டியைப் பேதைநெஞ்சிற்
காணுதற் கண்ணியள் அல்லாத
கன்னியைக் காணும்அன்பு
பூணுதற் கெண்ணிய எண்ணமன்
றோமுன்செய் புண்ணியமே. 40

புண்ணியம் செய்தன மேமன
மேபுதுப் பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும்
கூடிநம் காரணத்தால்
நண்ணிஇங் கேவந்து தம்அடி
யார்கள் நடுஇருக்கப்
பண்ணிநம் சென்னியின் மேற்பத்ம
பாதம் பதித்திடவே. 41

இடங்கொண்டு விம்மி இணைகொண்
டிறுகி இளகிமுத்து
வடங்கொண்ட கொங்கை மலைகொண்
டிறைவர் வலியநெஞ்சை
நடங்கொண்ட கொள்கை நலங்கொண்ட
நாயகி நல்லரவின்
படங்கொண்ட அல்குற் பனிமொழி
வேதப் பரிபுரையே. 42

பரிபுரச் சீறடிப் பாசாங்
குசைபஞ்ச பாணிஇன்சொல்
திரிபுர சுந்தரி சிந்தூர
மேனியள் தீமைநெஞ்சில்
புரிபுர வஞ்சரை அஞ்சக்
குனிபொருப் புச்சிலைக்கை
எரிபுரை மேனி இறைவர்செம்
பாகத் திருந்தவளே. 43

தவளே இவள்எங்கள் சங்கர
னார்மனை மங்கலமாம்
அவளே அவர்தமக் கன்னையும்
ஆயினள் ஆகையினால்
இவளே கடவுளர் யாவர்க்கும்
மேலை இறைவியுமாம்
துவளேன் இனிஒரு தெய்வம்உண்
டாகமெய்த் தொண்டுசெய்தே. 44

தொண்டுசெய் யாதுநின் பாதம்
தொழாது துணிந்திச்சையே
பண்டுசெய் தார்உள ரோ இல
ரோஅப் பரிசடியேன்
கண்டுசெய் தால்அது கைதவ
மோஅன்றிச் செய்தவமோ
மிண்டுசெய் தாலும் பொறுக்கைநன்
றேபின் வெறுக்கை அன்றே. 45

வெறுக்கும் தகைமைகள் செய்யினும்
தம்அடி யாரைமிக்கோர்
பொறுக்கும் தகைமை புதியதன்
றேபுது நஞ்சைஉண்டு
கறுக்கும் திருமிடற் றான்இடப்
பாகம் கலந்தபொன்னே
மறுக்கும் தகைமைகள் செய்யினும்
யான்உன்னை வாழ்த்துவனே. 46

வாழும் படிஒன்று கண்டுகொண்
டேன்மனத் தேஒருவர்
வீழும் படிஅன்று விள்ளும்
படிஅன்று வேலைநிலம்
ஏழும் பருவரை எட்டும்எட்
டாமல் இரவுபகல்
சூழும் சுடர்க்கு நடுவே
கிடந்து சுடர்கின்றதே. 47

சுடரும் கலைமதி துன்றும்
சடைமுடிக் குன்றில்ஒன்றிப்
படரும் பரிமளப் பச்சைக்
கொடியைப் பதித்துநெஞ்சில்
இடரும் தவிர்த்திமைப் போதிருப்
பார்பின்னும் எய்துவரோ
குடரும் கொழுவும் குருதியும்
தோயும் குரம்பையிலே. 48

குரம்பை அடுத்துக் குடிபுக்க
ஆவிவெங் கூற்றுக்கிட்ட
வரம்பை அடுத்து மறுகும்அப்
போது வளைக்கை அமைத்
தரம்பை அடுத்த அரிவையர்
சூழவந் தஞ்சல்என்பாய்
நரம்பை அடுத்த இசைவடி
வாய்நின்ற நாயகியே. 49

நாயகி நான்முகி நாரா
யணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி
சாமளை சாதிநச்சு
வாய்அகி மாலினி வாராகி
சூலினி மாதங்கிஎன்
றாயகி யாதி உடையாள்
சரணம் அரண்நமக்கே. 50

அரணம் பொருள்என் றருள்ஒன்
றிலாத அசுரர்தங்கள்
முரண்அன் றழிய முனிந்தபெம்
மானும் முகுந்தனுமே
சரணம் சரணம் எனநின்ற
நாயகி தன்அடியார்
மரணம் பிறவி இரண்டும்எய்
தார்இந்த வையகத்தே. 51

வையம் துரகம் மதகரி
மாமகு டம்சிவிகை
பெய்யும் கனகம் பெருவிலை
ஆரம் பிறைமுடித்த
ஐயன் திருமனை யாள்அடித்
தாமரைக் கன்புமுன்பு
செய்யும் தவம் உடைய யார்க்குள
வாகிய சின்னங்களே. 52

சின்னஞ் சிறிய மருங்கினில்
சாத்திய செய்யபட்டும்
பென்னம் பெரிய முலையும்முத்
தாரமும் பிச்சிமொய்த்த
கன்னங் கரிய குழலும்கண்
மூன்றும் கருத்தில்வைத்துத்
தன்னந் தனிஇருப் பார்க்கிது
போலும் தவம்இல்லையே. 53

இல்லாமை சொல்லி ஒருவர்தம்
பாற்சென் றிழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவி
ரேல்நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்தம்
பால்ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை
பாதங்கள் சேர்மின்களே. 54

மின்னா யிரம்ஒரு மெய்வடி
வாகி விளங்குகின்ற
அன்னாள் அகமகிழ் ஆனந்த
வல்லி அருமறைக்கு
முன்னாய் நடுஎங்கு மாய்முடி
வாய முதல்விதன்னை
உன்னா தொழியினும் உன்னினும்
வேண்டுவ தொன்றில்லையே. 55

ஒன்றாய் அரும்பிப் பலவாய்
விரிந்திவ் வுலகெங்குமாய்
நின்றாள் அனைத்தையும் நீங்கிநிற்
பாள்என்றன் நெஞ்சினுள்ளே
பொன்றாது நின்று புரிகின்ற
வாஇப் பொருள் அறிவார்
அன்றால் இலையில் துயின்றபெம்
மானும்என் ஐயனுமே. 56

ஐயன் அளந்த படிஇரு
நாழிகொண் டண்டமெல்லாம்
உய்ய அறம்செயும் உன்னையும்
போற்றி ஒருவர்தம்பால்
செய்ய பசுந்தமிழ்ப் பாமாலை
யும்கொண்டு சென்றுபொய்யும்
மெய்யும் இயம்பவைத் தாய்இது
வோஉன்றன் மெய்யருளே. 57

அருணாம் புயத்தும்என் சித்தாம்
புயத்தும் அமர்ந்திருக்கும்
தருணாம் புயமுலைத் தையல்நல்
லாள்தகை சேர்நயனக்
கருணாம் புயமும் வதனாம்
புயமும் கராம்புயமும்
சரணாம் புயமும்அல் லால்கண்டி
லேன்ஒரு தஞ்சமுமே. 58

தஞ்சம் பிறிதில்லை ஈதல்லது
தென்றுன் தவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைக்கின்றி
லேன்ஒற்றை நீள்சிலையும்
அஞ்சம்பும் இக்கல ராகநின்
றாய்அறி யார்எனினும்
பஞ்சஞ்சும் மெல்லடி யார்அடி
யார்பெற்ற பாலரையே. 59

பாலினும் சொல்இனி யாய்பனி
மாமலர்ப் பாதம்வைக்க
மாலினும் தேவர் வணங்கநின்
றோன்கொன்றை வார்சடையின்
மேலினும் கீழ்நின்று வேதங்கள்
பாடும்மெய்ப் பீடம்ஒரு
நாலினும் சாலநன் றோஅடி
யேன்முடை நாய்த்தலையே. 60

நாயே னையும்இங் கொருபொரு
ளாக நயந்துவந்து
நீயே நினைவின்றி ஆண்டுகொண்
டாய்நின்னை உள்ளவண்ணம்
பேயேன் அறியும் அறிவுதந்
தாய்என்ன பேறுபெற்றேன்
தாயே மலைமக ளேசெங்கண்
மால்திருத் தங்கைச்சியே. 61

தங்கச் சிலைகொண்டு தானவர்
முப்புரம் சாய்த்துமத
வெங்கட் கரிஉரி போர்த்தசெஞ்
சேவகன் மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட
நாயகி கோகனகச்
செங்கைக் கரும்பும் மலரும்எப்
போதும்என் சிந்தையதே. 62

தேறும் படிசில ஏதுவும்
காட்டிமுன் செல்கதிக்குக்
கூறும் பொருள் குன்றிற் கொட்டும்
தறிகுறிக் கும்சமயம்
ஆறும் தலைவி இவளாய்
இருப்ப தறிந்திருந்தும்
வேறும் சமயம்உண் டென்றுகொண்
டாடிய வீணருக்கே. 63

வீணே பலிகவர் தெய்வங்கள்
பாற்சென்று மிக்கஅன்பு
பூணேன் உனக்கன்பு பூண்டுகொண்
டேன்நின் புகழ்ச்சியன்றிப்
பேணேன் ஒருபொழு தும்திரு
மேனிப்ர காசமன்றிக்
காணேன் இருநில மும்திசை
நான்கும் ககனமுமே. 64

ககனமும் வானும் புவனமும்
காணவிற் காமன் அங்கம்
தகனம்முன் செய்த தவப்பெரு
மாற்குத் தடக்கையும்செம்
முகனும்முந் நான்கிரு மூன்றெனத்
தோன்றிய மூதறிவின்
மகனும்உண் டாயதன் றோவல்லி
நீசெய்த வல்லபமே. 65

வல்லபம் ஒன்றறி யேன்சிறி
யேன்நின் மலரடிச்செம்
பல்லவம் அல்லது பற்றொன்றி
லேன்பசும் பொற்பொருப்பு
வில்லவர் தம்முடன் வீற்றிருப்
பாய்வினை யேன்தொடுத்த
சொல்அவ மாயினும் நின்திரு
நாமங்கள் தோத்திரமே. 66

தோத்திரம் செய்து தொழுதுமின்
போலும்நின் தோற்றம்ஒரு
மாத்திரைப் போதும் மனத்தில்வை
யாதவர் வண்மைகுலம்
கோத்திரம் கல்வி குணம்குன்றி
நாளும் குடில்கள் தொறும்
பாத்திரம் கொண்டு பலிக்குழ
லாநிற்பர் பாரெங்குமே. 67

பாரும் புனலும் கனலும்வெங்
காலும் படர்விசும்பும்
ஊரும் முருகு சுவைஒளி
ஊறொலி ஒன்றுபடச்
சேரும் தலைவி சிவகாம
சுந்தரி சீறடிக்கே
சாரும் தவம்உடை யார்படை
யாத தனம் இல்லையே. 68

தனம்தரும் கல்வி தரும்ஒரு
நாளும் தளர்வறியா
மனம்தரும் தெய்வ வடிவும்
தரும்நெஞ்சில் வஞ்சம்இல்லா
இனம்தரும் நல்லன எல்லாம்
தரும்அன்பர் என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழ லாள்அபி
ராமி கடைக்கண்களே. 69

கண்களிக் கும்படி கண்டுகொண்
டேன்கடம் பாடவியில்
பண்களிக் கும்குரல் வீணையும்
கையும் பயோதரமும்
மண்களிக் கும்பச்சை வண்ணமும்
ஆகி மதங்கர்குலப்
பெண்களில் தோன்றிய எம்பெரு
மாட்டிதன் பேரழகே. 70

அழகுக் கொருவரும் ஒவ்வாத
வல்லி அருமறைகள்
பழகிச் சிவந்த பதாம்புயத்
தாள்பனி மாமதியின்
குழவித் திருமுடிக் கோமள
யாமளைக் கொம்பிருக்க
இழவுற்று நின்றநெஞ் சேஇரங்
கேல்உனக் கென்குறையே. 71

என்குறை தீரநின் றேத்துகின்
றேன்இனி யான்பிறக்கின்
நின்குறை யேஅன்றி யார்குறை
காண்இரு நீள்விசும்பின்
மின்குறை காட்டி மெலிகின்ற
நேரிடை மெல்லியலாய்
தன்குறை தீரஎங் கோன்சடை
மேல்வைத்த தாமரையே. 72

தாமம் கடம்பு படைபஞ்ச
பாணம் தனுக்கரும்பு
யாமம் வயிரவர் ஏத்தும்
பொழுதெமக் கென்றுவைத்த
சேமம் திருவடி செங்கைகள்
நான்கொளி செம்மை அம்மை
நாமம் திரிபுரை ஒன்றோ
டிரண்டு நயனங்களே. 73

நயனங்கள் மூன்றுடை நாதனும்
வேதமும் நாரணனும்
அயனும் பரவும் அபிராம
வல்லி அடியிணையைப்
பயனென்று கொண்டவர் பாவையர்
ஆடவும் பாடவும்பொன்
சயனம் பொருந்து தமனியக்
காவினில் தங்குவரே. 74

தங்குவர் கற்பக தாருவின்
நீழலில் தாயர்இன்றி
மங்குவர் மண்ணில் வழுவாப்
பிறவியை மால்வரையும்
பொங்குவர் ஆழியும் ஈரேழ்
புவனமும் பூத்தஉந்திக்
கொங்கிவர் பூங்குழ லாள்திரு
மேனி குறித்தவரே. 75

குறித்தேன் மனத்தில்நின் கோலம்எல்
லாம்நின் குறிப்பறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற
நேர்வழி வண்டுகிண்டி
வெறித்தேன் அவிழ்கொன்றை வேணிப்
பிரான்ஒரு கூற்றைமெய்யில்
பறித்தே குடிபுகு தும்பஞ்ச
பாண பயிரவியே. 76

பயிரவி பஞ்சமி பாசாங்
குசைபஞ்ச பாணிவஞ்சர்
உயிர்அவி உண்ணும் உயர்சண்டி
காளி ஒளிரும் கலா
வயிரவி மண்டலி மாலினி
சூலி வராகிஎன்றே
செயிர்அவி நான்மறை சேர்திரு
நாமங்கள் செப்புவரே. 77

செப்பும் கனக கலசமும்
போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராம
வல்லி அணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும்
விழியின் கொழுங்கடையும்
துப்பும் நிலவும் எழுதிவைத்
தேன்என் துணைவிழிக்கே. 78

விழிக்கே அருளுண் டபிராம
வல்லிக்கு வேதம்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்
டெமக்கவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்று வெம் பாவங்க
ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம்
மோடென்ன கூட்டினியே. 79

கூட்டிய வாஎன்னைத் தன்அடி
யாரில் கொடியவினை
ஓட்டிய வாஎன்கண் ஓடிய
வாதன்னை உள்ளவண்ணம்
காட்டிய வாகண்ட கண்ணும்
மனமும் களிக்கின்றவா
ஆட்டிய வாநடம் ஆடகத்
தாமரை ஆரணங்கே. 80

அணங்கே அணங்குகள் நின்பரி
வாரங்கள் ஆகையினால்
வணங்கேன் ஒருவரை வாழ்த்துகி
லேன்நெஞ்சில் வஞ்சகரோ
டிணங்கேன் எனதுன தென்றிருப்
பார்சிலர் யாவரொடும்
பிணங்கேன் அறிவொன்றி லேன்என்கண்
நீவைத்த பேரளியே. 81

அளியார் கமலத்தில் ஆரணங்
கேஅகி லாண்டமும்நின்
ஒளியாக நின்ற ஒளிர்திரு
மேனியை உள்ளுதொறும்
களியாகி அந்தக் கரணங்கள்
விம்மிக் கரைபுரண்டு
வெளியாய் விடின்எங்ங னேமறப்
பேன்நின் விரகினையே. 82

விரவும் புதுமலர் இட்டுநின்
பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்சவல்
லார்இமை யோர்எவரும்
பரவும் பதமும் அயிரா
வதமும் பகீரதியும்
உரவும் குலிசமும் கற்பகக்
காவும் உடையவரே. 83

உடையாளை ஒல்குசெம் பட்டுடை
யாளை ஒளிர்மதிச்செஞ்
சடையாளை வஞ்சகர் நெஞ்சடை
யாளைத் தயங்கும் நுண்ணூல்
இடையாளை எங்கள்பெம் மானிடை
யாளைஇங் கென்னை இனிப்
படையாளை உங்களை யும்படை
யாவண்ணம் பார்த்திருமே. 84

பார்க்கும் திசைதொறும் பாசாங்
குசமும் பனிச்சிறைவண்
டார்க்கும் புதுமலர் ஐந்தும்
கரும்பும்என் அல்லல்எல்லாம்
தீர்க்கும் திரிபுரை யாள்திரு
மேனியும் சிற்றிடையும்
வார்க்குங் குமமுலை யும்முலை
மேல்முத்து மாலையுமே. 85

மால்அயன் தேட மறைதேட
வானவர் தேடநின்ற
காலையும் சூடகக் கையையும்
கொண்டு கதித்தகப்பு
வேலைவெங் காலன்என் மேல்விடும்
போது வெளிநில்கண்டாய்
பாலையும் தேனையும் பாகையும்
போலும் பணிமொழியே. 86

மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத
நின்திரு மூர்த்திஎன்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற
தால்விழி யால்மதனை
அழிக்கும் தலைவர் அழியா
விரதத்தை அண்டம்எல்லாம்
பழிக்கும் படிஒரு பாகம்கொண்
டாளும் பராபரையே. 87

பரம்என் றுனை அடைந் தேன்தமி
யேனும்என் பத்தருக்குள்
தரம்அன் றிவன்என்று தள்ளத்
தகாது தரியலர்தம்
புரம்அன் றெரியப் பொருப்புவில்
வாங்கிய போதில்அயன்
சிரம்ஒன்று செற்றகை யான்இடப்
பாகம் சிறந்தவளே. 88

சிறக்கும் கமலத் திருவேநின்
சேவடி சென்னிவைக்கத்
துறக்கம் தரும்நின் துணைவரும்
நீயும் துரியமற்ற
உறக்கம் தரவந் துடம்போ
டுயிர்உற வற்றறிவு
மறக்கும் பொழுதென்முன் னேவரல்
வேண்டும் வருந்தியுமே. 89

வருந்தா வகைஎன் மனத்தா
மரையினில் வந்துபுகுந்
திருந்தாள் பழைய இருப்பிட
மாக இனிஎனக்குப்
பொருந்தா தொருபொருள் இல்லைவிண்
மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தா
னதைநல்கும் மெல்லியலே. 90

மெல்லிய நுண்ணிடை மின்னனை
யாளை விரிசடையோன்
புல்லிய மென்முலை பொன்னனை
யாளைப் புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணம் தொழும்அடி
யாரைத் தொழும் அவர்க்குப்
பல்லியம் ஆர்த்தெழ வெண்பக
டூரும் பதம்தருமே. 91

பதத்தே உருகிநின் பாதத்தி
லேமனம் பற்றிஉன்றன்
இதத்தே ஒழுக அடிமைகொண்
டாய்இனி யான்ஒருவர்
மதத்தே மதிமயங் கேன் அவர்
போன வழியும்செல்லேன்
முதல்தேவர் மூவரும் யாவரும்
போற்றும் முகிழ்நகையே. 92

நகையே இஃதிந்த ஞாலம்எல்
லாம்பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ்முலை மானே
முதுகண் முடிவில் அந்த
வகையே பிறவியும் வம்பே
மலைமகள் என்பதுநாம்
மிகையே இவள்தன் தகைமையை
நாடி விரும்புவதே. 93

விரும்பித் தொழும்அடி யார்விழி
நீர்மல்கி மெய்புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்த
மாகி அறிவிழந்து
சுரும்பிற் களித்து மொழிதடு
மாறிமுன் சொன்னவெல்லாம்
தரும்பித்தர் ஆவரென் றால்அபி
ராமி சமயம்நன்றே 94

நன்றே வருகினும் தீதே
விளைகினும் நான்அறிவ
தொன்றேயும் இல்லை உனக்கே
பரம்எனக் குள்ளவெல்லாம்
அன்றே உனதென் றளித்துவிட்
டேன்அழி யாதகுணக்
குன்றே அருட்கட லேஇம
வான்பெற்ற கோமளமே. 95

கோமள வல்லியை அல்லியந்
தாமரைக் கோயில்வைகும்
யாமள வல்லியை ஏதமி
லாளை எழுதரிய
சாமள மேனிச் சகல
கலாமயில் தன்னைத்தம்மால்
ஆமள வும்தொழு வார்எழு
பாருக்கும் ஆதிபரே. 96

ஆதித்தன் அம்புலி அங்கி
குபேரன் அமரர்தங்கோன்
போதிற் பிரமன் புராரி
முராரி பொதியமுனி
காதிப் பொருபடைக் கந்தன்
கணபதி காமன் முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர்
போற்றுவர் தையலையே. 97

தைவந்து நின்அடித் தாமரை
சூடிய சங்கரற்குக்
கைவந்த தீயும் தலைவந்த
ஆறும் கரந்ததெங்கே
மெய்வந்த நெஞ்சின்அல் லால்ஒரு
காலும் விரகர் தங்கள்
பொய்வந்த நெஞ்சிற் புகல்அறி
யாமடப் பூங்குயிலே. 98

குயிலாய் இருக்கும் கடம்பா
டவியிடைக் கோலஇயல்
மயிலாய் இருக்கும் இமயா
சலத்திடை வந்துதித்த
வெயிலாய் இருக்கும் விசும்பில்
கமலத்தின் மீதன்னமாம்
கயிலா யருக்கன் றிமவான்|
அளித்த கனங்குழையே. 99

குழையத் தழுவிய கொன்றையந்
தார்கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடுந்
தோளும் கருப்புவில்லும்
விழையப் பொருதிறல் வேரியம்
பாணமும் வெண்ணகையும்
உழையைப் பொருகண்ணும் நெஞ்சில்எப்
போதும் உதிக்கின்றவே| 100

பயன்

ஆத்தாளை எங்கள் அபிராம
வல்லியை அண்டம்எல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத்
தாளைப் புவிஅடங்கக்
காத்தாளை அங்குச பாசம்
குசமம் கரும்பும்அங்கை
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழு
வார்க்கொரு தீங்கில்லையே.

## பூஜைகளில் செய்யக்கூடாதவைகள்

1. பிரதிமை, படம், யந்திரம் இவைகளைத் தினந்தோறும் ஸ்நானம் செய்விக்க வேண்டியதில்லை.
2. பருவதினங்களிலும், தூசிபடிந்தபோதும் மட்டும் ஸ்நானம் செய்வித்தால் போதும்.
3. விஷ்ணுவுக்கு அக்ஷதையால் அர்ச்சனை செய்யக்கூடாது.
4. துர்கையை அருகம் புல்லால் அர்ச்சிக்கக்கூடாது.
5. சூரியனை பில்வதளத்தால் அர்ச்சிக்கக்கூடாது.
6. விஷ்ணுவுக்கு ஊமத்தையும், எருக்கம்பூவும் கூடாது.
7. லக்ஷ்மியை தும்பைப் புஷ்பத்தால் அர்ச்சிக்கக்கூடாது.
8. சரஸ்வதியைப் பவளப் புஷ்பத்தால் அர்ச்சிக்கக்கூடாது.
9. பைரவரை மல்லிகைப் பூவினால் அர்ச்சிக்கக்கூடாது.
10. பரமசிவனைத் தாழம்பூவினால் அர்ச்சிக்கக்கூடாது.

நாம் சிலரை வெறுப்பதற்குக் காரணம் அவர்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாததுதான். அவர்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாததற்குக் காரணம் நாம் அவர்களை வெறுப்பதுதான்.

– ஸ்பானிஷ் அறிஞர்

சிந்தனைச் சுரங்கத்தில் காணும் கருத்துக்கள் அனைத்தும் முன்னேறத் துடிக்கும் உள்ளங்களுக்கு ஊன்றுகோலாகப் பயன்படும்.

பெரியவர்களாய்ப் பிறப்பவர் சிலர், பெருமையைத் தேடிக் கொள்ளுபவர் சிலர். சிலரிடம் பெருமை பிறரால் திணிக்கப்படுகிறது.

– ஷேக்ஸ்பியர்|

# திருவிளக்கு வழிபாட்டு முறைகள்

## விளக்கேற்றத்தக்க எண்ணெய்களும் அதன் பயன்களும்

**விளக்கேற்றுவோர் இல்லத்தில் சகல செல்வங்களும் சுகமும் கிட்டும்.**

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | - | சகல பீடைகளும் விலகும். |
| ஆமெணக்கெண்ணெய் | - | பந்து சுகம், தாம்பத்திய சுகம் விருத்தியாகும். |
| கடலை எண்ணெய் | - | நாள்தோறும் கடன் தொல்லை தரும், துக்கம், பயம், பீடை முதலியவற்றை உண்டாக்கும். கடலை எண்ணெயில் விளக்கேற்றுவது வீட்டுக்கு நல்லதல்ல. |
| குலதெய்வத்திற்கு | - | வேப்பெண்ணெய், இலுபெண்ணெய், பசுநெய் மூன்றும் கலந்து விளக்கேற்றவேண்டும். |
| கணபதிக்கு | - | தேங்காயெண்ணெயால் விளக்கேற்ற வேண்டும். |
| மகாலக்ஷ்மி | - | பசும் நெய்யால் விளக்கேற்ற வேண்டும். |
| நாராயணர் | - | நல்லெண்ணெய் விளக்கேற்ற வேண்டும். |
| ருத்திரர் | - | இலுப்பெண்ணெய் விளக்கேற்ற வேண்டும். |
| பராசக்தி | - | பசும்நெய், விளக்கெண்ணெய், வேப்பெண்ணெய், தேங்காயெண்ணெய், இலுப்பெண்ணெய் ஆகிய ஐந்தும் கலந்து விளக்கேற்ற வேண்டும். |

**சர்வ தேவதைகளுக்கும்**
**நல்லெண்ணெயால் விளக்கு ஏற்ற வேண்டும்.**

## கோயில்களில் செய்யக்கூடாதவைகள்

1. கோயிலை அசுத்தம் செய்யக்கூடாது.
2. கோயிலை சுற்றி மலஜலம் கழிக்கக்கூடாது, எச்சிலைத் துப்பக்கூடாது.
3. விளக்கின் நிழலில் நாம் நிற்கவோ, நடக்கவோ கூடாது.
4. ஒரு காலால் கோயிலை வலம் வரக்கூடாது.
5. இறைவனுக்கு பூஜிக்கப்பட்ட மலர்களை மிதிக்கக்கூடாது. தாண்டவும் கூடாது.
6. கோயிலை ஓடி வலம் வரக்கூடாது.
7. சிவலிங்க கருவறை நீர்வழியும் இடத்தை மிதிக்கவோ, தாண்டவோ கூடாது.
8. சிவலிங்கத்தை தொடக்கூடாது.
9. சரிவர ஆடை உடுத்தாமல் கோயிலுக்கு வரக்கூடாது.
10. திருநீறு அணியாமல் சுவாமி தரிசனம் செய்யக்கூடாது.
11. இறைவனுக்கு அளிக்கப்படும் காணிக்கை மேல் கால்படக்கூடாது.

12. பலிபீடம், இறைவன் சன்னதி இவற்றின் குறுக்கே செல்வதை தவிர்க்க வேண்டும்.

13. பெண்களை கோயிலில் பார்க்கும் போது அவர்களின் இளமை, அழகில் நாட்டம் செல்லக்கூடாது.

14. நந்தி, விமானக்கலசம், கொடிமரம், பலிபீடம், பிரகாரத்தின் உள்ள மூர்த்திகள் நிழலின் மீது மிதித்து செல்லக்கூடாது. அந்த நிழலில் நடந்து சென்று வழிபடவும் கூடாது.

15. பொய் சொல்லுதல், துக்கமான செய்திகள் போன்றவற்றை கோயிலுக்குள் பேசக்கூடாது. பொதுவாக அமைதியாக இருந்து இறைவனின் நாமத்தை மட்டுமே ஜெபிக்க வேண்டும்.

16. கோயிலில் தூங்கக் கூடாது.

## எட்டு வகையான விரதங்கள்

1. திங்கட்கிழமை விரதம்
2. திருவாதிரை விரதம்
3. உமா மகேஸ்வரர் விரதம்
4. சிவராத்திரி விரதம்
5. கேதாரேஸ்வர விரதம்
6. திருடண விரதம்
7. பாசுபத விரதம்
8. அஷ்டமி விரதம்

## தான பலன்கள்

| | | |
|---|---|---|
| **வஸ்த்ர தானம்** | : | ஆயுளை விருத்தி செய்யும். |
| **பூமி தானம்** | : | ப்ரம்ஹலோகத்தைத்தரும். |
| **தேன்தானம்** | : | புத்ர பாக்யம் உண்டாக்கும். |
| **கோதானம்** | : | ரிஷிக்கடன், தேவக்கடன், பித்ருக் கடன், என்று மூன்று கடன்களையும் அகற்றும். |
| **உத்க்ராந்தி கோதானம்** | : | ப்ராணன் போகும் சமயத்தில், செய்யும் கோதானம் கஷ்டமில்லாமல் ப்ராணன் போகும்படிச் செய்யும். |
| **வைதரணீ கோதானம்** | : | இறந்த ஜீவன் "வைதரிணி" எனும் மிக கோரமான நதியை சுகமாக கடக்க உதவும். |
| **கர்மாங்க கோதானம்** | : | அந்தந்த கர்மாவைப் பூர்ணமாக ஆக்கும். |
| **நெல்லிக்காய் தானம்** | : | ஞானத்தை உண்டு பண்ணும். |
| **கோவிலில் தீப தானம்** | : | சக்ரவர்த்தி பதவி கிடைக்கும். |
| **தீப தானம்** | : | கண்பார்வை வ்ருத்தி செய்யும். |
| **எருமை தானம்** | : | அகால மரணத்தை அகற்றும். |
| **விதை தானம்** | : | தீர்க்காயுளைத் தரும். தீர்க்காயுளுள்ள சந்ததி உண்டாகும். |
| **அரிசி தானம்** | : | பாபத்தைப் போக்கும். |
| **தாம்பூலம் தானம்** | : | ஸ்வர்க்கத்தைத் தரும். |

| | | |
|---|---|---|
| பழம் தானம் | : | ஸ்வர்க்கத்தைத் தரும். |
| கம்பளி தானம் | : | வாயுரோகத்தை நீக்கும். |
| பருத்தி தானம் | : | வெண்குஷ்டத்தைப் போக்கும். |
| பூணூல் தானம் | : | ப்ராம்மண ஜன்மாவைத் தரும். |
| புஷ்பம், துளசி, ஸமித் கறிகாய், தான்யம் தானம் | : | ஸ்வர்க்கத்தை அளிக்கும். |
| நெய் தானம் | : | ரோக நாசனம். |
| சர்க்கரை தானம் | : | ஆயுள் விருத்தி. |
| பால் தானம் | : | துக்கம் அகலும். |
| பக்ஷ்யம் தானம் | : | (வடை முதலியன) விக்நத்தை அகற்றும். |
| வாழைப்பழம் தானம் | : | புத்தி ஸூக்ஷ்மமாகும். |
| தேன் தானம் | : | தேஹகாந்தியையும் அழகையும் தரும். |
| வெல்லம் தானம் | : | சோகம் அகலும். |
| தேங்காய் தானம் | : | கவலை தாபம் அகலும். |
| பொரி தானம் | : | இவ்வுலக சுகம் உண்டாகும். |
| எள் தானம் | : | யமலோக பயம் அகலும். |
| தயிர் தானம் | : | இந்திரிய வ்ருத்தி |
| அவல் தானம் | : | தேவப்ரஸாதம் உண்டாகும். |
| கடலை தானம் | : | ஸந்ததி வ்ருத்தி. |
| சத்துமாவு தானம் | : | பகவத் பக்தி உண்டாகும். |
| பாயஸ தானம் | : | பித்ரு, ப்ரீதி, சந்ததி வ்ருத்தி |
| ஸ்வர்ண தானம் | : | பாபம் அகலும், ஏழ்மை அகலும். |
| குடை, பாதுகை தானம் | : | யமலோகத்தில் இன்பம் தரும், இஹத்திலும் இன்பம் தரும். |
| கன்யா தானம் | : | ப்ரம்ஹலோகம். |
| விசிறி, பானகம், நீர்மோர், தீர்த்த தானம் | : | மனத்திற்கு சாந்தி அளிக்கும், வாயு வருணலோக ப்ராப்தி. |
| படுக்கை தானம் | : | ஸுகத்தை அளிக்கும். |
| ஜபமாலை, ஆஸனம், விபூதி கோபி சந்தனம் தானம் | : | ஸுககரம், நல்ல ஜன்மாவைத் தரும். |
| அன்ன தானம் | : | ஸ்வர்க்கம் உண்டாகும். அன்னம் கிடைக்கும். |

# அம்மன் பாமாலை



## திருவொற்றியூர் வடிவுடையம்மன்

சந்தனம், குங்குமம், ஜவ்வாது, திருநீரில்
தவழ்ந்திடும் சக்தி வடிவே
தங்கமுக ஒளியிலே தரணியை வாழ்விக்கும்
தாயமுத அன்பு வடியே|
செங்கனிச் சிரிப்பிலே செவ்வானம் பொழிகின்ற
செம்பவழ முத்து வடிவே
செங்கதிர் ஒளிகூட்டி சிங்காரப்புகழ் சூடும்
செப்பரிய அழகு வடிவே
கந்தனை கணபதியை தந்துமே வாழ்வித்த
கற்கண்டு கனிவு வடிவே
காற்றையும் மழையையும் கதிரவன் ஒளியையும்
கலந்து கரும் இயற்கை வடிவே
சிந்தனைச் சோலையில் தென்றலாய் உலவிடும்
தெய்வ ஒளி சிற்ப வடிவே
சிவனாரின் துணையாக திருவொற்றியூர் வாழும்
ஸ்ரீ வடிவுடையம்மை உமையே
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்

## காரைக்குடி கொப்புடையம்மன்

மஞ்சள் முகத்தழகும் மத்தியில் பொட்டழகும்
மங்களம் தருவதன்றோ|
மாணிக்க மூக்குத்தி நத்து பில்லாக்குமே
மகிழ்வூட்டும் அலங்காரமே
அஞ்சனம் தீட்டிய அம்புவில் விழிகளில்
அகிலமே அடக்கமன்றோ|
அழகான காதினில் ஆடிடும் குண்டலம்
அலைகடல் முத்து வகையோ
தஞ்சமென வந்தவரை தாங்கிடும் கைகளில்
தவழ்ந்திடும் தங்கவளையல்
தங்கமென நெஞ்சிலே கொஞ்சிடும் மாலைகள்
தாயவளின் பொற்குவியல்கள்
கொஞ்சிடும் உதட்டிலே கூடிடும் புன்னகை
கோடிக்கு கோடி பெறுமோ
குறையாத வாழ்வினை நிறைவாக தந்திடும்
கொப்புடை யம்மை உமையே

## பெங்களூர் ராஜராஜேஸ்வரி

மலையரசி மாதரசி மங்காத புகழரசி
மாதவத்து பேரரசியே
மாணிக்க தேரேறி மகிழ்வாக பவனிவரும்
மங்கலத் தாயரசியே
கலையரசி கயலரசி கனிவான மொழியரசி
கற்கண்டு சொல்லரசியே
காவியத் தமிழ்நெஞ்சில் கருணையாம் நிலைதந்து
களிக்கின்ற பூவரசியே
சிலையாக நின்றாலும் சீரான வாழ்வுதரும்
செம்மைச்சேர் எழிலரசியே
செவ்வானம் பொழிகின்ற சிங்கார அருள்முத்து
தேவியவள் அருளாசியே
நிலையான வாழ்வுக்கு நீங்காத ஒளியூட்டும்
நெறியான தாயரசியே
நித்தமும் சித்தத்தில் நின்றுநீ அருளூட்டும்
நீடுபுகழ் ராஜேஸ்வரியே

## காஞ்சி காமாட்சி

முத்துமணி மண்டபம் ரெத்தினச் சிம்மாசனம்
முழங்கிடும் மணி ஓசையே
முப்பெறும் சக்தியாம் திரிசூலம் ஏந்திடும்
முத்து நகை பெற்ற தாயே
பத்து விரல் சூட்டிய பவழமணி மோதிரம்
பாடக தண்டை கொலுசும்
பச்சையுடன் நீலமும் புஷ்பராகத்திலும்
பதித்திட்ட தாலியழகும்|
முத்து மூக்குத்தியும் முழுவைரக் கம்மலும்
முத்தார ஒட்டியாணம்
முத்துமணி மாலையுடன் முக்தி தரும் கைகளில்
முக்கனிக் கரும்பு வில்லும்
சித்தத்தில் என்றுமே சக்தியாய் விளங்கிடும்
தேவியவள் அருள் மாட்சியே
செந்தமிழ் பாடியுடம் சிந்தையில் வாழ்ந்திடும்
தேவியுமை காமாட்சியே

## மதுரை மீனாட்சி

மீன் கொடி பறக்கவே மேதினி சிறக்கவே
மிளிர்கின்ற மாமதுரையே
மேகநிறச் சொக்கர் மீனாட்சி கல்யாணம்
மேன்மையாய் நடக்குதங்கே
தேன் சொட்டும் சித்திரையில் திருவிழா நடக்குதே
திக்கெட்டும் மக்கள் வெள்ளம்
தெவிட்டாத மொழிபேசும் சிங்கார கிளியோடு
சிரிக்கின்ற தாயின் உள்ளம்
வான்முட்டும் கோபுரம் வழிந்தோடும் வைகையும்
வையத்தை வாழவைக்கும்
வாழ்ந்திடும் தமிழ்சங்க வள்ளுவன் குரலோடு
வாழ்வினை உயரவைக்கும்
கோனாட்சி செய்கின்ற மீனாட்சி பவனிவர
கொஞ்சும் எழில் தங்கர தமே
கோடிப்பேர் நெற்றியில் குங்குமம் ஆகியருள்
கோதை மீனாட்சி யுமையே

## காசி விசாலாட்சி

ஆதிசிவன் உடல்மீது பாதி உடல் பெற்றிட்ட
அழகான அன்னை உமையே
ஆற்றல்சேர் சக்தியாய் அகிலத்தை காப்பதற்கு
அருளாகி வந்த திருவே
வேதனைகள் தீர்க்கின்ற வேல்விழியே அருள்காட்டி
வெற்றியினை காட்டுவாயே
வெங்கொடுமை தணிக்கின்ற கங்கைநதி
ஓரத்தில் விளையாடும் அன்னைநீயே
மாதவங்கள் செய்கின்ற மாமுனிவர் பலபேர்கள்
வாழ்கின்ற புனித காசி
மாற்றங்கள் செய்கின்ற தீர்த்தங்கள் விளையா
மணக்கின்ற இனிய காசி
சோதனைகள் வரும்போது வேதனையை நீக்குகின்ற
சோலையாம் விசாலாட்சியே
சொந்தமென வந்துநிதம் உன்னடியைத்
தொழுவோர்க்குத்
துணை நீயே விசாலாட்சியே

## திருவேற்காடு கருமாரி அம்மன்

பூக்காட்டில் மணம் பரப்பி புகழ்காட்டில் (வீற்றிருக்கும்)
பொன்னாரம் அன்னைமாரி
புகழான திரிசூலம் புவனத்தை வாழ்விக்கும்
பொற்புடைய தேவிமாரி
வேற்காட்டில் வாழ்ந்திருந்து வேதனைகள் தீர்க்கின்ற
வெண்குடை முத்துமாரி
விந்தைபல செய்துமே சித்துவிளையாடிடும்
வெற்றிநகை கண்டமாரி
சாக்காட்டுச் சிந்தைகள் சாகடித்து இன்பத்தை
தருகின்ற பொன்னிமாரி
சக்திதனை உண்டாக்கும் சக்தியிவள் என்றுமனம்
சாற்றுகின்ற அன்னைமாரி
ஆக்கங்கள் பலகூட்டி ஆற்றல்கள் பலவூட்டி
அன்புதரும் சக்திமாரி
அழகான வேற்காட்டிய சுடராக வாழ்கின்ற
அன்னை கருமாரியுமையே

## சமயபுரம் மாரியம்மன்

இமயத்தில் பிறந்தாலும் இதயத்தில் வாழ்கின்ற
இணையற்ற தாயமுதமே
இல்லாமை இல்லாமல் எல்லோருமே வாழ்ந்திட
எழுந்தருளும் அருளமுதமே
சமயத்தில் வரும் இன்னல் தகர்ந்திடும் அன்னையே
சமயபுரம் மாரியம்மா
சஞ்சலம் நீங்கிடச் செஞ்சுடர் காட்டிடும்
சக்தியே தேவியம்மா
உமையவளின் மறுவுருவாய் உலகத்தை காக்கின்ற
ஓங்கார வல்லிநீயே
உன்னருளில் பிள்ளைகள் உயர்வோடு வாழ்ந்திட
உற்றவழி சொல்லுவாயே
அமைந்திட்ட வாழ்க்கையும் சக்கரமாய் சுற்றிட
ஆறுதல் செப்புவாயே
ஆறுதல் கூறியே மாறுதல் தருகின்ற
அம்மையே மாரியுமையே

## தில்லை சிவகாமி

ஆட்டங்கள் ஆடியே அகிலத்தை ஆண்டிடும்
ஆனந்த வல்லி நீயே
அழகான நாட்டியமுத்திரை நூற்றெட்டு
அமைந்திட்ட சிவகாமியே
பாட்டரங்கம் கொண்டு பாவலர் நாள்தோறும்
பாமாலை கோடி தருவார்
பாமாலை பாடியே பூமாலை பலசூடும்
பக்தர்கள் நாடி வருவார்
கோட்டங்கள் மண்டபம் கோபுரம் நந்தியும்
கூத்தனின் புகழ் பாடுதே
கூத்தனுடன் சக்தியும் ஆடிடும் ஆட்டத்தில்
கொடுமைகள் அழிந்தோடுதே

வாட்டங்கள் போக்கிட வந்திடும் அன்னையே
வல்லியவள் சிவகாமியே
வரம்வேண்டி கரங்கூப்பும் வறியவள் வாழ்வினை
வளமாக்கும் தேவியுமையே

## கன்னியாகுமரி பர்வதவர்த்தினி

கடல்மூன்றின் சங்கமம் கதிரவன் பேருதயம்
கன்னியவள் ஆட்சியம்மா
கன்னியவள் மூக்குத்தி கப்பலை காத்திட்ட
கதையுமே சாட்சியம்மா
உடல் எங்கும் சிங்காரம் ஒய்யாரச் சிற்றாடை
உள்ளத்தில் பூக்குதம்மா
ஒப்பற்ற அமுதமுகம் ஒளியூட்டும் குமுதவிழி
உலகத்தை காக்குதம்மா
இடரில்லா இன்பத்தை என்றுமே தந்திடும்
இணையற்ற குமரியம்மா
என்றுமே கன்னியாய் இருந்துமே மக்களின்
இன்னலை மாற்றுமம்மா
அடலேறு போலவே அனைவரும் வாழ்ந்திட
அன்புடன் அருளுவாயே
அகிலத்தை ஆண்டிடும் பர்வத வர்த்தினி
அம்மையே கன்னியுமையே

## திருக்கடவூர் அபிராமி

அழிசூழ் உலகத்தை அன்பாலே காத்திடும்
அன்னையே அருள் நாயகி
அழகான கடவூரில் பட்டருக்கருள் செய்த
அம்மையே புகழ்நாயகி
வேழமாய் ஒரு பிள்ளை வேலோடு மறு பிள்ளை
மேன்மையாய் பெற்ற தாயே
வினைதீர்க்கும் குங்குமம் மஞ்சளில் விளங்கிடும்
வேள்விழியே கோதை நீயே
ஏழிசை நாதத்தை எழுப்பியே மகிழ்ந்திடும்
இணையற்ற இசைவல்லியே
எங்குமே மங்களம் பொங்கியே தங்கிட
இயங்கிடும் சக்தி நீயே
வாழியெனப் பணிவோடு வாழ்ந்திடும்
சொல்லாண்டு வாழ்ந்திடும் தமிழ் நாயகி
வழங்கூட்டும் கரும்புவில் வழங்கிடும் காட்சியே
வள்ளல் நீ அபிராமியே

## கொல்லங்குடி காளி

நல்லதை சொல்லென்றும் நல்லதே செய்யென்றும்
நயம்படச் சொல்லும் தாயே
நச்சு எண்ணம் கொண்ட இச்சையாய் அலைவாரை
நசுக்கிடும் அன்னை நீயே
பொல்லாத செயலினை பொடிப் பொடியாக்கிடும்
பொன் சுடர் தீபம் நீயே
புகழுடைய வாழ்விற்குப் பொன்முடி சூட்டியே
பூத்தூவி வாழ்த்துவாயே
கல்லாத மாந்தரின் கண்ணீரை நீக்கிடும்
கருவண்ண அன்னை நீயே
கற்றோரின் நெஞ்சத்தில் கலங்கரை விளக்கான
காவியச் சுடரும் நீயே
வில்லாக வேலாக வினைதீர்க்கும் மருந்தாக
விளங்கிடும் சக்தி நீயே
வேண்டிடும் நல்லவரம் விரைவாக தந்திடும்
வெண்கொற்ற காளியுமையே

## சிவகங்கை துர்க்கை அம்மன்

சிங்காரச்சிற்றாடை சிகப்புநிற பட்டாடை
சிங்கங்கை சிற்றூரில் சீரான அலங்காரம்
தெவிட்டாத கண்காட்சியே
மங்காத புகழுக்கும் மலர்கின்ற வாழ்வுக்கும்
மாயவனின் அரசாட்சியே
மருவிடும் தீவினை மாய்ந்துமே மறைந்திட
மாதவனின் அருளாட்சியே
கங்கையில் குளித்திட்டு காவிரியில் பொட்டிட்ட
காவியப் புகழாட்சியே
கன்னியர் மணமாலை களிந்துமே தந்திடும்
கருணை மழை பொற்காட்சியே
மங்கள முழக்கங்கள் தங்கியே ஒலித்திடும்
மங்கையின் எழிலாட்சியே
மலர்கின்ற புகழாரம் என்றுமே தந்திடும்
மாதேவி துர்கையுமையே

## பெரியபாளையம் பவானி அம்மன்

உள்ளத்தின் ஆசையை ஒப்பற்ற ஓசையாய்
ஒலித்திடும் ஓங்காரியே
உலகத்தின் ஆசையை உதிக்கின்ற அருளாக
ஒளிர்கின்ற ரீங்காரியே
பள்ளத்தில் விழாமல் பாவங்கள் செய்யாமல்
பண்பாக்கும் சிங்காரியே
பாசமுடன் கருணையாக பாகாக குழைத்துமே
பசி தீர்க்கும் அலங்காரியே
கொள்ளைகள் கொடுமைகள் இல்லாத வாழ்வுமழை
கொடுத்திடும் மின்னல் ஒளியே
கொஞ்சிடும் குழந்தைகள் கோரிடும் வரங்களைக்

கொடுத்திடும் அன்னை விழியே
வெள்ளையம்பாளையம் வேப்பிலை ஆலயம்
வெகுவாக பெற்ற தாயே
வினைதீர்க்கும் சோலையாம் பெரிய நற்பாளையம்
வீற்றிடும் பவானியுமையே

## மூகாம்பிகை அம்மன்

ஏகாந்த ஏட்டிலே எழுத்தாகி ஒலித்திட்ட
இலக்கிய பெருமுழக்கமே
இரவாத காவியம் இனிதான ஓவியம்
எழுந்திடும் மொழி முழக்கமே
சாகாத தர்மங்கள் தருகின்ற கரங்களில்
சக்கர பொருள் விளக்கமே
சாந்தியும் அமைதியும் தந்திடும் மந்திரங்கள்
சக்தியின் அருள் விளக்கமே
நோகாத உள்ளங்கள் நுண்கலை விளக்கங்கள்
நோக்கமுற தந்து மகிழ்வாய்
ஆகாத செயலினால் அரும்பிடும் ஆசையை
அழித்துமே சிரித்து மகிழ்வாய்
பாகான சொல்லுக்கும் பண்பான செயலுக்கும்
பதியான ரதிதேவியே
பைந்தமிழ் அமுதத்தை தேனாக பருகிடும்
பாவையே மூகாம்பிகே

## நெல்லை காந்திமதி அம்மன்

முல்லையுடன் மல்லிகை முத்தார அணியூட்டி
முடிசூட்டும் அன்னைநீயே
மோகனப் புன்னகை பூத்திடும் இதழ்களில்
முத்தமிழ் சிந்துவாயே
கல்லையும் கனியாக்கம் கற்கண்டு மொழி தந்த
கண்கண்ட தெய்வம் நீயே
கடலையும் மலையையும் காலத்திற்கிணை சொன்ன
காவியச் சோலை நீயே
எல்லையே இல்லாத நெல்லையம்பதியினில்
ஏற்றிய தீபம் நீயே
எங்கும் இருள்நீக்கி இனியநல் அருளூட்டும்
ஈசனின் பதியும் நீயே
தொல்லைகள் மறைந்திட தொண்டுள்ளம் மலர்ந்திட
தூயவரம் அருளுவாயே
தும்பிக்கை கணபதி தோகையில் முருகனுடன்
தோன்றிடும் காந்திமதியே

## வடசென்னை காளிகாம்பாள்

காமாட்சி மீனாட்சி காசி விசாலாட்சி
சென்னை நகர் காளிகாம்பாள்
தருமமிகும் சென்னையில் நியாயத்தை வழங்கிடும்
அன்னையே காளிகாம்பாள்
கல்வியே இல்லாத மாந்தருக்கு கற்பித்த
கலைவாணி காளிகாம்பாள்
செல்வமில்லாதவரை செல்வந்தனாய் மாற்றும்
திருமகளே காளிகாம்பாள்
கோழையை வீரனாய் ஆக்கிடும் சக்தியே
மலைமகளே காளிகாம்பாள்
கலைமகள் அலைமகள் மலைமகள் நீயேயென
போற்றிடும் காளிகாம்பாள்
மராட்டிய சிவாஜிக்கு வெற்றியை அளித்திட்ட
பவானியே காளிகாம்பாள்
மனமார வேண்டியே மகிழ்வூட்டும் அன்னையே
மகிழ்ச்சி தரும் காளிகாம்பாள்

## ஸ்ரீ அலர்மேலு மங்கை

மாலவன் மலை வீட்டில் மணிச்சங்குப் பூபாளம்
மலர்கின்ற சுப்ரபாதம்
மங்கையவர் அலமேலு தங்கவிரல் மீட்டிடும்
மதுரமொழி வீணைநாதம்
கோலவிழி இரண்டிலும் கொஞ்சிடும் அருள்மணம்
கோமகள் தரும் சீதனம்
கோமகன் மாதவனின் குளிர்கொண்ட திருமார்பம்
கோதையின் அழகாசனம்
சீலங்கொள் சங்கமும் சிறக்கின்ற சக்கரமும்
திருமகளை நிதம் பாடுமே
செவ்வுடல் மாதரசி சிந்தைகொள் நாவரசி
திருவடியை மனம் நாடுதே
காலத்தை வென்றிடக் கருணைவிழி பலகாட்டிக்
காக்கின்ற அன்னை நீயே
கார்முகில் வண்ணனின் கண்கவர் நாயகி
களிப்பூட்டும் மங்கையுமையே

## தையல் நாயகி அம்மன்

கொஞ்சிடும் நெல்வளம் கொழித்திடும் பல்வளம்
குவித்திடும் கொடை நாயகி
கொடுமை மிகு நோய்தீர கோலமிகு திருச்சாந்து
கொடுத்தருளும் புகழ்நாயகி
வஞ்சியவள் பூவரசி வைத்தீசன் துணையரசி
வற்றாத கங்கை நதியே

வாடிடும் பக்தர்க்கும் பாடிடும் சித்தர்க்கும்
வழி காட்டும் சங்க நதியே!
நெஞ்சமலர் கோவில் நீ தந்த ஓம்சக்தி
நீடு புகழ் ஓங்காரமே
நீங்காத அன்புக்கும் பாங்கான தமிழுக்கும்
நெறியூட்டும் அலங்காரமே
தஞ்சமென உன் வாசல் தங்கவரும் பிள்ளைக்கு
தருகின்ற அருள் ஞானமே
தங்கமும் காட்டிடு தரணியைக் காட்டிடு
தாய் சக்தி தையல் உமையே

## பர்வதவர்த்தினி அம்மன்

அறம் சொன்ன நாயகன் அயோத்திநகர் மன்னவன்
அவன் வாழும் ராமேஸ்வரம்
அன்னையாம், கோசலை அவள் ஈன்றதிருமகன்
அடிகண்ட இராமேஸ்வரம்
மதம்கொண்ட ராவணனை மண்வீழ வென்றிட்ட
மாதவனின் இராமேஸ்வரம்
மாதவளாம் சீதையின் மாண்புகள் வெளியாக
வழி தந்த இராமேஸ்வரம்!
திறங்கண்ட சிவலிங்கதனை பூஜை செய்ததற்கு
சீர் ராமன் சமைத்த நாதன்
திருமாலே வழிபட்ட சீர்மைகள் பலகொண்டு
சிங்கார ராமநாதன்
பரம்பொருள் ஆதிசிவன் பக்கத்திருந்தபடி
பக்தரைக் காக்கும் இறையே
பர்வதவர்த்தினிப் பெயரோடு விளங்கிடும்
பாங்கான மங்கை உமையே

## முகுந்தாள அம்மன்

ஆதியாய் ஜோதியாய் அணையாத தீபமாய்
அரசாளும் முரசின் ஒலியே
அண்டங்கள் எங்கிலும் ஆனந்த ராகமாய்
அழகூட்டும் அமுத மொழியே
பாதி உடல் சக்தியாய் மீதி உடல் சிவனாக
பாரினைக் காக்கும் நிலவே
பனிமலைச் சிகரத்தில் பதுமாசனம் கொண்ட
பரமனின் பாத மலரே!
நீதிக்கும் நேர்மைக்கும் நெறியூட்டும் திருக்கோயில்
நீ வாழும் கொங்கு நாடு
நீராக நிலமாக நெருப்பாக காற்றாக
நிறைந்திட்ட வான வீடு
ஜோதிக்கும் ஜோதியே சுடரான தேவியே
சுந்தரக் குந்ததளம்மையே

சூட்டுவோம் தமிழ்மாலை ஏற்றிடுக புகழ்மாலை
துணையிரு அம்மையுமையே

## ஸ்ரீ ஆதிபராசக்தி அம்மன்

உருவத்தில் சிவசக்தி ஓங்கார நவசக்தி
ஒளியூட்டும் ஓம் சக்தியே
உலகத்தின் தாய்சக்தி உயர்வான வேல்சக்தி
ஒப்பற்ற திரி சக்தியே!
புருவங்கள் பல கொண்டு பாரினைக் காத்திடும்
பாவையே உயர் சக்தியே
பாசமிகு மங்கையர் மஞ்சளுடன் குங்குமம்
பண்பாடும் எழில் சக்தியே
கருவுக்கும் அருள் தந்து உயிருக்கும் உருத்தந்து
காக்கின்ற உயர் சக்தியே
கருமாரி வெக்காளி கண்ணம்மை என்றபடிக்
கணக்கின்றி வந்த சக்தியே
மருவத்தூர் அருள்வாக்கு பங்காரு அடியாரின்
மணி வாக்கில் உறை சக்தியே
மக்களின் குறை நீக்கி மங்கலம் நிறைவாக்கு
மாசக்தி அன்னை உமையே!

## ஸ்ரீ கற்பகாம்பாள்

தித்திக்கும் திருக்கோவில் சிங்காரப் பொற்கோவில்
சிறக்கின்ற மயிலையூரே
திருநீற்று பாமாலை தினம்பாடி அதிகாலை
செப்புவர் சிவனின் பேரே!
முத்தொலி வைரவிழி முழுநிலவு முகத்தின்ஒளி
முருகவேள் தரும் புன்னகை
சக்தியின் திருக்காட்சி சரித்திரம் புகழ் மாட்சி
சாற்றிடும் அற்புதங்கள்!
தங்க உடல் அங்கமதில் தவழ்கின்ற சிங்காரம்
தமிழ் தந்த பொற்பதங்கள்
எத்திக்கும் மறையாக ஏழையரின் இறையாக
இருப்பவள் கற்பகாம்பாள்
எல்லோரும் எல்லாமும் என்றுமே பெற்றிட
எழில் கூட்டும் அம்மையுமையே

## ஸ்ரீ முத்தாள அம்மன்

வித்துக்கு வித்தாக வேதத்தின் சொத்தாக
விளங்கிடும் முத்து முகமே!
வெற்றிகள் பலகோடி வேண்டுவோர் உனைநாடி
வினைதீர்க்கும் சக்தி அகமே
சத்திய பொங்கலில் தர்மத்தின் கட்டிலில்
தவழ்ந்திடும் தங்க நிலவே

தரணிக்கு திரிசூல சக்திகள் மூன்றையும்
தருகின்ற தாயின் கரமே
சித்திரப் பாவையே செவ்வுடைப் பூவையே
சிங்காரப் பற்று வடிவே
சிங்கத்தில் ஏறிவரும் தேவியின் திருக்கோலம்
சிந்தனை ஊற்று வடிவே
முத்து நகை பூட்டியே மோகன ரதமேறும்
முக்கனி அமுத மலையே
முறையாக வணங்குவோர் குறையாவும் தீர்ந்திடும்
முத்தாளம்மை யுமையே

## ஸ்ரீ பகவதி அம்மன்

வைரமுடி கிரீடங்கள் வானத்தை முத்தமிட
வஞ்சியவள் ஆட்சி செய்வாள்
வட்டமிடும் முத்துவிழி பொட்டிட்ட முகத்தினில்
வண்டாடும் காட்சி தருவாள்
மொய்குழலி மொழியரசி முத்தமிழ் கலையரசி
முனிவரின் வேதமானாள்
மூலக்கனலாகி முடியாத முதலாகி
முழங்கிடும் நாதமானாள்
நாயகி நான்முக நளினினி நந்தினி
நலங்கூட்டும் பெயர் சூடுவாள்
நவில்கின்ற உள்ளத்தில் நல்லவர் இல்லத்தில்
நலமுடன் வர நாடுவாள்
மாயவன் உலகமே மந்திரத் திலகமே
மங்கலத் தங்க மயிலே
மக்களின் குறைகளை தீர்த்திடும் பாவையே
பகவதி அம்மையுமையே

## அபிராமி துதி

கலையாத கல்வியும் குறையாத வயதும் ஓர்
கபடு வாராத நட்பும்
குன்றாத வளமையும், குன்றாத இளமையும்,
கழுபிணி இலாத உடலும்,
சலியாத மனமும், அன்பு அகலாத மனைவியும்
தவறாத சந்தானமும்
தாழாத கீர்த்தியும், மாறாத வார்த்தையும்,
தடைகள் வாராத கொடையும்,
தொலையாத நிதியமும், கோணாத கோலும், ஒரு
துன்பம் இல்லாத வாழ்வும்
துய்ய நின் பாதத்தில் அன்பும் உதவிப் பெரிய
தொண்டரோடு கூட்டு கண்டாய்
அலையாழி அறிதுயிலும் மாயனது தங்கையே
ஆதி கடவூரின் வாழ்வே
அமுதீசர் ஒரு பாகம் அகலாத சுகபாணி
அருள்வாமி அபிராமியே!
ஓம்சக்தியே ஆதிசக்தி மகாசக்தி சரணம்
ஓம்சக்தியே ஞானசக்தி வடிவுடை தாயேசரணம்
ஓம்சக்தி இச்சாசக்தி திருவுடை தாயேசரணம்
ஓம் சக்தி கிரியாசக்தி கொடிவுடைதாயேசரணம்
ஓம்சக்தி மகாசக்தி காமாட்சி தாயேசரணம்

## சக்தி தோத்திரம்

ஆதிசக்தி ஜோதி சக்தி ஆளவந்த சக்தியே
ஆகமங்கள் ஆனசக்தி ஆத்மஜோதி சக்தியே
நீதி சக்தி நித்திய சக்தி நீறுபூசும் சக்தியே
நீலிசக்தி நிருத்தசக்தி நீலமேனி சக்தியே

காளிசக்தி கானசக்தி காணுமின்ப சக்தியே
காளிசக்தி காயசக்தி காட்சி தந்த சக்தியே
வீரசக்தி தீரசக்தி வீடு காக்கும் சக்தியே
சூரசக்தி குலிசக்தி சூழும்சக்தி சக்தியே

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்மொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்
பெருமைபெறும் நினதுபுகழ் பேசவேண்டும் பொய்ம்மை
பேசா திருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டும் மதமானபேய்
பிடியா திருக்க வேண்டும்
மருவுபெண் ஆசையை மறக்கவே வேண்டும் உனை
மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும் நின் கருணை நிதிவேண்டும் நோயற்ற
வாழ்வில் நான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

ஈயென்று நானொருவர் இடம்நின்று கேளாத
இயல்பும், என்னிடம் ஒருவர் ஈது
இடுவென்ற போதவர்க்(கு) இலையென்று சொல்லாமல்
இடுகின்ற திறமும், இறையாம்
நீ, யென்று எனைவிடா நிலையும், நான் என்றும் உன்
நினை விடா நெறியும் அயலார்

நிதியொன்றும் நயவாத மனமும், மெய்ந்
நிலையென்றும்
நெகிழாத திடமும், உலகிற்
சீயென்று, பேயென்று, நாயென்று பிறர்தமைத்
தீங்குசொல் லாத தெளிவும்
திரமொன்று வாய்மையுந் தூய்மையுந் தந்துநின்
திருவடிக்(கு) ஆளாக்குவாய்
தாயொன்று சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே

நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற
நிலனுண்டு பலனும் உண்டு
நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட
நெறியுண்டு நிலையும் உண்டு
ஊருண்டு பேருண்டு மணியுண்டு பணியுண்டு
உடையுண்டு கொடையும் உண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தமுறும்
உளமுண்டு வளமும் உண்டு
தேருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவும் உண்டு
தேனுண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்
தியானம் உண்டாயில் அரசே!
தாருண்ட சென்னையிற் கந்த கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே

எத்திக்கும் என்னுளம் தித்திக்கும் இன்பமே
என்னுயிர்க்கு உயிராகும் ஓர்
ஏகமே ஆனந்த போகமே யோகமே
என் பெருஞ் செல்வமே, நன்
முத்திக்கு முதலான முதல்வனே மெய்ஞ்ஞான
மூர்த்தியே, முடிவி லாத
முருகனே நெடியமால் மருகனே சிவபிரான்
முத்தாடும் அருமை மகனே
பக்திக்(கு) உவந்து அருள் பரிந்தருளும் நின்னடிப்
பற்(று) அருளி, என்னை இந்தப்
படியிலே உழல்கின்ற குடியிலே ஒருவனாப்
பண்ணாமல், ஆண்டருளுவாய்
சத்திக்கும் நீர்ச் சென்னை கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

## நடராஜப் பத்து



மண்ணாதி பூதமொடு விண்ணாதி அண்டம் நீ
மறை நான்கின் அடிமுடியும் நீ
மதியும் நீ ரவியும் நீ புனலும் நீ அனலும் நீ
மண்டல மிரண்டேழும் நீ.

பெண்ணும் நீ ஆணும் நீ பல்லுயிர்க்குயிரும் நீ
பிறவும் நீ ஒருவன் நீயே
பேதாதி பேதம் நீ பாதாதி கேசம் நீ
பெற்ற தாய் தந்தை நீயே

பொன்னும் நீ பொருளும் நீ இருளும் நீ ஒளியும் நீ
போதிக்கவந்த குரு நீ
புகழொணாக் கிரகங்க ளொன்பதும் நீ யிந்தப்
புவனங்கள் பெற்றவனும் நீ

எண்ணிய ஜீவகோ டிகளீன்ற அப்பனே
என் குறைக ளார்க் குரைப்பேன்
ஈசனே சிவகாமி நேசனே யெனையீன்ற
தில்லை வாழ் நடராஜனே

மானாட மழுவாட மதியாடப் புனலாட
மங்கை சிவகாமியாட
மாலாட நூலாட மறையாடத் திரையாட
மறைதந்த பிரம்மனாட

கோளாட வானுலகு கூட்டமெல் லாமாட
குஞ்சர முகத்தனாடக்
குண்டல மிரண்டாடத் தண்டைபுலி புடையாடக்
குழந்தை முருகேசனாட

ஞானசம்மந்தரொடு யிந்திரர்பதி னெட்டு
முனியாட பாலகருமாட
நரைதும்பை யறுகாட நந்தி வாகனமாட
நாட்டிய பெண்களாட

வினையோட உனைப்பாட வெனைநாடி யிதுவேளை
விருதோடு ஆடிவருவாய்
ஈசனே சிவகாமி நேசனே யெனையீன்ற
தில்லைவாழ் நடராஜனே

கடலென்ற புவிமீதில் அலையென்ற வுருக்கொண்டு
கனவென்ற வாழ்வை நம்பி
காற்றென்ற மூவாசை மாருதச் சுழலிலே
கண்டுண்டு நித்த நித்தம்

உடலென்ற கும்பிக்கு உணவென்ற யிரைதேடி
ஓயாம லிரவு பகலும்
உண்டுண் டுறங்குவதைக் கண்டதே யல்லாது
ஒருபய னடைந்தி லேனே

தடமென்ற மிடிகரையில் பந்தபா சங்களெனும்
தாபரம் பின்னலிட்டுத்
தாயென்று சேயென்று நீயென்று நானென்று
தமியேனை யிவ் வண்ணமாய்

இடையென்று கடைநின்று யேனென்று கேளா
திருப்பதுன் னழகாகுமோ
ஈசனே சிவகாமி நேசனே யெனையீன்ற
தில்லைவாழ் நடராஜனே

பம்புசூ னியமல்ல வைப்பல்ல மாரணந்
தம்பனம் வசியமல்ல
பாதாள வஞ்சனம் பரகாய ப்ரவேச
மதுவல்ல சாலமல்ல

அம்புகுண் டுகள் விலக மொழியுமந் திரமல்ல
ஆகாய குளிகையல்ல
அன்போடு செய்கின்ற வாதமோடி களல்ல
அரிய மோ கனமுமல்ல

கும்பமுனி மச்சமுனி சட்டமுனி பிரம்மரிஷி
கொங்கணர் புலிப்பாணியும்
கோரக்கர் வள்ளுவர் போகமுனி, யிவரெலாங்
கூறிடும் வைத்தியமல்ல

என்மனதுன் னடிவிட்டு நீங்காது நிலைநிற்க
யேதுளவு புகல வருவாய்
ஈசனே சிவகாமி நேசனே யெனையீன்ற
தில்லைவாழ் நடராஜனே

நொந்துவந் தேனென்று ஆயிரஞ் சொல்லியும்
செவியென்ன மந்தமுண்டோ

நுட்பநெறி யறியாத பிள்ளையைப் பெற்றபின்
நோக்காத தந்தையுண்டோ

சந்ததமுந் தஞ்சமென் றடியைப் பிடித்தபின்
தளராத நெஞ்சமுண்டோ
தந்திமுகன் அறுமுகன் இருபிள்ளை யில்லையோ
தந்தை நீ மலடுதானோ

விந்தையும் ஜாலமும் உன்னிட மிருக்குதே
வினையொன்று மறிகிலேனே
வேதமும் சாஸ்திரமும் உன்னையே புகழுதே
வேடிக்கை யிது வல்லவோ

இந்தவுல கீரேழு மேனளித்தாய் சொல்லு
யினியுன்னை விடுவதில்லை
ஈசனே சிவகாமி நேசனே யெனையீன்ற
தில்லைவாழ் நடராஜனே

தெரிந்தோ அலாதுதெரி யாமலோ இவ்வடிமை
செய்திட்ட பிழையி ருந்தால்
சினங்கொண்ட தோர்க்கணக் காகவை யாதுநின்
திருவுளம் இரங்கி மிகவும்

பரிந்துவந் தினியேனும் பாழ்வினையில் ஆழந்(து) இனந்
பாடாது நல்லவரம் அளித்துப்
பாதுகாத் தருள் செய்ய வேண்டும்அண் டாண்டவுயிர்
பரிவுடன் அளித்த முதல்வி!

புரந்தான் போதன்மா தவனாதி யோர்கள் துதி
புரியும் பாதாம் புயமலர்ப்
புங்கவி புராந்தகி புரந்தரி! புராதானி
புராணி! திரி புவனே சுவரி!

மருந்தினும் நயந்தசொற் பைங்கிளி வராகி எழில்
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி! சுப நேமி! புகழ் நாமி! சிவ சாமிமகிழ்
வாமி! அபிராமி! உமையே!



# மருத்துவக் கடவுள் "தன்வந்திரி"

டாக்டர் கி. அம்பலத்தரசு, B.S.M.S., D.M.
மூட்டு மருத்துவ வர்மசிகிச்சை நிபுணர்.

உலகில் உள்ள அனைத்து ஜீவராசிகளின் பிணியைப் போக்கி நன்னிலையில் வாழ கண்டுணுரப்பட்ட மருத்துவ முறையே "சித்த மருத்துவம்" ஆகும். இதனை உலகிற்குணர்த்திய மகான்களே "சித்தர்கள்" ஆவர். இவர்கள் நவசித்தர்கள், நவகோடி சித்தர்கள், நவநாத சித்தர்கள், பதினென் சித்தர்கள் என பல கருத்துண்டு. அந்த 18 சித்தர்களில் ஒருவரே மருத்துவ சித்தர் தன்வந்திரி. இவரைப் பற்றி பல கருத்துண்டு.

### திருமால் அவதாரம்

பாற்கடலில் இருந்து சங்கு, சக்கரம், ஜலூகம், அமிர்த கலசம் ஆகிய நான்கையும் திருமால் தனது நான்கு கரங்களில் ஏந்தி, சர்வலோக ரட்சகனாய், சர்வ ரோகம் போக்கும் "தன்வந்திரி" பகவனாய் உலகில் தோன்றினார் என்பது புராண வரலாறு.

### ஆதி சைவ அந்தணர்

"தன்வந்திரி" ஆதி சைவ அந்தண குலத்தவர் (குருக்கள்) என்றும், இவரது சமாதி நாகை மாவட்டம், வைத்தீஸ்வரன் கோவிலில் உள்ளது என்று கூறுவர்.

"சோதிவைத் தீஸ்வரன் கோவில் தன்வந்திரி"
(ஆதார நூல் : மருத்துவ வாதயோக ஞான சாத்திரம்)

இன்றும் இவரது ஜீவசமாதிக்கு பூசைகள் நடைப்பெற்று வருகின்றது மேலும் இங்கு தன்வந்திரி நாடி சோதிடம் என்ற நூலை பிரதானமாக கொண்டு "நாடி சோதிடம்" கூறப்பட்டு வருகின்றது.

### வடமொழிச் சித்தர்

தன்வந்திரி இயற்றியதாக கூறப்படும் நூல்களில் "தன்வந்திரி கருக்கிடை நிகண்டு" குறிப்பிடத்தக்கது. அந்நூலில் இவர் வட நாட்டவர் என்றும், இவரின் வடமொழி நூல்கள் சிலவற்றை இவரே தமிழில் இயற்றியதாக கூறப்படுகிறது.

*"என்தேயம் உத்திரதேயம் நலம்புரிய*
*என்னுடைய கிரந்தம் சொன்னேன்*
*உள்ளிடா அதைப் பிரித்துத் தமிழால்*
*சொன்னேன்*
*நாரணன் என்போன் தட்சிணாயன்*
*நாமான ஆயிரத் திருநூ றென்றே"*

தன் வந்திரி தமிழில் பல நூல்கள் இயற்றியது போல, வடமொழியிலும் இயற்றியுள்ளார். தமிழ் நூல்கள் பல காலப்போக்கில் அழிந்து ஒழிந்து சிதைந்து போயின. வடமொழி நூல்கள் பலவும் சேமமுற்றன என்ற ஒரு கருத்தும் உண்டு.

### 18 சித்தரில் ஒருவர்

*"சொல்லிடவே தேவிக்கு சதாசிவன் றான்*
*சொல்லவே தேவியும் நந்திக்குச் சொல்ல*
*நல்லிடவே நந்திதந் வந்திரிக்கு சொல்ல*
*நயமுடன் தன்வந்திரி யசுவனிக்கு சொல்ல*
*அல்லிடவே யசுவனியாந் தேவர் தாமும்*
*அகத்தியர்க் குரைத்திடவே யம்மு னீந்த்ரன்*
*புல்லிடவே புலத்தியர்க் குபதே சிக்க*
*புலத்தியரும் தேரையற்கும் புகன்றிட்டாரே"*

(ஆதாரப் பாடல்-யூகிமுனி வைத்திய சிந்தாமணி 800)

முதன்மை சித்தராகிய சிவபெருமான் தேவிபார்வதிக்கு உபதேசித்த யோகம், ஞானம், வாதம், வைத்தியம், மந்திரம், சாத்திரம், தோத்திரம், யாவற்றையும், உலக ஜீவ ராசிகளின் நலனை முன்னிட்டு அன்னையும் நந்திக்கு உரைத்தார். நந்திதேவர் அதனை தன்சீடர் தன்வந்திரிக்கும், தன்வந்திரி அசுவனிதேவர்களுக்கும், அவர்கள் அகத்தியருக்கும் அவர் தம் சீடர்கள் வழியே உலகமக்களுக்கும் உரைத்ததாக நூல்கள் கூறுகின்றன. இந்நூலில் வரும் மகான்கள் 18 சித்தர்களில் அடங்குவர்.

மொழிப்புலமை உள்ளோர் தெய்வப்புலவர் என்றும் கற்பிக்கும் ஆற்றல் உள்ளோரைக் குருபகவான் (பிரகஸ்வதி) என்று சிறப்பிப்பது போல, மருத்துவ கலையில் ஆற்றல் உள்ளவரை "தன்வந்திரி" என்று கூறி சிறப்பிப்பது கண்டு இவர் சித்த மருத்துவ கலையில் ஒப்புயர்வற்ற "மருத்துவ கடவுளாக" இருத்தல் வேண்டும் என்பது தெளிவு.

*"அச்சுதானந்த கோவிந்த*
*விஷ்ணோ நாராயணா மிருத*
*ரோகன்மே நாசயா சேஷா*
*நாசு தன்வந்தரே ஹரே"*

(தன்வந்திரி மந்திரம் ஜபித்தால் நோயற்ற வாழ்வு)

# நோயற்ற நல வாழ்வு குறிப்புகள்

டாக்டர் கி. அம்பலத்தரசு, B.S.M.S., D.M.
மூட்டு மருத்துவ வர்மசிகிச்சை நிபுணர்.

## மூட்டுவலி

முடக்கற்றான் செடி ஒரு பிடியுடன், சீரகம், சோம்பு, மிளகு, சுக்கு, தனியா, வகைக்கு 1/2 ஸ்பூன் சேர்த்து கஷாயம் செய்து தினமும் காலையில் அருந்திவர மூட்டு வலி குறையும்.

முடக்கற்றான் செடியை அரைத்து தோசை மாவுடன் கலந்து தோசை வார்த்து சாப்பிட்டு வர மூட்டு வலி குறையும்.

## பித்தமயக்கம்

பித்த மயக்கம், தலைசுற்றல், கிறுகிறுப்பு நீங்க, சீரகத்தை சிவக்க வறுத்து பொடித்து அதனை 1/2 ஸ்பூன், தண்ணீருடன் கலந்து அதிகாலை வெறும் வயிற்றில் குடித்து வர குணமாகும்.

## மூக்கடைப்பு, மூக்கில் நீர் பாய்தல்

கறிமஞ்சளை அல்லது மிளகை, நெருப்பில் சுட்டு கருக்கி அதன் புகையை மூக்கில் நுகர்ந்தால் குணமாகும்.

## சைனஸ் தலைபாரம்

தும்பை, துளசி, நொச்சி, யூக்கலிப்டஸ் இலை வகைக்கு ஒரு பிடி எடுத்து 2 லிட்டர் தண்ணீர் இட்டு கொதிக்க வைத்து ஆவி பிடித்து வர குணமாகும்.

## குழந்தைகளுக்கான பேதி நிற்க

குழந்தைகளுக்கு பல் முளைக்கும் காலங்களில் பேதி உண்டாகும். தவிரவும் பிற சமயங்களில் உண்டாகும் வயிற்றுப் போக்கை நிறுத்த வசம்பை சுட்டு கருக்கி அதன் சாம்பலை ஒரு சிட்டிகை தேனில் குழைத்து நாக்கில் தடவ குணமாகும்.

## மலகட்டு நீங்க

உலர்ந்த கருப்பு திராட்சை 10-15 எண்ணிக்கை இரவில், கால் டம்ளர் வெந்நீரில் ஊற வைத்து காலையில் அதனை மசித்து கொடுத்து வர மலக்கட்டு நீங்கும்.

## வயிறு, நெஞ்சு எரிச்சல்

சீரகப் பொடி 1/2 ஸ்பூன், சிறிது பசு வெண்ணெய் சர்க்கரை சேர்த்து கலந்து காலை வெறும் வயிற்றில் சாப்பிட்டு வர குணமாகும்.

## மஞ்சள் காமாலை

கீழாநெல்லி செடி ஒரு பிடி, சீரகம், சோம்பு, வகைக்கு 1/2 ஸ்பூன் சேர்த்து கஷாயம் இட்டு காலை வெறும் வயிற்றில் குடித்து வர காமாலை தீரும்.

## இரத்த சோகை

பேரீச்சம்பழம் 4-5 இரவில் சாப்பிட்டு பால் அருந்தி வர இரத்த சோகை, பலகீனம் நீங்கும். முருங்கை கீரை சாப்பிட்டு வரலாம்.

## சிறு நீரக கற்கள் வராமல் தடுக்க

வாழை தண்டு, முள்ளங்கி, சுரைக்காய் இவை உணவில் சேர்த்து வந்தால் சிறுநீரக கற்கள் வருவதை தடுக்கும். கோஸ், காளிஃப்ளவர், தக்காளி குறைத்து கொள்ளவேண்டும்.

## டைபாய்டு சுரம்

டைபாய்டு சுரம் எனப்படும் குடல் வாத சுரநோயில் ஏற்படும் வயிற்று புண் தீர சாத்துகுடி சாறு பிழிந்து தண்ணீர் சேர்த்து கொதிக்க வைத்து சிறிது சர்க்கரை அல்லது குளுக்கோஸ் சேர்த்து குடித்துவர தீரும்.

## தொண்டை கட்டு, குரல்கம்மல்

காய்ச்சிய பசும்பாலில் சிறிது மிளகு, சுக்கு, ஏலக்காய், மஞ்சள் தூள், பொடித்து கலந்து குடித்துவர கபம் நீங்கி தொண்டை கட்டு குணமாகும்.

## டான்சில்ஸ்

பாலில் வேகவைத்த பூண்டு 4 அல்லது 5 திரி இரவில் படுக்கும் முன் சாப்பிட்டு அந்த பாலை குடித்து வர டான்சில்ஸ் குறைந்து குணமாகும்.

## நல வாழ்வு முறைகள்

1. 6 மாதத்திற்கு ஒரு முறை வாந்திக்கும்,

   4 மாதத்திற்கு ஒரு முறை பேதிக்கும்,

   45 நாட்களுக்கு ஒரு முறை நசியம் (மூக்கு மருந்து)

   3-4 நாட்களுக்கு ஒரு முறை எண்ணெய் குளியல்,

   3 நாட்களுக்கு ஒரு முறை கண்ணுக்கு மை இடுதல்,

   என்ற முறையை கடைபிடிக்க நோய் அணுகாது.

2. கன்றுடன் கூடிய தாய் பசு, தெய்வம், தாய், தந்தை, குரு, பெரியோர் (வயதாலும் அறிவாலும் மூத்தோர்) இவர்களை நாள்தோறும் வணங்க வேண்டும்.

3. மாத விலக்கு உண்டான மாதர்களிடம் உண்டாகும் மணம், ஆடு, குழுதை, துடப்பம் இவைகளில் எழும் தூசு இவைகள் மேற்படும் படி இருத்தல் கூடாது.

4. உண்ட உணவு சீரணமாகாத சமயங்களிலும், பகலிலும் உடலுறவு கூடாது.

5. பகல் தூக்கம், காலை நேர வெய்யல் தவிர்தல் நல்லது.

6. பசியின்றி புசித்தல், உணவு உண்ணும் காலத்தில் தாகம் எடுத்தாலும், இடையே நீர் அருந்துதல் கூடாது.

7. கிழங்கு வகைகளில் கருணை கிழங்கு தவிர ஏனையவற்றை நீக்க வேண்டும்.

8. வாசனைப் பொருள்களையும், மலர்களையும் நடு இரவில் நுகர கூடாது.

9. காலையில் உடற் பயிற்சியும், மாலையில் நடை பயிற்சியும் நலம் தரும்.

10. இரவு உணவு உண்டபின் சிறிது தூரம் குறுநடை பயில வேண்டும்.

---

## முருகன்

நீலகடல் ஓரத்திலே ஆலயம்
அமைந்த தடீ
கோலக்கிளிகள் குயில்கள் குமார
வென கூவுதடீ (நீலகடல்)

வேலன் ஏறும் நீலமயில் நாலுவேதம் ஓதும்டி
பாலன் தன் தந்தை ஹரனுக்குபதேசம்
செய்தவனடி
(நீலகடல்)

இளநகை தவழும் முழுமதி வதனம்
ஈராறு கரங்களும் இருவினை இருள் போக்கும்
குவலயம் போற்றிடும் குருபரன் சரணமடீ
குறுநகை தவழ்வள்ளி குறத்தி மணவாளனாம்
ஒருதரம் சரவண பவவென உரைப்
போர்க்கு கால மெல்லாம் கருணை புரியும் கடலே
(நீலகடல்)

## இராஜ விநாயகர்

கூரையிலிருந்து கோபுரத்திற்கு
உயர்ந்து விட்டாய் ராஜவிநாயகா?
கோடிபொன் கொடுத்தாலும் கிடைக்காது
உன் கருணை உள்ளம் ராஜவிநாயகா (கூரை)

கடல்போல் பொங்கி வரும் கஷ்டங்களை
களைந்து எறிந்து விட்டாய்
காலமெல்லாம் உன் கடைக்கண்
பார்வைக்காக ஏங்குகிறேன் கற்பக
விநாயகா! (கூரை)

நங்கைகளின் மனதில் புகுந்து
நர்தனமாடி நன்மைபல புரியும்
நர்தன விநாயகா
நம்பி வந்தேன் உன்னை நாள்தோறும்
நலம்பல நல்கிடுவாய் நர்தன விநாயகா
கூரையிலிருந்து கோபுரத்திற்கு
உயர்ந்து விட்டாய் ராஜ விநாயகா

தொகுப்பு
ஜெயா நடராஜன்

# ஸ்ரீ ஆஞ்சநேயர்

கவசம், சரணம், நாமாவளி



## ஆஞ்சநேயர்

ஆஞ்சநேயரை வணங்கினால் புகழ் தைரியம், நாவன்மை செல்வம் எல்லாம் கிடைக்கும். "நவவ்யா கரண வேதா" என்று ஆஞ்சநேயரை இராமன் புகழ்கிறார்.

ஆஞ்சநேயர் வழிபாடு இந்தியா எங்கும் விளங்குகிறது. பம்பாயில் மாருதி என்றும், உத்திரப் பிரதேசத்தில் மகாவீர ஹனுமான் என்றும், ஆந்திர நாட்டில் ஆஞ்சநேயலு என்றும் அழைக்கிறார்கள். ஆஞ்சநேயர் உண்மையான பக்தனுக்கு உருவாக விளங்குகிறார்.

இந்த நாளைய அவசர வாழ்க்கைக்கு மன அமைதி முக்கியம். ஆஞ்சநேயரை வழிபட்டால் மன அமைதி கிடைக்கும்.

ஆரோக்கியமான வாழ்வு அமையும். கலைமகளின் கருணையும், லட்சுமியின் அருளும் தொடர்ந்து கிட்டும்.

அஞ்சிலே ஒன்று பெற்றான்
அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்றாறாக
ஆரியற்காக எகி
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்குகண் டயலார்கூரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான்
அவனெம்மை அளித்துக் காப்பான்

### ஸ்ரீ மாருதி க்ருபை உண்டாக

ஸர்வ கல்யாண தாதாரம்!
ஸர்வ வாபத்கந வாரகம்!!
அபார கருணாமூர்த்திம்
ஆஞ்சநேயம் நமாம் யஹம்

### துஷ்ட க்ரஹங்கள் விலக

அஞ்ஜநா கர்ப்ப ஸம்பூதம்
குமாரம் ப்ரும்ஹசாரிணம்
துஷ்ட கிரஹ வினாசாய
ஹனுமந்த முபாஸ்மேஹே

### கார்யங்களில் வெற்றி பெற

ஸ்ரீ ராம தூத மஹாதீர
ருத்ர வீர்ய ஸமத்பவ!
அஞ்ஜநா கர்ப்ப ஸம்பூத
வாயுபுத்ர நமோஸ்துதே!!

### கார்ய ஸித்தி பெற

அஸாத்ய ஸாதக ஸ்வாமிந்!
அஸாத்யம் தவ கிம் வத!!
ராம தூத க்ருபாஸிந்தோ!
மத்கார்யம் ஸாதய ப்ரபோ!!

### ஸ்ரீ அனுமத் தியானம்

அஞ்ஜநா நந்தனம் வீரம்
ஜானகி ஸோக நாஸனம்
கபீச மஷ ஹந்தாரம்
மந்தே லங்கா பயங்கரம்
மனோஜவம் மாருதுல்யவேகம்
ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம்
வாதாத்மஜம் வாநரயூத முக்யம்
ஸ்ரீ ராமதூதம் சிரஸா நமாமி
ஓம்புத்திர்பலம் யசோதைர்யம்
நிர்பயத்தவம் அரோகதா
அஜாட்யம் வாக்படுத் வம்ச
ஹனுமத் ஸ்மரணாத் பவேத்

## அருள்மிகு ஆஞ்சநேயர் கவசம்

### காப்பு

திக்கெலாங் காக்குந் துதிக்கை விநாயக
மிக்க வலிமை உயிரினம் பெற்றிடப்
பக்தஆஞ்ச நேய கவசம் இசைத்திடப்
தக்க அருளும் கொடு

இந்திரன் விடுத்த வச்சிரா யுதமும்
ஈர்ங்கண் வசனந் தாக்கக் கண்டோம்
விந்தையுன் முகத்தில் வீக்கம் பெற்றாய்
வீர! உந்தன் தாடை காக்க

துறவியாய் தோற்றங் கொண்டு வந்தாய்
துணையாய் இராம பாத மேற்றாய்
அறவோன் அண்ணல் தூதினை ஏற்றாய்
அரிய தூதின் திறமே காக்க

இலங்கைக் காவல் தெய்வ மெதிர்க்க
அதனை யடக்கிப் பணியச் செய்தாய்
நலமும் பெருகச் சத்தியம் நிலைக்க
நாடுவம் உந்தன் நாமங் காக்க,

பூமியை யுதைத்து வானில் பறந்தாய்
புயலும் வீசப் பாறையு மதிர
நேமியான் போல நெடிது வளர்ந்தாய்
நீள உயர்ந்த நின்னிரு காக்க.

பெருவிர லளவில் உருவ மேற்றாய்
பேதை யரக்கி வாயுனுள் புகுந்தாய்
வருமது தடையைப் போக்குந் திறத்தாய்
வருபழி நீக்கநின் தரிசனங் காக்க.

மைனாக மலையின் மிகுபலன் கண்டாய்
மயங்கச் செய்ததன் மகிமை யறிந்தாய்
கைநாக பலத்தின் காட்சி கண்டோம்
கடிய உந்தன் கரமே காக்க.

அசோக வனத்தில் புகுந்த தீர!
அன்பு சீதையி னல்லல் தீர்த்தாய்
உசாவிய சொல்லின் நுட்பங் கேட்டாய்
நேய! நிந்தன் இரு செவி காக்க.

வாயுவின் அருந்திர வரமும் பெற்றாய்
வானின் மேலெழு வல்லமை பெற்றாய்
தீயுன் வாலில் பற்றிடக் கண்டோம்
தீயோர் வீழ நின் வால் காக்க.

மருந்து மலையே எளிதே கொணர்ந்தாய்
மயங்கிய உயிரினம் வாழச் செய்தாய்
வருந்து வோர்தம் வறுமை நீக்கும்
வடிவே உந்தன் தரிசனங் காக்க.

அருந்தவ இராம இளவலு மமர
அரிய நல்ல புயமுந் தந்தாய்
பெருவலி ஏற்றுப் போர்ச்செயல் புரிந்தாய்
பரந்த உந்தன் புயவலி காக்க.

வாலால் அமர ஆசன மமைத்தாய்
வஞ்சக அரக்கன் கொட்டந் தீர்த்தாய்
வேலால் ஏற்ற இன்னல் தவிர்த்தாய்
வலிமை பெறநின் மேனி காக்க.

நந்திகே சுவரரைப் பழித்த இராவணன்
நாசங் கண்டான் நின்பெரு படையால்
இந்திரன் முதலா எண்டிசை போற்ற
அரிய உந்தன் சேவை காக்க.

காசி விஸ்வ நாதரைக் கொணர்ந்தாய்
கருணை இலிங்க மகத்துவ மறிந்தாய்
பாசி யுள்ளம் நீக்கி மகிழ்ந்தாய்
பழிதீர் உந்தன் உளமே காக்க.

வித்தகு பட்டாபி சேகங் கண்டோம்
வேந்தவை தனிலுன் ஆற்றல் கண்டோம்
முத்து மாலையைப் பரிசா யேற்றாய்
மலர்ந்த உந்தன் எண்ணங் காக்க.

வம்பு செய்ய வந்த பீமன்
வாலின் வலிமை யறிந்து வியந்தான்
தம்பி காண நெடிதே வளர்ந்தாய்
தூயோய் நிந்தன் திருவுரு காக்க.

வேதியர் வடிவில் வந்த மாயன்
வேண்டிய பணியை முடித்துத் தந்தாய்
மேதிகழ் கொடியாய் தேரில் பறந்தாய்
மேன்மை பெருகநின் பாதங் காக்க.

இராம கவச மந்திரஞ் செய்தாய்
எதிர்த்த வீரனை ஒடுங்கச் செய்தாய்
இராம மந்திரம் உச்சரிப் போர்க்கு
நாளும் வந்து காப்பாய் நேயா

வாது செய்ய வந்த அர்ச்சுனன்
வல்வில் பாலம் அமைத்துத் தோற்றான்
சேது அணையைக் கட்டிய நேய
சுகமுந் தந்து காப்பதுன் பணியே!

நன்னெறி நெற்றிக் குங்குமங் காக்க
நன்பொன் மணியணி மார்புங் காக்க
மின்னும் இரத்தினந் தோடணி காக்க
மேதகு கிரீட முடியுங் காக்க.

காக்க காக்க கதையுங் காக்க
கருங்கடல் வண்ணத் தொண்டன் காக்க
நோக்க நோக்க நெஞ்சம் நோக்க
நெடுமால் தொண்டன் இணையடி காக்க.

பரந்த விழிகள் பரமனைத் துதிக்க
பக்த நெஞ்சே நேயனே காக்க
விரிந்த கண்கள் வேள்வி காக்க
விநோத! நிந்தன் நாசி காக்க

திருவடி யதனில் கழலு முழங்கத்
தேவ யானம் பெற்றோய் காக்க
பெருமாள் தலத்தில் மண்டப மேற்று
பேறம் புரியுஞ் சீலா காக்க

தஞ்சம் தஞ்சம் ஆஞ்ச நேயா
தங்கக் கைவளை தோளுங் காக்க
அஞ்சேல் அஞ்சல் நெஞ்சம் அங்சேல்
ஆற்றல் பெருக அனும வருக.

அரி அரி என்றால் அல்லல் தீரும்
அரிகரன் பதியில் நின்றோய் காக்க
பரிமள துளசி நேயன் வருக
பரம பக்த நேயா வருக

காஞ்சன மாலை நாகனைக் காக்க
கருடனை வாலால் எறிந்தாய் போற்றி
தீஞ்சுவை மொழியாள் அஞ்சனை பெற்ற
தவத்தின் புதல்வ! தஞ்சம் தஞ்சம்!

பயமும் பதைப்பும் தீர்க்கும் மதியே
பக்கென உந்தன் பாதம் பற்றினன்
ஐயம் போக்கும் அறிவுச் சுடரே
அருள்வாய் அருள்வாய் ஆனந்தமருள்வாய்

ஆஞ்ச நேயா ஆஞ்ச நேயா
இன்னல் தீர்க்கும் நுன்மதி போற்றி
சாந்தம் குங்குமம் அளிப்பாய் போற்றி
சாற்றிய நின்பரி வட்டங் காக்க

என்னை யாளு மிறைவா போற்றி
ஏந்திய மலையின் நாதா போற்றி
கன்னம் இரண்டும் கதிரொளி போலக்
காட்சி நல்கும் கனிவாய் போற்றி

இராம ஜெயமே இராம ஜெயமே
இசைத்த நேயன் வாயொலி போற்றி
இராம சேது அமைத்தாய் போற்றி
இராவண வதத்தின் மூலமே போற்றி

திறமிகு திவ்ய தேகா போற்றி
தயாபர யோக நிலையே போற்றி
துறக்கஞ் சேர்க்குநின் கிரீடம் போற்றி
துன்ப நீக்குநின் புருவம் போற்றி

வாழ்க வாழ்க கவசம் வாழ்க
வாயு புத்திரன் கவசங் காக்க
வீழ்க வீழ்க பாசம் வீழ்க
வீம்பு செய்தோர் வீழ்க வீழ்க

மங்களம் மங்களம் வேண்டுவம் மங்களம்
மேதினி செழிக்க மாருதி மங்களம்
திங்கள் மகுட ஒளியே சரணம்
தீராத வினையும் தீர்ப்போய் சரணம்

கொடியவர் மனமும் கனிவும் பெற்றிட
கவசம் கவசம் பரிவட்ட கவசம்
அடியவர் வாழ்வில் நீயே சரணம்
அறமே அறமே அருள்வாய் அறமே

தொற்றும் நோய்கள் பற்றி விடாமல்
துயரில் நெஞ்சம் தோய்ந்து விடாமல்
பற்றும் பாசமும் மாந்தர் ஏற்றிட
பதிதனில் ஒலிக்குநின் நாமம் சரணம்

கலகல கலவென செல்வம் சேர
கவசம் கவசம் கோபுரக் கலசம்
தளதள தளவென முடியில் மின்னும்
தங்கக் கவசம் சரணம் சரணம்!

சரணம் சரணம் அனுமர் சரணம்
ஆஞ்ச நேய கவசம் சரணம்
அரவப் படையான் துணையே சரணம்
அரணம் சரண கவசம் சரணம்

மங்களம்

# திருப்பதி வெங்கடாசலபதி வேண்டுதல் மந்திரம்

அருள்கவி டாக்டர் சாமிகிரி சித்தர் அருளியது



சங்கோடு சக்கர சரமான மணிகள்
தங்கங்கள் உடலின் தவழ்ந்தாடும்
சிங்கார மங்கை சிறப்பூட்டும் லெட்சுமி
சிறப்போடு நெஞ்சில் தினம்வாழும்
மங்காத திருப்பதி புகழ்பாட பக்தர்
மறவாத மனங்கள் இதை நாடும்
நீங்காத நினைவாய் நிலையான பொருளாய்
நின்றிட்ட 'திருப்பதி மலையாமே!

1. சங்கு சக்கராயுதா, செங்கதிர் கேசவா
வெங்கட்ட ரமணதேவா
மங்காத புகழ்தரும் மாதவா - எங்களை
மறவாமல் காத்திடவா
சிங்காரக் கண்ணனே, கார்மேக வண்ணனே
ஓங்காரத் துள்ளுளொளியாய் வா
உறவாகி வருவாயே சாமிகிரி சித்தர் நாவில்
உண்மையருள் கவியாக வா.

2. நல்வினை தீவினை நாடிவரும் வல்வினைக்கு-ஸ்ரீ
நாராயண மந்திரம்தான்
ஊழ்என்ற விதிப்பயன் வினைப்பயன் முடியுமுன்
உன் பெயர் சொல்லவந்தேன்
உள்ளத்துயரெல்லாம் ஏழுமலை தெய்வமே
உணர்ந்துமே போக்கிடவா
வெல்லத்துள் இனிப்பாக வெங்கடாஜலபதி
வேண்டும்வரம் தந்திடவா.

3. விந்தைமிகு இந்த வேடிக்கை உலகிலே - உன்
விளையாட்டை யாரறிவார்
ஹரிஹரன், ஜெயராமன், ஸ்ரீரங்கன் - என்பதும்
கிரிவாசன் ஸ்ரீனிவாசனே.
ஏதுமறியாத மனிதராய் உருவெடுத்து - அழகு
பத்மாவதியை மணம் புரிந்தாய்
கலியுக வைகுந்தமாக்கியே கற்சிலையான
கருவூலம் திருப்பதிதான் அங்கே.

4. போனவர் வந்தவர் போகஇருப்பவர் - ஆன
பொருளினை காணிக்கையளிப்பவர்
மனதார திருமாலை தியானித்து வருபவர்
மங்கள வாழ்வு பெறுவர்
தீங்கு, பிணிபோக்கியே, திக்கெலாம் போற்றிட
திறமையைத் தந்திடுவாய்
வெங்கடேசாய நம, ஸ்ரீனிவாசாய நம - இப்படி
வெகுகோடி உரு ஜெபிப்பேன்.

5. போற்றினேன் புலனடக்கி தெரிந்த உண்மை
பிரம்மஞான நிலையதனால் பக்திகொண்டேன்
ஏற்றிவைக்கும் அன்பிதய எண்ணைபோலே
இக்கருத்தை உலகார்க்கு எடுத்துச் சொல்ல-செயல்
ஆலாற்றினார் மா என்ற லட்சுமியின்
தவன் என்ற தலைவன் மாதவனே
ஆன்மாவின் சட்டையதே உடலேஆகும்
அதை மாற்றாமல் இருக்கமாட்டோம்
எப்போதும்தான் -அந்த
அழிவற்ற பூரணனை அறிவான் யோகி.

6. கோவிந்தா கோவிந்தா கோவிந்தா என்றுன்னை
கூப்பிடுவோர் கோடியுண்டு
நாவிந்த சொற்களை உச்சரித்தார் அவர்
நால்பிணியை வெல்வதுண்டு
நாராய நாயநம, நந்தகோபாலநம
நவமோக நாய நமக-என்றால்
நற்கீர்த்தி அதிலும் உண்டே
நாதாந்த வேதாந்த ரகசியப் பொருளெல்லாம்
நடைமுறையில் வருவதுண்டே.

7. வருகின்ற ஆபத்தை சங்கொலிக்கும் அதை
திருச்சக்கரத்தால் அழித்துவிடுவாய்
ஊருக்குணர்த்திடும் திருநாமம் தன்னிலே
உண்மை இதுதானே என்பாய்
மறக்கவோ முடியாது, மறுக்கவோ இயலாது
மனுநீதி தேவனானீர் - அந்த
மாதவன் நாராயணன் குருவாயூர் கண்ணனை
மனதார வணங்குவேனே.

8. யோகி என்றால் இன்பதுன்பம் அற்றிருப்பான்
போகின்றால் அதைஎண்ணி கிலேசம் கொள்வான்
ஆகின்ற நெருநிலைக்கு அழைப்பதாலே
அச்சுதன் என்றபெயர் வந்ததென்பார்
அவன் அருளை நாடினால் அழியாத்தன்மை
அவனிதனில் நிலைநிறுத்தி இருப்பார் பாரே
அப்படியே பல நீதிசொன்ன கிருஷ்ணா
ஆன்மீக வழிபாட்டால்செயலை செய்யேன்.

9. செயலையெல்லாம் செய்கின்ற வாசுதேவா
ஜீவ அணுவாகிப் பறந்து நின்றாய்
அவதாரம் பலவெடுத்தும் முடிவில்லாத
அனந்த சற்குருவாகி ஆட்கொள்வீரே
அலமேலு மங்கையினை மணம்புரிந்த
அருள்மிகுந்த திருமலை சாமியாகி
பொருள்குவித்து வழங்குகின்ற வள்ளல்போலே
போனவர்க்கும், நினைத்தவர்க்கும் மகிழ்வுதந்தாய்

10. மலைகளிலும் திரு என்ற மலையைப் பெற்றாய்
நிலையாக திருமகளை ஆட்கொண்டிட்டாய்
மரகதத்தில் வைரங்கள் குழைத்தாற்போலே
திருமாலே திருநாமம் இட்டுக்கொண்டாய்
மனமாலயதனை ஓட்டும் மகாமாயன்
தினகரனே திருவனந்த புரத்தோனனாய்
திக்கெல்லாம் கொண்டாடும் தெய்வமானாய்
எக்காலும் காப்பாயே கருணையாக.

11. கருணையின் திருவுருவாய் உளமாய்க் கண்டு
கருதிதினம் உனதருளால் வாழும் நாங்கள்
பெறுகின்ற சுகமெல்லாம் நீயேஆகி
பெருமாளே பிழைகளைநீ மன்னிப்பாயே
அருள்மறை உனக்கேதான் அடக்கம்கண்ணா
அண்டங்கள் அத்தனையும் ஆட்கொண்டவா
திருப்பதி வெங்கடாஜலபதியுமாகி
அருள்புரியும் அன்புத்திரு தெய்வமானாய்.

12. தெய்வமென்றால் பேசுகின்ற தெய்வமானாய்
தெளிவுள்ள மனிதர்களே பக்தர் ஆனார்
தேடரியா செல்வங்கள் குவிந்தவண்ணம்
தோத்தறித்து வெற்றிகண்டோர் கோடானுகோடி
நாடெல்லாம் சுற்றிவரும் நல்லோரெல்லாம்
நனவினிலும் கனவினிலும் மறக்கமாட்டார்
ஏடெல்லாம் படித்தாலும் இறைவா-உன்னை
என்று மீண்டும் காண்போம் என ஏங்குவாரே.

13. ஏங்குவோர் எண்ணங்களை ஈடேற்றுவாய்
எப்பொழுதும் துணையிருந்து காப்பாற்றுவாய்
தப்பான குறைபாடு வாராதவாறு
தடுப்பதுவும் உனதுதயவாலே ஆகும் - நான்
எப்பிறவி எடுத்தாலும் எனக்குத்துணை
ஏதுமில்லை உனதருளே இருந்தால் போதும்
அதுஎனக்கு அனந்தகோடி ஆனந்தத்தை,
பேரின்பத்தை புண்ணியத்தைத் தருவதுண்மை.

14. உண்மைஎன்றால் தோன்றியவன் மறைவதுண்மை
உலகிலிதை வென்றவனை யான்அறிந்ததில்லை
நன்மையற்ற செயலைசெய்து நலியாவண்ணம்
நாளெல்லாம் திருமாலின் புகழைப்பாட
வன்மைமிகு காலனங்கே வரக்கலங்குவானே
வைகுந்த வாசனையே நினைத்தால்போதும்
வாழ்வளித்து தாழ்வுபோக்கி தனமும்தந்து
வையத்தில் நீடுபுகழ் நிலையாய் நிற்கும்.

15. நிற்குமே நிம்மதிக்கு உதிர்த்த கண்ணீர்
நிறைந்த மதிபூரணனே அனந்தனாக
சற்குருவாய் சார்ந்தவராய் வந்தபோர்கள்
சஞ்சலத்தைப் போக்கிவிட்டு போவதாலே-அந்த
அற்புதத்தை நெஞ்சினிலே நிறைத்து உந்தன்
அருளோடு துதிக்கின்ற வரமருள்வாய்
பொற்குவியல் பெருகுகின்ற திருமலையானே
புரியாத வாழ்க்கைதனை புனிதமாக்கு.

16. புனிதவதி மீனாட்சி உன்மகளை
போற்றாத புலவர்களே உலகில் இல்லை
புவியெதற்கும் சர்வேசன் சோமசுந்தரர்க்கு-உன்
புதல்விதனை மணம் செய்வித்த உந்தன்புகழ்
அகத்தினிலே நினைத்தருள் பெற்றவர்க்கு
நிகரற்ற பதினாறு பேறும் தந்து
நின்கருணை செயல்எங்கும் பரவிநிற்கும்
அன்புநிறை என்நினைவை அர்ப்பணித்தேன்.

17. நீரிட்ட துளசியை நின்நாமம் சொல்லியே
நித்தமும் சுவைத்த தீர்த்தம்
நீங்காத பிணிகளை நில்லாமல் ஓட்டும் அந்த
நிம்மதியை என்ன சொல்வேன்
வேங்கட மாமலையின் பேரின்ப வினோதமதை
விவரிக்க வார்த்தை ஏது
வேண்டிய வரங்களைத்தந்த வெங்கடேசா என்று
கொண்டாடும் பக்தர் கோடி.

18. கோடிகுறையோடு நாடியுனை வந்தாலும்
கேடின்றி கிருபை செய்வாய்
வாடிய முகத்தோடு வந்துனைப் பாடினால்
வள்ளலாய் வாழவைப்பாய்
வருங்காலம் யாவுமே சுபமங்களமாகவே
வாழ்த்துடனே வழியமைப்பாய்
வரலாற்றில் புகழான வையத்தோர்ம கிழ்வான
ஸ்ரீராமகோவிந்தா வா.

19. வாவென்றழைப்பது என்அன்பு ஒன்றே
வடிவெடுத்து வந்திட்ட வார்த்தை கண்ணா
தானென்று உரிமையான உறவுவந்து
தன்னருளால் இக்குரலாய்க் கேட்குதப்பா
நானென்று நீயென்று சொன்னதெல்லாம்
நடிக்காத கண்ணீர்கள் வடித்த சொற்கள்
வான்புவியை காக்கின்ற வைகுந்தனாய்
வாழ்வளிக்கும் வேணுகோபாலனே வா.

20. வாழ்நாளில் உனைவணங்கும் புண்ணியத்தால்
வருந்தீமை அத்தனையும் அழித்திடுவாய்
ஊழ்வினையால் உடல்பிணியால் உறவால்வந்த
உயிற்கேடு கண்டமதை ஓட்டும் தேவா
நால்வேத சாத்திரங்கள் எல்லாம் உன்னுள்
நான்முகனும் லட்சுமியும் நாங்கள் கண்டோம்
பாற்கடலில் பள்ளிகொண்ட பரமாத்மாவே
பத்திகொண்டு பணிகின்றோம் பார்த்தருளே.

21. பார்த்திட்டாய், சேர்த்திட்டாய் பிரித்திடாதே
பண்பெல்லாம் பயனெல்லாம் பரவிநிற்பாய்
யார்எனக்குத் துணையுண்டு உன்னையல்லால்
பேர்பெற்ற தெய்வநிலை தந்தருள்வாய்
ஊரில் உள்ளோர் உணராத நிலையினாலே
உண்மையற்ற பேதங்களைப் போக்குவாயே
இன்னலுற்ற திரௌபதியின் மானம் காத்தாய்
இருவினையிலும் இன்பமதைத் தந்த கிருஷ்ணா

22. இன்பமென்றால் பேரின்பப் பொருளே ஆனாய்
யசோதையின் மடியில் தவழ்ந்த குழந்தையாநீ
சொல்லுகின்ற சுகத்தைஎல்லாம் சேர்த்து வைப்பாய்
வெல்லுகின்ற சக்தியதாய் சேர்ந்துவந்தாய்
கள்ளத்தை களங்கத்தை கனிவாய் தீர்ப்பாய்
செல்வத்தை சீர்சிறப்பை செழிக்கவைப்பாய்
வல்லமைமிக்க ஆன்மா வடிவில் வந்தாய்
வருந்தீமை அத்தனையும் அகற்றுவாயே.

23. இருளகற்றி ஒளி தரும் உலக சக்ரவர்த்தி
இம்மை மறுமையிலும் நன்மையே செய்பவரே
அருள்ஞான மொழி உணர்த்த வாமனாராய்
வந்தவரே
பெரும் கோவர்த்தன கிரியை குடையாகப்
பிடித்தவரே
கருணை உளத்தாலே கஜேந்திரனைக் காத்தவரே
வறுமை மிகு குசேலர்க்கு வளம் யாவும் தந்தவரே
வாசுதேவா மதுசூதனா கிருஷ்ணா இனிப் பாரே
வருகின்ற பொய் மாயை மயக்கத்தைப்
போக்குராமா!

24. ராம ராம என்றிருக்கும் ஸ்ரீ ஹனுமாருக்கு
ராகவனே அருளுடனே ஆட்கொண்டீரே
வேகமதாய் ஜானகியை கவர்ந்துசென்ற-இலங்கை
வேந்தனாம் பத்துதலை இராவணனை,
வீழ்த்திய வீரமெல்லாம் உலகம் போற்றும்
விதவிதமாய் தர்மம் காத்த சீத்தாராமா
வில்லேந்தும் ஜெயராமா கோதண்டராமா
கல்யாணராமா எங்களுக்கு கருணைகாட்டேன்!

25. பங்கையன் ராமச்சந்திரன் பக்தருக்கே
வள்ளலாவான்
சிங்க முகத்துதித்து ஸ்ரீநரசிம்ம தேவன்,
சாரங்கன் சடகோபன் சாந்தமிகு கோவர்த்தனன்,
சந்தான கிருஷ்ணன் என்று சாற்றும் பெயர்
கோடியுண்டு
எந்த பெயர் சொன்னாலும் இடர்போக்க
வந்திடுவான்,
சிந்தையை மகிழவைக்கும் செல்லக்குழந்தை
யாவான்,
ஸ்ரீராம ராமா என்றால் அவன்சீர்பாதம் காணாதோ
சேவித்த அடியார்க்குப் பாவவினை தீராதோ!

26. தீராக் கடுவினையை தீர்ப்பதற்கே உதித்தவனே
வாராத செல்வமெல்லாம் வாரித்தருபவனே
போராத காலமென்று புலம்பி இருப்போர்க்கு
பேரின்ப வழிகாட்டி பெருவாழ்வளிப்பவனே
தேரோட்டியானவுனை பாராட்டி வணங்கிவந்தால்
தொல்லைகள் வந்திடாது தோல்வியில்
முடிந்திடாது
எல்லை இல்லா இன்பம் என்றும் நிலைத்திருக்கும்
நல்லோர் தரும் சுகமாய் மங்களமாய் வருவீரே!

27. வேங்கட மாமலையா, சோலைமலை பூமலையா,
விழிகவர்ந்த சௌந்தரனே அழகர்மலையா
விண்ணோங்கி விளையாடும் மேகமெல்லாம்
கவிபாடும்,
தென்றல் உனைத் தாலாட்டும் தேனீக்கள்
மதுவூட்டும்
கண்ணாடி நீர்ஊற்றும் முன்னாடி வழிந்தோடும்
அங்கே
மன்னாதி மன்னனைப்போல் மாயவனே நீ
இருந்தாய்
எந்நாளும் மறவாத அன்புமனக் கோயிலுக்குள்
உன்னைத் தலைவனாக்கி உயிர்பெற்று
வாழுகின்றேன்!

28. வாழுகின்றேன் என்பதெல்லாம் வாசுதேவா
உன்நினைவில்
மாளுகின்ற மனிதஜன்ம உன்மகத்துவத்தை
அறிவாரோ
எழுபிறப்பின் ரகசியத்தை என்னிடத்தில்
சொன்னவனே
ஏகாந்த நிர்மலனை நிற்குணனை, நிஷ்கலனை,
நிராமயனை
நிகரற்ற அகண்டபரிபூரணனை ஸ்ரீநாராயணனைப்
பகலற்ற இரவற்ற இடத்தில் பார்த்திருந்தால்
ஜெகமீது மகராஜன் போல வாழ்ந்து
ஜென்மமெல்லாம் புனிதசொர்க்கம் அடையலாமே!

29. அடையலாம் அருள்மறை முதல்வன் பாதம்-மாய
ஆசைகளை விட்டொழித்து ஆங்காரமின்றி
தடைபலவும் வந்தாலும் புண்ணியத்தை
தழுவிக்கொள்
தாமோதரன் தருவான் முக்தி
படையெதிர்த்து வந்தாலும் பதராதன்மை
பாழ்மனத்தை கொன்றுவிடு பரந்தாமன் சொன்ன
பகவத் கீதையினை பக்தியுடன் புத்தியுடன்
பாருபாரு
பாரினிலே தனிஞான தவத்தினாலே ஜீவன்
மூத்தனாகியே இருப்பார் பாரே!

30. உண்டவாய் மண்ணிலே அண்டமெல்லாம்
காட்டியவா
சண்டமாருதமாகி கம்சனை வதைத்தவா
தொண்டனுக்கு தொண்டனாய் தூதுபணி
செய்தவா
பாண்டவர்க்குத் துணைநின்று பாரத
யுத்தம்முடித்தவா
கொண்டாடும் கோபிய ரோடு கொஞ்சி
விளையாடியவா
மண்டலமெல்லாம் சுழலும் காந்த
சக்தியானவா-உன்னை
கண்டறிந்த உண்மை காரணத்தை சொல்லவா?

31. பாடினேன் புலம்பினேன் பார்த்திட்டான் நீல
பாலகன்போல் குழல்ஊதி நின்றான்-கண்ணன்
கேட்டவர்கள் என்னைஇவன் கிறுக்கன்
என்பார்-அந்த
கேலிக்கு ஆளாக்கி விட்டுச்சென்ற நெஞ்சைத்
தொட்டவனை விட்டவனை மீண்டும் கண்டு
வெட்டவெளியான மனநிலையில் நின்று
நிட்டைஅல்ல இந்தஇருவிழியால் இன்பம்
பெற்ற-அந்த
நிம்மதியாய் நீடூழிவருவாய் கண்ணா!

32. வருவாயே என்றுஎண்ணி வாசுதேவா,
வாய்விட்டு மனம்விட்டு சொன்னதெல்லாம்,
தருவாயே என்று நாங்கள் காத்திருந்தோம்,
தாழ்பணிந்து தண்டனிட்டுத் தவிக்கும் எங்கள்
வாழ்வினிலே வருங்காலம் நீயேஆகி
வல்வினையை போக்கிவிடு சங்குசங்கரத்தால்
உள்ளமெல்லாம் மங்களமாய் மகிழ்ந்திருக்க அந்த
உயிரான வெங்கடேசர்க்கு உரைத்திட்டேனே!

33. உரைத்திட்ட அருட்கவி முப்பத்திமூன்றை
உளமார தினந்தோறும் துதிப்போர்க்கெல்லாம்
குறைவற்ற செல்வங்கள் வந்தடையும்,
குணங்கெட்டோர் செய்வினையும், பிணியும்தீரும்
உணர்வெல்லாம் பேரின்ப அமுது ஊறும்,
உலகினிலே கீர்த்திமானாய் பல்லாண்டு வாழ்ந்து
அலைகடல் மகளினை நெஞ்சில் கொண்ட-அந்த
அனந்த வைகுந்தன் அருள் அடையலாமே!

சுபம் ! சுபம் ! சுபமங்களம்!



# வளம் காண வைக்கும் உமையே
# வைத்தீஸ்வரன் - தையல் நாயகி

எள்ளுப்பூ மூக்கு எழிற்குவளைப் பூக்கண்கள்
இயல்பான அழகு வடிவம்
இனியமுகம் தாமரை இருசெவிகள் செந்தாழை
இறைவி நிறம் நல்ல பவளம்
கள்ளிருக்கும் ரோஜாப்பூக் கன்னங்கள் அல்லியில்
கடைந்ததோர் இரண்டு கால்கள்
கைகளும் விரல்களும் கனகாம்பரம் மல்லி
கற்பகப் பூவில் தோள்கள்
புள்ளிருக்கும் வேளூர் பூவைபுன் அங்கமெல்லாம்
பூக்களாய் மலர்ந்திருக்க
பூவுடல் கொண்டவளை வர்ணித்துப் பாமாலை
பூமாலையோடு தந்தேன்
வல்லவள் அருளாலே வரும்துயரைப் போக்கியொரு
வரம்தந்து காக்க வருவாய்
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும் உமையே
பால் கேட்டு அழுததோர் பிள்ளைக்குச் சீர்காழிப்
படித்துறையில் பால் கொடுத்தாய்
பச்சை வெற்றிலை துப்பிக் கலிகாள மேகத்தைப்
பாட்டரசன் ஆக்கி வைத்தாய்
வேல்கேட்ட பிள்ளைக்குச் செந்தூரில் சமர்செய்ய
விருப்பமுடன் வேல் கொடுத்தாய்
விளையாடும் ஏழரைச் சனியோடு கிரகங்கள்
விலகிட வழி அமைத்தாய்
நூல்கேட்ட ஞானத்தில் நூறுகவி பாடுமெனை
நோக்கி நீ எது கொடுத்தாய்?
நொடிப்பொழுதில் என் வாழ்வில் படிப்படியாய் துயரங்கள்
நுழைவதற்கு ஏன் விடுத்தாய்
வாழ்வரசி இனி எனது வருங்காலம் செல்வங்கள்
வரும் காலம் ஆக்க வருவாய்
வைத்தீஸ்வரன் கோவில் வளர் தையல் நாயகி
வளம் காண வைக்கும் உமையே
தா என்று கேட்டவுடன் கொடுப்பதனால் தானுன்னை
தாய், என்று சொல்லிவைத்தார்
தலைமகனார் சன்னதியில் கலைமகளின் அருளாலே
தமிழ்பாடி வரங்கள் பெற்றார்
சேய் ஒன்று எதிரினிலே கதறுவது கேட்காமல்
செவி மூடி நிற்க லாமோ
சிறுபிழைகள் இருந்தாலும் மன்னித்து அருள்காட்டும்
தேவியவள் நீயல் லவோ
ஆயகலை அத்தனையும் அறிந்தவரை நோய் நொடிகள்
அணுக விடல் முறையாகுமோ

அரியதொரு செல்வத்தை உரியமகன் ஏற்காமல்
அனுதினமும் வாடலாமோ?
வாயுவென வேகமாய் வந்தெனது துயர்தீர்த்து
மகிழ்ச்சியினைக் கொடுக்க வருவாய்
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே
வளம் காண வைக்கும் உமையே
தங்கநிகர் குணத்தோடு தைரியமும் தருகின்ற
தமிழ்ச் செல்வி போற்றி போற்றி
தரணியில் புகழ்காண வரமளிக்கும் சுந்தரியாம்
தாமரைப்பூ மாது போற்றி
மங்கையர்க்கு மாலைகளும் மன்னவர்க்கு வேலைகளும்
மகிழ்ந்தளிக்கும் அரசி போற்றி
மாதரசி உண்ணாமலை அழகு சிவகாமி
மங்கை மீனாட்சி போற்றி
பொங்கிவரும் துயரத்தைப் பொடியாக்கி வரும்
அன்னபூரணி கல்யாணி போற்றி
யோகமுடன் வாழ்வுதரும் பூங்கொடியாம் விசாலாட்சி
புனித உமாதேவி போற்றி
மங்களங்கள் அத்தனையும் எங்களது வீடுவர
மாதரசி கூட்டி வருவாய்
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே
வளம் காண வைக்கும் உமையே
மலைபோன்ற செல்வத்தை குவித்து வைத்திருக்கும் நான்
மற்றவர்க்கு உதவ வேண்டும்
மழலையின் குணத்தோடு முதுமையிலும் இளமையாய்
மகிழ்வோடு வாழ வேண்டும்
கலைதவழும் மேடையெல்லாம் பூமாலை அணிந்து
கௌரவம் செய்ய வேண்டும்
கவிபாடும் எனதுகுரல் கேட்டவுடன் தெய்வமெல்லாம்
காட்சிதந்து அருள வேண்டும்
நிலையான புகழ்தந்து உற்றாரும் மற்றாரும்
நேசிக்கும் உறவு வேண்டும்
நீ எனது துணையாகி நான் செல்லும் பாதைக்கு
நேர்வழிகள் காட்ட வேண்டும்
வளையாடும் கரத்தழகி பகைவென்று எந்நாளும்
மறுக்காமல் காக்க வருவாய் அம்மா
வைத்தீஸ்வரன் கோவில் வளர் தையல்நாயகியே
வளம் காண வைக்கும் உமையே
சிறுவயதில் உன்பெருமை தெரிந்திருந்தாலுன்னைச்
சேவித்து மகிழ்ந் திருப்பேன்!
தெரியாமல் செய்தபிழை அத்தனையும் மன்னிக்கத்
தேடிவந் தழுதி ருப்பேன்!

புரியாமல் எடுத்தயிப் பிறவிதனில் மங்கையின்
போகத்தை அளந்திருந்தேன்!
பொன்னோடும் பெண்ணோடும் வருமின்பம் போதுமெனப்
புரியாமல் வாழ்ந்திருந்தேன்!
திருநாளில் உன்பெருமை தெரிந்ததும் தொடர்ந்த
நான் செவ்வாயில் விரதம் வைத்தேன்!
தித்திக்கும் அருள்தன்னை சிந்திக்க வரம் வேண்டிச்
சிங்காரப் பாட்டி சைத்தேன்!
பருவத்தில் நான் செய்த பாவத்தை மன்னித்து
பாவை நீ காக்க வருவாய் அம்மா
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே!
வளம் காண வைக்கும் உமையே
திருக்கழுக் குன்றத்தில் கழுகுக்கும் மதியத்தில்
தினம் தோறும் சோறு உண்டு!
திருநாளாம் பொங்கலில் நந்தியெனும் மாட்டுக்கும்
தித்திக்கும் பொங்கல் உண்டு
வருஷத்தில் ஒருநாளில் வடையோடு அன்னத்தை
வயிரவரும் காண்பதுண்டு
வளர்கின்ற புற்றுக்குள் ஒளிகின்ற பாம்புக்கும்
வார்க்கின்ற பாலு முண்டு!
அர்சித்து வழிபட்டு அன்னையே உனையென்னும்
அடியேனுக் கென்ன உண்டு?
அன்று தினம் அளந்தபடி என்றைக்கும் நடந்திடவே
அருள்புரிய வேண்டும் அம்மா
மரம்வைத்த நீதானே தண்ணீரும் விட வேண்டும்
மறந்திடல் முறையாகுமா அம்மா?
வைத்தீஸ்வரன் கோவில் வளர் தையல் நாயகியே
வளம் காண வைக்கும் உமையே
புல்லாகி பூடாகி புழுவாகி இழிந்தாலோ
புலம்பியே தீர வேண்டும்!
பொன்னாக அணிகின்ற மனிதனாய் பிறந்த நான்
புதுயுகம் காண வேண்டும்.
கல்லாகி நிற்கின்ற தெய்வம் நீ இல்லையென
காட்டிட விரைந்து வருக!
கனதனம் நீ தந்து காசியினில் புகழ்தந்து
காவலாய் நின்று அருள்க!
முள்ளாக மலராக மோதிடும் வாழ்க்கையில்
முற்றும் நான் நம்பி வந்தே,
மோதகப் பிரியனின் தாயான உன்னிடம்
முறையீடு செய்கின்றேன்
பல்லக்கு பரிவாரம் பார்த்திடும் ராஜாங்கப்
பவனியை எனக்கு அருள்க அம்மா
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே
வளம் காண வைக்கும் உமையே!
எவருக்கு எது வேண்டும் என்பதை அறிந்து நீ
ஏறிட்டு பார்க்கவில்லை!
இருகரம் கூப்பியுன் சந்நிதியில் நிற்கும் நான்
எதுகேட்டும் மாறவில்லை!
சிவல்புரியில் வாழ்கின்ற சிங்காரம் தந்ததோர்
செந்தமிழ் கவிதை மூலம்
சீர்கொண்ட பதிகங்கள் பத்தையும் கேட்டு நீ
சிரமத்தை அகற்ற வேண்டும்
கவலைக்கு மருந்தாகும் கடவுளே உனை நம்பி
காலங்கள் போக்கிவிட்டேன்
காப்பாற்ற வேண்டியது உன் பொருப் பல்லாது
காசினில் யார் பொறுப்பு
மகன்கேட்டுத் தாய்எதுவும் மறுப்பதினில் முறையில்லை
மனமிரங்கி வந்து அருள்க அம்மா
வைத்தீஸ்வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம் காண வைக்கும் உமையே!
கழுதையெனும் பிறவியை எடுத்தாலே நிச்சயம்
கழுத்திலே பொதியிருக்கும் !
காளைமாடாகவே பிறந்திடின் நிச்சயம்
கழனியில் கால் இருக்கும் !
பழுதான பிறவியாம் நாயாகப் பிறந்தாலோ
பகலிரவு விழிக்க வேண்டும்
பறவையாய் பிறந்தாலும் மரங்களின் உச்சியில்
பதியங்கள் போட வேண்டும் !
அழுதாலும் தொழுதாலும் அன்னையே உனையன்றி
யாரெனக்கு உதவுவார்கள்?
ஆறறிவு கொண்ட தோர் மனிதனாய் என்னை நீ
அகிலத்தில் படைத்த பின்னால்
வழிகாட்ட மறுப்பதும் நியாயமா? என் வழியில்
வடிந்து நீர் ஓடலாமா? அம்மா
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே
வளம் காண வைக்கும் உமையே !

## கற்பூர நாயகியே

கற்பூர நாயகியே கனகவல்லி !
காளி மகமாயி கருமாரியம்மா !
பொற்கோவில் கொண்ட சிவ காமியம்மா !
பூவிருந்த வல்லிதெய்வ யானையம்மா !
விற்கோல வேதவல்லி விசாலாட்சி !
விழிக்கோல மாமதுரை மீனாட்சி !
சொற்கோவில் நானமைத்தேன் இங்குதாயே !
சுடராக வாழ்விப்பாய் என்னை நீயே ! (கற்பூர)

புவனமுழு தாளுகின்ற புவனேஸ்வரி !
புரமெரித்தோன் புறமிருக்கும் பரமேஸ்வரி !
நவநவமாய் வடிவாகும் மாகேஸ்வரி !
நம்பினவர் கைவிளக்கே சர்வேஸ்வரி !
கவலைகளைத் தீர்த்துவிடும் காளீஸ்வரி !
காரிருளின் தீச்சுடரே ஜோதீஸ்வரி !
உவமானப் பரம்பொருளே ஜகதீஸ்வரி !
உன்னடிமைச் சிறியேனை நீயாதரி ! (கற்பூர)

உன்னிடத்தில் சொல்லாமல் வேறு எந்த
உறவிடத்தில் முறையிடுவேன் தாயே எந்தன்
அன்னையவள் நீயிருக்க உலகில் மற்ற
அன்னியரைக் கெஞ்சிடுதல் முறையோ அம்மா !
கண்ணீரைத் துடைத்துவிட ஓடிவாம்மா !
காத்திருக்க வைத்திடுதல் சரியோ அம்மா !
சின்னவனின் குரல்கேட்டுன் முகம் திருப்பு !
சிரித்தபடி என்னைத்தினம் வழி அனுப்பு ! (கற்பூர)

கண்ணிரண்டும் உன்னுருவே காண வேண்டும் !
காலிரண்டும் உன்னடியே நாடவேண்டும் !
பண்ணமைக்கும் நா உனையே பாடவேண்டும் !
பக்தியோடு கையுனையே கூடவேண்டும் !
எண்ணமெலாம் உன்நினைவே ஆகவேண்டும் !
இருப்பதெலாம் உன்னுடைய தாக வேண்டும் !
மண்ணளக்கும் சமையபுர மாரியம்மா !
மகனுடைய குறைகளையும் தீருமம்மா ! (கற்பூர)

நெற்றியிலுன் குங்குமமே நிறைய வேண்டும் !
நெஞ்சினிலுன் திருநாமம் வழிய வேண்டும் !
கற்றதெலாம் மென்மேலும் பெருக வேண்டும் !
கவிதையிலே உன் நாமம் வாழவேண்டும் !
சுற்றமெலாம் நீடுழி வாழவேண்டும் !
ஜோதியிலே நீயிருந்து ஆளவேண்டும் !
மற்றதெலாம் நானுனக்குச் சொல்லலாமா !
மடிமீது பிள்ளை என்னைத் தள்ளலாமா ! (கற்பூர)

அன்னைக்கு உபதேசம் செய்வதுண்டோ?
அருள் செய்ய இந்நேரம் ஆவதுண்டோ?
கண்ணுக்கு இமையன்றிக் காவலுண்டோ?
கன்றுக்குப் பசுவன்றிச் சொந்தமுண்டோ?
முன்னைக்கும் பின்னைக்கும் பார்ப்பதுண்டோ?
முழுமைக்கும் நீ எந்தன் அன்னையன்றோ?
எண்ணெய்க்கும் விளக்குக்கும் பேதமுண்டோ?
என்றைக்கும் நானுந்தன் பிள்ளையன்றோ?
(கற்பூர)

அன்புக்கே நானடிமை ஆக வேண்டும் !
அறிவுக்கே என்காது கேட்க வேண்டும் !
வம்புக்கே போகாமல் இருக்க வேண்டும் !
வஞ்சத்தை என்னெஞ்சம் அறுக்க வேண்டும் !
பண்புக்கே உயிர்வாழ ஆசை வேண்டும் !
பரிவுக்கே நானென்றும் பணிய வேண்டும் !
இவையெல்லாம் என் பக்கம் இருக்க வேண்டும்
என்னோடு நீ என்றும் வாழ வேண்டும் ! (கற்பூர)

கும்பிடவோ கை இரண்டும் போதவில்லை
கூப்பிடவோ நா ஒன்றால் முடியவில்லை
நம்பிடவோ மெய்தனில் சக்தி இல்லை
நடந்திடவோ கால் இரண்டால் ஆகவில்லை
செம்பவள வாய் அழகி உன் எழிலோ
சின்ன இரு கண்களுக்குள் அடங்கவில்லை
அம்பளவு விழியாலே உன்னை என்றும்
அடிபணியும் ஆசைக்கோர் அளவும் இல்லை
(கற்பூர)

காற்றாகி கனலாகி கடலாகினாய்
கருவாகி உயிராகி உடலாகினாய்
நேற்றாகி இன்றாகி நாளாகினாய்
நிலமாகி பயிராகி உணவாகினாய்
தோற்றாலும் ஜெயித்தாலும் வாழ்வாகினாய்
தொழுதாலும் அழுதாலும் வடிவாகினாய்
போற்றாத நாள் இல்லை தாயே உன்னை
பொருளோடு புகழோடு வைப்பாய் என்னை
(கற்பூர)

## சிவசக்தி விநாயகனே!

சிவசக்தி விநாயகனே நவராத்ரி பூஜைகள்
இசையுடன் சிறந்திட
வலம் வந்து வேண்டுவமே – நவசக்தி விநாயகனே !
(சிவசக்தி)

ஐங்கரம் கொண்டவனே! அபயம் கொடுப்பவனே!
அனைத்திலும் முதல்வனே ! பிரணவ மானவனே!
மூஷிக வாகனனே! உலகை மும்முறை சுற்றிய வனே!
மாங்கனி பெற்றவனே! மோகன கணபதியே
கணபதியே (சிவசக்தி)

வெற்றியைத் தருபவனே ! வினைகள் தீர்ப்பவனே !
நலங்கள் சேர்ப்பவனே ! சித்தியும் அளிப்பவனே !
சதுர்த்தியில் மகிழ்பவனே செஞ்சொல் மாலைகள்
விளங்கிடவே
வல்லமை தருவாயே நல்வாழ்வை அருள்வாயே !
அருள்வாயே (சிவசக்தி)

## ஸ்ரீ கணநாதனே நமோ நமோ!

ஸ்ரீகண நாதனே நமோ நமோ
ஐயகண நாதனே நமோ நமோ
சங்கரி பாலனே நமோ நமோ
சரணம் ஐங்கரனே நமோ நமோ

மூல முதல்வனே நமோ நமோ
மோதகப்பிரியனே நமோ நமோ
கரிமுகத் தழகனே நமோ நமோ
கருணாகரனே நமோ நமோ

## திருவிளக்கு பாடல்

திருவிளக்கே திருவிளக்கே
தேவி பராசக்தி திருவிளக்கே
தேவியின் வடிவே திருவிளக்கே
தேவியே உனக்கு நமஸ்காரம்

இருளை அகற்றும் திருவிளக்கே
இன்பம் அளிக்கும் திருவிளக்கே
எங்கும் ஒளிதரும் திருவிளக்கே
லட்சுமி உனக்கு நமஸ்காரம்

மங்கள ஜோதியாம் திருவிளக்கே
மாலையில் ஒளிதரும் திருவிளக்கே
காலையில் ஒளிதரும் திருவிளக்கே
ஸரஸ்வதி உனக்கு நமஸ்காரம்

திருமகள் வடிவே திருவிளக்கே
தேவரும் பணியும் திருவிளக்கே
தெள்ளிய ஜோதியே திருவிளக்கே
சாரதா உனக்கு நமஸ்காரம்

அ டலக்ஷ்மி வடிவே திருவிளக்கே
ஆனந்த நர்த்தனி திருவிளக்கே
ஆலய பூஷணி திருவிளக்கே
ஆதி பராசக்தி நமஸ்காரம்

பாக்ய லட்சுமியாம் திருவிளக்கே
பக்தியை அளிக்கும் திருவிளக்கே
பதவியை தந்திடும் திருவிளக்கே
பவானி உனக்கு நமஸ்காரம்

ஜெகமெல்லாம் விளங்கும் திருவிளக்கே
ஜெகதீஸ்வரி வடிவே திருவிளக்கே
அழகை அளித்திடும் திருவிளக்கே
அம்மா உனக்கு நமஸ்காரம்

சௌபாக்கிய ரூபிணி திருவிளக்கே
சந்தான பலன்தரும் திருவிளக்கே
சம்பத்தை அளிக்கும் திருவிளக்கே
சக்தியே உனக்கு நமஸ்காரம்
இராஜ ராஜேஸ்வரி நமஸ்காரம் (2)

## வரவேண்டும் தாயே!

வரவேண்டும் வரவேண்டும் தாயே – ஒரு வரம்
தரவேண்டும் தரவேண்டும் நீயே – தாயே (வர)
அறம் வளர்க்கும் அம்மா – பர்வதவர்த்தினி
அய்யாறு தனில் மேவும் தர்மசம்வர்த்தினி
திருவையாறு தனில் மேவும் தர்மசம்வர்த்தினி (வர)

தான் எனும் அகந்தை தலைக்கு ஏறாது
தாழ்ந்த நிலையிலும் தர்மம் மாறாது (2)
வான் புகழ் வள்ளுவன் வகுத்த நல்வழியினில்
வையகம் வாழ்ந்திட வரமருள் தாயே (வர)

## துர்கை துதி!

வாழ்வு ஆனவள், துர்கா வாக்குமானவள்
வானில் நின்றவள், இந்த மண்ணில் வந்தவள்
தாழ்வு அற்றவள், துர்கா தாயுமானவள்
தாபம் நீக்கியே, எனைத் தாங்கும் துர்கையே!

தேவி துர்கையே ஜெய தேவி துர்கையே!
தேவி துர்கையே ஜெய தேவி துர்கையே!
உலகை யீன்றவள் துர்கா உமையுமானவள்
உண்மையானவள் எந்தன் உயிரை காப்பவள்
நினைவில் நின்றவள் துர்கா நித்தியையானவள்
நிலவில் நின்றவள் எந்தன் நிதியும் துர்கையே! தேவி

செம்மையானவள் துர்கா ஜெபமும் ஆனவள்
அம்மையானவள் அன்புத் தந்தை யானவள்
இம்மையானவள் துர்கா இன்பமானவள்
மும்மையானவள் என்றும் முழுமை துர்கையே! தேவி

உயிருமானவள் துர்கா உடலுமானவள்
உலகமானவள் எந்தன் உடைமையானவள்
பயிருமானவள் துர்கா படரும் கொம்பவள்
பண்பு பொங்கிட என்னில் பழுத்த துர்கையே! தேவி

துன்பமற்றவள் துர்கா தூரிய வாழ்பவள்
துறையு மானவள் இன்பத் தோணியானவள்
அன்பு உற்றவள் துர்கா அபயவீடவள்
நன்மை தங்கிட என்னுள் நடக்கும் துர்கையே! தேவி

குருவுமானவள் துர்கா குழந்தையானவள்
குலமுமானவள் எங்கள் குடும்ப தீபமே
திருவுருவமானவள் துர்கா திரிசூலிமாயவள்
திருநீற்றில் என்னிடம் திகழும் துர்கையே! (தேவி)

இராகு தேவனின் பெரும் பூஜை ஏற்றவள்
இராகு நேரத்தில் என்னைத் தேடி வருபவள்
இராகு காலத்தில் எந்தன் தாயே வேண்டினேன்
இராகு துர்கையே என்னைக் காக்கும் துர்கையே!
(தேவி)

கன்னி துர்கையே இதயக் கமல துர்கையே
கருணை துர்கையே வீர கனக துர்கையே
அன்னை துர்கையே என்றும் அருளும் துர்கையே!
அன்பு துர்கையே ஜெய துர்கை துர்கையே! (தேவி)

## துக்கநிவாரணி அ கம் !

மங்கள ரூபிணி மதியணி சூலினி
மன்மத பானியளே
சங்கடம் நீக்கிடச் சடுதியில் வந்திடும்
சங்கரி சௌந்தரியே

கங்கண பாணியன் கனிமுகம் கண்ட
நல்கற்பகக் காமினியே
ஜெய ஜெய சங்கரி கௌரி கிருபாகரி
துக்க நிவாரணி காமாட்சி!

கானுறு மலரெனக் கதிரொளி காட்டிக்
காத்திட வந்திடுவாள்
தானுரு தவஒளி தாரொளி மதியொளி
தாங்கியே வீசிடுவாள்

மானுரு விழியாள் மாதவர் மொழியாள்
மாலைகள் சூடிடுவாள்
ஜெய ஜெய சங்கரி கௌரி கிருபாகரி
துக்க நிவாரணி காமாட்சி!

சங்கரி சௌந்தரி சதுர்முகன்
போற்றிடச் சபையினில் வந்தவளே
பொங்கரி மாவினில் பொன்னடி
வைத்து பொருந்திட வந்தவளே

எங்குலம் தழைத்திட எழில் வடிவுடனே
எழுந்த நல் துர்கையளே
ஜெய ஜெய சங்கரி கௌரி கிருபாகரி
துக்க நிவாரணி காமாட்சி!

தண தண தந்தன தவிலொளி
முழங்கிடத் தண்மணி நீ வருவாய்
கண கண கங்கண கதிர் ஒளி வீசிடக்
கண்மணி நீ வருவாய்

பண பண பம்பண பறையொலி கூவிட
பண் மணி நீ வருவாய்
ஜெய ஜெய சங்கரி கௌரி கிருபாகரி
துக்க நிவாரணி காமாட்சி!

பஞ்சமி பைரவி பர்வத புத்திரி
பஞ்ச நல் பாணியளே
கொஞ்சிடும் குமரனை குணமிகு வேழனை
கொடுத்த நல் குமரியளே

சங்கடம் தீர்த்திட சமரது செய்த
நற் சக்தி எனும் மாயே
ஜெய ஜெய சங்கரி கௌரி கிருபாகரி
துக்க நிவாரணி காமாட்சி!

எண்ணிய படி நீ யருளிட வருவாய்
எம் குல தேவியளே பண்ணிய
செயலின் பலனது நலமாய்
பல்கிட அருளிடுவாய் கண்ணொளி
அதனால் கருணையே காட்டி
கவலைகள் தீர்ப்பவளே
ஜெய ஜெய சங்கரி கௌரி கிருபாகரி
துக்க நிவாரணி காமாட்சி!

இடர்தரும் தொல்லை இனிமேல் இல்லை
என்று நீ சொல்லிடுவாய்
சுடர் தரும் அமுதே சுருதிகள் கூறி
சுகமதைத் தந்திடுவாய்
படர் தரு இருளில் பரிதியாய் வந்து
பழவினை ஓட்டிடுவாய்
ஜெய ஜெய சங்கரி கௌரி கிருபாகரி
துக்க நிவாரணி காமாட்சி

ஜெய ஜெய பாலா சாமுண்டேஸ்வரி
ஜெய ஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய துர்கா ஸ்ரீ பரமேஸ்வரி
ஜெய ஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய ஜெயந்தி மங்களகாளி
ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய சங்கரி கௌரி கிருபாகரி
துக்க நிவாரணி காமாட்சி!

## அன்னை துர்கா பரமேஸ்வரி!

அன்னை துர்கா பரமேஸ்வரி
அம்மா நீயே புவனேஸ்வரி
எங்கும் இருப்பாள் ராஜேஸ்வரி
எங்கள் துணை நீ மகேஸ்வரி

தேனாய் இனிப்பாள் பாகேஸ்வரி
செந்தமிழ் மொழியே ஞானேஸ்வரி
வானாய்ப் பரந்தாள் மாதேஸ்வரி
வளங்கள் தருவாள் சௌடேஸ்வரி (அன்னை)

தாயாய் இருப்பாள் தயாபரி
ஜகத்தோர் உனக்கே சராசரி
சேயாம் எங்களை ஆதரி
திருமால் என்பாள் சோதரி (அன்னை)

## துர்கை துதி

அம்பிகையே துர்கையே ஆதிபராசக்தியே
நம்பி உன்னைத் தொழுது வந்தால்
நாளும் உண்டு மேன்மையே (அம்பிகையே)

அன்னையே உனைப் பணிந்து கன்னிப் பெண்கள்
வணங்கினால் திருமணங்கள்
விரைவினிலே நடைபெறவே அருளுவாய்
(அம்பிகையே)

மஞ்சளோடு குங்குமங்கள் மங்கையர்க்கு வழங்குவாய்
வஞ்சமில்லா நெஞ்சமெல்லாம் கோயில்கொண்டு
வாழுவாய்
நவராத்ரி கொலுவிருக்கும் நாயகியே துர்கையே
நல்லதெல்லாம் நடத்தி வைக்கும் வல்லமை உன்
சக்தியே (அம்பிகையே)

## ரோக நிவாரணி அஷ்டகம்

பகவதிதேவி பர்வத தேவி பலமிகுதேவி துர்கையளே
ஜெகமது யாவும் ஜெயஜெய வெனவே
சங்கரியுன்னைப் பாடிடுமே
ஹநஹந தகதக பசபசவெனவே தளிர்த்திடு
ஜோதியானவளே
ரோக நிவாரணி சோக நிவாரணி தாப நிவாரணி
ஜெயதுர்கா
தண்டினிதேவி தக்ஷிணி தேவி கட்கினி தேவி
துர்கையளே
தந்தன தான தனதன தான தாண்டவ நடன
ஈஸ்வரியே
முண்டினி தேவி முனையொளி சூலி முனிவர்கள் தேவி
மணித் தீவி
ரோக நிவாரணி சோக நிவாரணி தாப நிவாரணி
ஜெய துர்கா
காளினி நீயே காமினி நீயே கார்த்திகை நீயே
துர்கையளே
நீலினி நீயே நீதினி நீயே நீர்நிதி நீயே நீரொளியே
மாலினி நீயே மாதினி நீயே மாதவி நீயே மான்விழியே
ரோக நிவாரணி சோக நிவாரணி தாப நிவாரணி
ஜெயதுர்கா

நாரணி மாயே நான்முகன் தாயே நாகினியாயே
துர்கையளே
ஊரணிமாயே ஊற்று நீ தாயே ஊர்த்துவ யாயே ஊர்
ஒளியே
காரணிமாயே காருணி நீயே கானகமாயே காசினியே
ரோக நிவாரணி சோக நிவாரணி தாப நிவாரணி
ஜெயதுர்கா

திருமகளானாய் கலைமகளானாய் மலைகளானாய்
துர்கையளே
பெருநிதியானாய் பேரறிவானாய் பெருவலிவானாய்
பெண்மையளே
நறுமலரானாய் நல்லவளானாய் நந்தினியானாய்
நங்கையளே
ரோக நிவாரணி சோக நிவாரணி தாப நிவாரணி
ஜெயதுர்கா

வேதமும் நீயே வேதியள் நீயே வேகமும் நீயே
துர்கையளே
நாதமும் நீயே நாற்றிசை நீயே நாணமும் நீயே நாயகியே
மாதமும் நீயே மாதவம் நீயே மானமும் நீயே மாயவளே
ரோக நிவாரணி சோக நிவாரணி தாப நிவாரணி
ஜெயதுர்கா

கோபுர ஜோதி கோமள ஜோதி கோமதி ஜோதி
துர்கையளே
நாவுறைஜோதி நாற்றிசை ஜோதி நாட்டிய ஜோதி
நாயகியே
பூவுறை ஜோதி பூரண ஜோதி பூத நற்ஜோதி பூரணயே
ரோக நிவாரணி சோக நிவாரணி தாப நிவாரணி
ஜெய துர்கா
ஜெய ஜெய சைல புத்ரி ப்ரஹ்ம சாரணி சந்தர
கண்டினியே
ஜெய ஜெய கூ மாண்டினி ஸ்கந்தமாலினி
காத்யாயண்யளே
ஜெய ஜெய கால ராத்திரி கௌரி ஸித்திகா ஸ்ரீதவ
துர்கையளே
ரோக நிவாரணி சோக நிவாரணி தாப நிவாரணி
ஜெயதுர்கா!
ஸர்வ மங்கள மாங்கல்யே சிவே ஸர்வார்த்த ஸாதிகே
ஸரண்யே த்ரயம்பிகே கௌரி நாராயணி நமோஸ்
துதே!

## அம்மன் அருள்

அகிலமெல்லாம் விளங்கும் அம்மன் அருள் – அது
அடியவர் துயர் தீர்க்கும் ஆயிரம் நலம் சேர்க்கும்
அற்புத விருந்தாகுமே (அகில)

மதுரையம்பதி வாழும் மீனாட்சியாய் – தொண்டை
மண்டலம் தனையாளும் காமாட்சியாம் (2)
கங்கை நதி பாயும் காசி நகர் தன்னில்
மங்கை விசாலாட்சி தானாக கண்ணில் அமுதூட்டி
கருணை நிலை காட்டி நண்ணும் உயிர் காக்கும்
தாயாக (அகில)

திருக்கடவூர் நின்ற அபிராமியாய் – புகழ்
தில்லையிலே அன்னை சிவகாமியாய்
சமய மறிந்துதவ சமயபுரம் மேவி
அமைந்த மகமாயி வடிவாக
அமுத மழை சிந்தும் அழகு விழி கொஞ்ச
ஆனைக் காவில் வளர் சுடராக (அகில)

தென் திசையில் பூரித் திருமேனியாய் – எழில்
திருவேற் காடமர்ந்த கருமாரியாய்
உரிய வரம் தந்து உதவும் மனம் கொண்டு
பெரிய பாளையத்தில் பவானியாய்
உலகமெங்கும் திருத்தலங்கள் தோன்றும் பல
உருவில் நின்றொளிரும் மாதேவியாய் (அகில)

சிகப்பு நிறச் சேலை கட்டி சிங்க வாகனம் ஏறி
திரு உலா வருபவளே துர்கையம்மா
உவப்புடன் நவராத்ரி அதனிலும் சுபராத்ரி
உன்னடி போற்றுகின்றேன் துர்கையம்மா (சிகப்பு)

மந்தாரை செண்பகப்பூ மாலை அணிந்தவளே
மாகாளி சண்டிகையே துர்கையம்மா
சிந்தாகுலம் தவிர்க்கும் சுசீலை என்முன்னம்
தரிசனம் தந்தவளே துர்கையம்மா (சிகப்பு)

சங்கு சக்கரம் ஏந்தி சதுர் புஜ வடிவத்துடன்
தக்ஷன் முன் நின்றவளே துர்கையம்மா
பொங்கும் மங்கள கீதம் பூந்தமிழ் தனில் பாடி
புகழ்ந்திட அருள் புரிவாய் துர்கையம்மா (சிகப்பு)

## மங்கள சண்டிகை சுலோகம்

ரட்ச ரட்ச ஜகன் மாதா,
சர்வ சக்தி ஜெயதுர்கா(2)
மங்கள வாரம் சொல்லிட வேண்டும்
மங்கள சண்டிகை சுலோகம் இதை
ஒன்பது வாரம் சொல்லுவதாலே
உமையவள் திருவருள் சேரும் (ரட்ச–2)

படைப்பவள் அவளே காப்பவள்
அவளே அழிப்பவள் அவளே சக்தி!
அபயம் என்றவளை சரணம் புகுந்தாலே
அடைக்கலம் அவளே சக்தி!
ஜெய ஜெய சங்கரி! கௌரி மனோகரி!
அபயம் அளித்தருள் அம்பிகை! பைரவி!
சிவ சிவ சங்கரி சக்தி
மகேஸ்வரி திருவருள் தருவாய் தேவி (ரட்ச–2)

கருணையில் கங்கை கண்ணனின் தங்கை
கடைக்கண் திறந்தால் போதும்
வருகிற யோகம் வளர் பிறையாகும்
அருள் மழை பொழிவாள் நாளும்
நீல நிறத்தோடு ஞாலம் அளந்தவள்
காளி எனத்திரி சூலம் எடுத்தவள்
பக்தருக் கெல்லாம் பாதை வகுத்தவள்
நாமம் சொன்னால் நன்மை தருபவள் (ரட்ச–2)

சின்னஞ்சிறு பெண் போலே சித்தாடை இடை உடுத்தி
சிவகங்கை குளத்தருகே ஸ்ரீதுர்கை சிரித்திருப்பாள் (சின்)

பெண்ணவளின் கண் அழகு பேசி முடியாது
பேரழகுக்கு ஈடாக வேறொன்றும் கிடையாது (சின்)

மின்னலைப்போல் மேனி அன்னை சிவகாமி
இன்பம் எல்லாம் தருவாள் எண்ணம்
எல்லாம் நிறைவாள் பினனல் ஜடை
போட்டு பிச்சிப்பூ சூடிடுவாள்
பித்தனுக்கு இணையாக நர்தனம் ஆடிடுவாள் (சின்)

## சிவபாலன்

சின்ன சின்ன பாலன் சிவ பாலன்
வண்ண மயில் ஏறும் வடிவேலன்
குன்றுதோறும் குடியிருப்பான்
குறவர் குழுவிலும் குடியிருப்பான்
குன்றக்குடி வேலனே குறத்தி மணாளனே
குறைகளைத் தீர்த்திட வந்திடுவாய் (சின்)

தன்னந் தனிமையில் நின்றுவிட்டாய்
தந்தை தாயையும் துறந்து விட்டாய்
தங்கத்தமிழ் தேவனே தாமரைப் பொற் பாதனே
தயவுடனே வந்து அருள் புரிவாய் (சின்)

ஔவைப் பாட்டி அன்று அழைக்கயிலே
ஓடிவந்து நாவல் மரத்தினிலே
சுட்டப்பழம் வேண்டுமா? சுடாப்பழம் வேண்டுமா
என்றுகூறி ஔவைக்கு அருள் புரிந்தாய் (சின்)

## துர்கா தேவி சரணம்

ஜெய ஜெய தேவி ஜெய ஜெய தேவி துர்கா தேவி சரணம்
ஜெய ஜெய தேவி ஜெய ஜெய தேவி துர்கா தேவி சரணம்
துர்கை அம்மனை துதித்தால் என்றும்
துன்பம் பறந்தோடும் தருமம் காக்கும்
தாயும் அவளே தரிசனம் கண்டால் போதும்
கர்ம வினைகளும் ஓடும் சர்வ மங்களம் கூடும் (ஜெய)

பொற்கரங்கள் பதினெட்டும் நம்மை
சுற்றிவரும் பகை விரட்டும்
நெற்றியிலே குங்குமப் பொட்டும் வெற்றிப்
பாதையை காட்டும் ஆயிரம் கண்கள்
உடையவளே ஆதி சக்தி அவள் பெரியவளே
ஆயிரம் நாமங்கள் கொண்டவளே
தாய்ப்போல் நம்மை காப்பவளே (ஜெய)

சங்கு சக்கரம் வில்லும் அம்பும் மின்னும்
வாளும் வேலுடன் சூலமும் தங்கக்
கைகளில் தாங்கி நிற்பாள் அம்மா (ஜெய)

சிங்கத்தின் மேல் அவள் வீற்றிருப்பாள்
திங்களை முடி மேல் சூடிடுவாள்
மங்கள வாழ்வும் தந்திடுவாள்
மங்கையர்க் கரசியும் அவளே
அங்கையற் கண்ணியும் அவளே (ஜெய ஜெய தேவி)

## அழகெல்லாம் முருகனே!

அழகெல்லாம் முருகனே
அறிவெல்லாம் முருகனே
தெளிவெல்லாம் முருகனே
தெய்வமும் முருகனே

பழஞான பசியாலே பழனிக்கு வந்தவன்
பழமுதிர் சோலையிலே பசியாறி நின்றவன் (அழ)

குன்றெல்லாம் ஆள்பவன் குகனாக வாழ்பவன்
குறவஞ்சிக் காதலனவன் குறிஞ்சிக்கு வேந்தனவன்
பூ ஆறு முகங்களிலே
பேரருள் ஒளி வீச நாவாரப்
பாடுகையில் நலம் பாடும் வேலனவன் (அழ)

## சண்முக நாயகன்!

ஷண்முக நாயகன் தோன்றிடுவான்
சிவ சத்குரு நாயகன் தோன்றிடுவான்
கண்களினால் கண்டு போற்றிடலாம்
கொடும் காலத்தை காலனை மாற்றிடலாம் !

ஆனந்த மாமலர் சோலையிலே மன
ஆட்டம் அடங்கிய வேளையிலே
ஞானம் தரும் தென்றல் காற்றினிலே
எழும் நாம சங்கீர்த்தனம் ஊற்றினிலே !

பக்குவமாய் தினைக்காட்டினிலே
அவர் பக்தர் நுழைந்திடும் வீட்டினிலே
மிக்குயர் வான்மலைக் கோட்டினிலே அருள்
மேவும் அகஸ்தியர் பாட்டினிலே !

தொண்டர் திரண்டெழும் கூட்டத்திலே
அவனைச் சுற்றி சுழன்றிடும் ஆட்டத்திலே
அண்டர் தினம் தொழும் வானத்திலே
தேவ ஆன்ம சுகம் பெறும் மோகனத்திலே

ஆடிவரும் நல்ல நாகத்திலே
அவன் ஆறெழுத்து ஜப வேகத்திலே
கோரி வரம் தரும் கோவிலிலே
தன்னைக் கூப்பிடுவோர் மனை வாயிலிலே !

மாமயில் ஏறி வருவாண்டி அன்பர்
வாழ்த்த வரங்கள் தருவாண்டி தினம்
இல்லாத புகழ் ஆண்டி அவன் தோற்றத்தை
பாடி அடியுங்கடி கும்மி (2)

## பழனி எனும் ஊரிலே!

பழனி என்னும் ஊரிலே பழனி
பழனி என்ற பேரிலே பவனி வந்தான் தேரிலே
பலனும் தந்தான் நேரிலே
முருகன் பலனும் தந்தான் நேரிலே (பழனி)

பழமுதிரும் சோலையிலே பால்காவடி ஆடிவர
தணிகைமலை தென்றலிலே பன்னீர்
காவடி ஆடிவர சுவாமிமலை கோவிலிலே
சர்க்கரைக் காவடி ஆடிவர செந்தூரின்
வாசலிலே சந்தனக் காவடி ஆடிவர – குமரன் (பழனி)

பரங்குன்றின் மலையோரம் சேவற்கொடி ஆடிவர
குன்றின் மடியில் என்னாளும் வண்ணமயிலும் ஆடிவர
மயிலத்தின் மலைமேலே மணிஓசை முழங்கிவர
விராலி மலை மேலிருந்து வீரவேலும் வெற்றிபெற (பழனி)

## ஆடுகின்றானடி தில்லையிலே!

ஆடுகின்றானடி தில்லையிலே – அதைப்
பாடவந்தேன் அவன் எல்லையிலே
திங்களும் ஆட சூலமும் ஆட
விரிசடை மீதொரு கங்கையும் ஆட ஆடு

உலகெனும் மாபெரும் மேடையிட்டான் – அதில்
உயிர்களை எல்லாம் ஆடவிட்டான்
அசைந்திடும் மரம் செடி கொடிகளிலே
அந்த அம்பலத்தரசன் ஆடுகின்றான் ஆடு

தந்தையும் தாயும் போல் அவனிருப்பான்
ஒரு தந்தையும் தாயும் அவனுக்கில்லை
அந் நாள் தொடங்கி இந் நாள் வரையில்
ஆடிய ஆட்டம் முடியவில்லை ஆடு

பிட்டுக்கு ஏனோ ஆசைகொண்டான்
பிரம்படி தனையே தாங்கிக் கொண்டான்
மண்ணைப் படைத்தவன் மண் சுமந்தான்
அது மதுரையில் ஆடிய ஆட்டமன்றோ ! ஆடு

## சித்தமெல்லாம் எனக்கு சிவமயமே!

சித்தம் எல்லாம் எனக்கு சிவமயமே – உன்னை
சேவித்த கரங்களுக்கு இல்லை பயமே சித்தம்

அத்தனில்லாமல் ஒரு அம்மையில்லை அந்த
அம்மையில்லாமல் இந்தப் பிள்ளையில்லை சித்தம்

பக்திப் பெருக்கில் எந்தன் ஊன் உருக – அந்த
பரவசத்தில் உள்ளே உயிர் உருக
சக்தி எல்லாம் திரண்டு சிவம் பெருக
எந்தன் சந்ததியே உந்தனுக்கு அடிபணிய இறைவா!
சித்தம்

கண்ணைத் திறந்துவைத்த பரம் பொருளே
கோவில் கதவைத் திறந்தழைத்த திருவருளே
வெண்ணை நல்லூர் உறையும் அருட்கடலே வந்து
என்னை என்றும் ஆளுகின்ற பரம் பொருளே
இறைவா! சித்தம்

## *செஞ்சடைப் பொன்மேனியே!*

ஓம் நமச்சிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!
இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்கா தான் தாள்
வாழ்க!

ஈசனடி! போற்றி! எந்தை அடி போற்றி!
சிவன் சேவடி போற்றி !
தென்னாடு உடைய சிவனே போற்றி !
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !

செஞ்சடை பொன் மேனியே உன் சீர் பெறும் விடை
ஊர்த்தியே தஞ்சையிலே கண்டேன் அப்பா – நான்
தஞ்சையிலே கண்டேன் அப்பா !

ஆவுடையார் மீது பெருவுடை யாராய் நீ !
அமர்ந்திடும் திருக்கோலமே வானோடு உறவாடும்
மாபெரும் திருக்கோவில் மேவிடும் சிவலிங்கமே புகழ்
காவிரி கரை லிங்கமே ! செஞ்சடை

தமிழுக்குள் திருலிங்க வடிவினில் தான் தோன்றி
தழைத்தது நீயல்லவோ எளியவர் மன வீட்டில்
ஒளி தரும் சுடர் ஏற்றி உலவிடும் தாயல்லவா
நான் உனக்கொரு சேயல்லவா செஞ்கடை

## மந்திரமாவது நீறு!

மந்திரமாவது நீறு ! வானவர் மேலது நீறு !
சுந்திரமாவது நீறு ! துதிக்கப்படுவது நீறு !
தந்திரமாவது நீறு ! சமயத்தில் உள்ளது நீறு !
செந்துயர்வாய் உமைபங்கன் திரு ஆலவாய
திருநீறே!

ஆலவாய் அழகனே – ஓம்
ஐந்தெழுத்தின் அரசனே
மாமதுரை தெய்வமே – என்
மனம் நிறைந்த செல்வமே (ஆலவாய்)

நமச்சிவாய மந்திரம் – என்றும்
நமக்கும் வெள்ளி அம்பலம் விளங்கும்
இந்தக் கூடலில் உன் விளையாடல் கொஞ்சமா
(ஆலவாய்)

மீனாட்சி துணைவனே மணிமிடறு
கொண்ட இறைவனே சொக்கலிங்க
சுந்தரா எங்கள் சோம சுந்தரேஸ்வரா! (ஆலவாய்)

## *பக்தி எனும் படிகளேறி*

பக்தி என்னும் படிகளேறி கோவிந்தா
உன் பாத பூஜை செய்ய வந்தேன் கோவிந்தா
சக்தியுள்ள ஆண்டவனே கோவிந்தா
உன் சந்நிதியாம் திருமலையில் அபயம் தா (பக்தி)

வான்மேகம் தவழ்ந்திடும் மலை கோவிந்தா
குளிர்வாடை வந்து தழுவிடும் மலை கோவிந்தா
வேங்கடத்தின் ஈஸ்வரனே கோவிந்தா ! உன்
வீடு தேடி வருவோர்க்கு எல்லாம் தா! இன்பம் தா!
(பக்தி)

கண்டு கொண்டேன் தரிசனங்கள் கோவிந்தா
நித்ய கல்யாண மூர்த்தியும் நீ கோவிந்தா
சீர் மணக்கும் ஏழுமலை கோவிந்தா ஆதி
சேஷனென்று தொழுவோர்க்கு எல்லாம் தா
இன்பம்தா (பக்தி)

காணிக்கை செலுத்தி விட்டேன் கோவிந்தா இந்த
கலியுகத்தின் கடவுள் நீயே கோவிந்தா
கோரிக்கை முடித்து வைத்தாய் கோவிந்தா ! வந்து
கூடும் அன்பர் வாழ்வினில் நலம் என்றும் தா (பக்தி)

## பல்லாண்டு பல்லாண்டு

பல்லாண்டு பல்லாண்டு பாடுங்களேன்
அந்த பரந்தாமன் ஆலயத்தை நாடுங்களேன்
என்னாளும் அவன் நாமம் சொல்லுங்களேன்
இல்லை இல்லை என்போரை வெல்லுங்களேன(2)
(பல்லா)

இளவேனில் காலத்து பு பங்களே
எங்கள் யமுனா நதி கண்ணன் நயணங்களே
தொடுவானில் தவழ்கின்ற மேகங்களே
எங்கள் துவாரகை மாமன்னன் ரூபங்களே (2)
(பல்லா)

பாம்பனையில் பாற்கடலில் துயில்கின்றவன்
பக்தர்களின் குரல் கேட்டு எழுகின்றவன்
ஓர் நொடியும் உறங்காமல் உழைக்கின்றவன்
உலகத்தை போல் தினமும் சுழல்கின்றவன் (2)
(பல்லா)

## திருப்பதி மலைவாசா!

திருப்பதி மலைவாசா வெங்கடேசா !
திருவடியருள் நேசா ப்ரகாசா (திரு)
கோரிக்கை நிறைவேற்றி கொண்டாடும்
தொண்டருக்கு குறைவில்லா
வாழ்வு தரும் கோவிந்தா (திரு)

அலர் மேவும் மங்கை மகிழும் மணவாளா !
அடியவர் இதயம் கமழும் குணசீலா !
மலர் கமல பாதம் மறவா அருள் தா
மாதவனே ஸ்ரீனிவாசனே வருவாய் (திருப்பதி)

## ஓம் நமோ நாராயணாய!

ஓம் நமோ நாராயணாய ! ஓம் நமோ நாராயணாய !
ஓம் நமோ நாராயணாய ! ஓம் நமோ நாராயணாய !
சர்வ லோக சாஷியாகி சகல வேத சாரமாகி
சகல யோக சித்தியாகி நின்ற மூர்த்தியே
சகல தத்து வங்களாகி பரம ஞான வித்தையாகி
சகல சப்த வடிவமாகி வந்தமூர்த்தியே

அருண சகுண நிலையிலாகி அசர சரச விபாகமாகி
அதிலுமாகி இதிலுமாகி அமைந்த மூர்த்தியே
அனுவுளே அகண்டமாட அனுவினால் அனைத்துமாட
அமரநாத வடிவிலாகும் அருண மூர்த்தியே (ஓம்)

எனது நான் எனச் செருக்கி மமதையுற்றலைந்த
என்னை
இனியனாக்கி இணைய வைத்த இன்பமூர்த்தியே
எனதுள்ளத்து உனது நாமம் எழுதிவைத்து நடனம்
செய்து
ஏகமாய் எனைக் கலைந்த யோக பூர்த்தியே (ஓம்)

படியெலாம் கடத்த சுத்த ப்ரம்மவஸ்துவாயிருந்தும்
பஜனையில் மகிழ்ந்து தோன்றும் கருணை மூர்த்தியே
ஒரு கணத்தில் எனதுள்ளத்தை உருகச் செய்த
உனது
நாமம் ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நமோ!
(ஓம்)

## மாருதிராயா!

மாருதிராய வானர காயா! நமி தோ மீ பாயா!
ஸ்ரீராமாசே பஜன கரீதோ! தே மஜ குண காயா!
ராம லக்ஷ்மண பரத சத்ருகன! கைவாரீ ஹனுமான்
அயோத் யாசே ராஜ்ய க்ரீதோ! தேயக ஸ்ரீ பகவான்
ராம ஜானகிக் ரு ண பை மீகி ! ராதே கோவிந்தா
ஹரே ராமா ஹரே ராமா! ரகுமாயி பாண்டுரங்கா!

## மங்கள ரூபினி மணிமேகலை

மங்கள ரூபினி மணி மேகலை (2)
திருமாலின் துணைவி மகாலட்சுமியே (மங்கள)

தங்கம் உனது நிறம் தாமரை வில்வம் பழம்
தங்கும் கரத்தவளே எங்கும் நிறைந்தவளே (மங்)

ஒன்பது நாட்களிலே ஒரு மூன்று நாட்கள்
உனக்கே உரியதம்மா எனக்கருள் செய்வாய்
அன்பும் அருளும் மன அமைதியும் தருபவளே
ஆங்கிரசன் தவத்தின் அருமை அறிந்தவளே (மங்)

மன்னன் சுகேசன்தனை மகிழ்வுற செய்தவளே
மனைவி சுகேதி மகள் மகிழ்ச்சிக் குரியவளே
பொன்னும் மணியும் பெரும் பொருளும் தருபவளே
பூரணி ! திருமதி நாராயணியே !

## ஆதிலட்சுமி தேவிக்கு

ஆதிலட்சுமிதேவிக்கு அழகாய் விளக்கேற்றி
பஞ்சுதிரி போட்டு பசும் நெய்தனை ஊற்றி
குங்குமத்தில் பொட்டிட்டு கோல மஞ்சள்
தானுமிட்டு பூமாலை சூடி வைத்து பூஜிப்போம்
உன்னைத் திருமகளே ஏஏஏஏ...

திருவிளக்கை ஏற்றி வைப்போம்
திரு மகளே வருக குலம் விளங்க
எங்கள் வீட்டில் கொலுவிருக்க வருக
அலைமகளே வருக ஐஸ்வர்யம் தருக (2) (திருவள)

வாசலிலே மாக்கோலம்
வீட்டினிலே லக்ஷ்மிகரம்
நெற்றியிலே ஸ்ரீசூர்ணம்
நெஞ்சினிலே லக்ஷ்மீகரம்
அம்மா நீ ஆதரித்தால்
அகிலமெல்லாம் இன்பமயம்
அ டமா சித்தியுடன் லோகமெல்லாம்
க்ஷேம மயம் (2) (திருவிள)

மாவிலையும் தோரணமும் மங்களத்தின்
அடையாளம் ஊதுபத்தி எரிவதனால்
உள்ளத்திலும் ஒரு வாசம்
அம்மா நீ அருள் புரிந்தால்
அகில[illegible]மல்லாம் அலங்காரம்
அன்ற[illegible]ம் பாடிடுவோம்
அ டலக்ஷ்மி திருநாமம் (2)
சங்கு சக்ர தாரி நமஸ்காரம்
சகல வீரம் தருவாய் நமஸ்காரம்
பத்ம பீட தேவி நமஸ்காரம்
பக்தர் தம்மை காப்பாய நமஸ்காரம் !

## நவராத்திரி நாயகியே!

நவராத்திரி நாயகியே புவனேஸ்வரி
வந்து நலங்கோடி அருள்வாயே பரமேஸ்வரி
தஞ்சம் என்று வருவோர்க்கு
தர்மஸம்வர்த்தினி தடையாவும்
வெல்வதிலே மகிஷா சுரமர்த்தினி (நவ)

உள்ளம் என்னும் கோவிலிலே ஓர்
பூஜை மண்டபம் ஓயாமல் ஒலிக்கும்
உன் வேத மந்திரம் ஒரு கோடி தீபம்
கொண்டு அலங்காரமாய் உன் திருப்பாதம்
சரண் அடைந்தால் மவர் சேரும் ! (2) (நவ)

பதினெட்டு கரங்கள் உந்தன் பரிவாரமே
ஒரு பகை என்றால் தாவி வந்து துணையாகுமே
மாயங்கள் யாவும் உந்தன் அவதாரமே
எங்கள் மாங்கல்யம் காப்பது உன் திரிசூலமே (2)
(நவ)

முத்து மணி வடமும் வைரமணிச் சரமும்
நித்தம் நித்தம் தரும் ஸ்ரீதேவி
கண்கள் ஆயிரமும் கையில் ஆயுதமும்
ஏந்திய தாயே ஓங்காளி !

சங்கு சக்கரமுடன் சிங்க வாகனத்தில்
வெற்றி பவனி வரும் ஜெயதேவி!
உந்தன் திருவடியை நெஞ்சில் பதிப்பவர்க்கு
என்றும் துணை இருப்பாள் திரிசூலி (நவ)

## தீப ஜோதியாய் வருவாய்

தீப ஜோதியாய் வருவாய் (2)
திருமகளே பொருள் தரும் மகளே (1) அம்பா

உனதருள் இல்லையேல் உலகும்
உலக வாழ்வும் கொடும் நரகம்
தனதான்ய சௌபாக்யமும் தருவாள்
திருமகளே பொருள்தரும் மகளே (அம்பா தீப)

செந்தாமரை வளர் ஒளியே அம்பா
ஐயன் திரு மார்பினுள் ஒளியே
என்தாய் நினதருள் வாழ்க வாழ்கவென்று
திருமகளே பொருள் தரும் மகளே (அம்பா தீப)

பாற் கடலில் உதித்த பொற்கொடியே அம்பா (2)
பார்வை பட்டோர்க்கு எளிதாம்
சேர்ந்த பின்பும் ஒரு செல்வமும் தருவாய்
திருமகளே பொருள்தரும் மகளே (அம்பா தீப)

தோகை நினதருள் ஒளியாய் நான்
தொட்டதனைத்தும் துலங்கும்
போக போக சிவ வாழ்க்கையும் தருவாய்
திருமகளே பொருள் தரும் மகளே – (அம்பா தீப)

## செந்தாமரையில் அமர்ந்தவளே!

செந்தாமரையில் அமர்ந்தவளே நின்தாள்
பணிந்தேன் பூமகளே
திருமகளே உன் திருவருளே பொருள்தரும்
புகழ் தரும் வாழ்வினிலே (செந்)

வாசல்கள் தோறும் கோலங்கள் போடவரும்
லட்சுமி வரலட்சுமி
வீடுகள் தோறும் விஜயம் செய்யும்
ஜெயலட்சுமி விஜயலட்சுமி (செந்)

நவராத்திரியில் ஒளி தரும் லட்சமி
நவதான்யம் தரும் தான்ய லட்சுமி
நல்லவை நடைபெற துணிவை துணையாய்
நாளும் வழங்கிடும் வீரலட்சுமி (செந்)

சந்தான பாக்யம் சகல சௌபாக்யம்
தந்தாளும் தனலட்சுமி
சந்தான லட்சுமி ஆதிலெட்சுமி நீ கஜலட்சுமி
அருள் தர வேண்டும் ஐஸ்வர்ய லட்சுமி
(செந்)

## தாமரைப் பூவில் அமர்ந்தவளே

தாமரைப் பூவில் அமர்ந்தவளே செந்தூர திலகம்
அணிந்தவளே செந்தாமரைப் பூவில் அமர்ந்தவளே
சிந்தையில் நின்றாடும் நாரணன் நெஞ்சினில்
நின்றவளே கருணையில் சிறந்தவளே (செந்)

சுந்தரி, பார்வதி, பாமகளும் சொந்தமுடன்
நினைக்கும் பூமகளே உன்பாதம் எந்நாளும்
தஞ்சம் திருமகளே அன்பர்களைக் காத்திடும்
அலைமகளே (செந்)

அலைகடலில் உதித்த ஆதிலட்சுமி தாயே
அமரர்கள் துதிபாடும் அமுதமும் நீயே
செல்வங்கள் பெருகும் உந்தன் திருஅருள்
துணையாலே
உலகமெல்லாம் உயரும் உன் அருள் மனத்தாலே
தாமரை

## மாணிக்க வீணைஏந்தும்

மாணிக்க வீணை ஏந்தும் மாதேவி கலைவாணி
தேன்தமிழ் சொல்லெடுத்து பாடவந்தோம் அம்மா (2)
அருள்வாய் நீ இசை தருவாய் நீ இங்கு
வருவாய் நீ லயம் தரும் வேணி அம்மா (மாணிக்க)

நாமணக்க பாடிநின்றால் ஞானம் வளர்ப்பாய்
பூமணக்கப் பூஜை செய்தால் பூவை நீ மகிழ்வாய்
(மாணிக்க)

வெள்ளைத் தாமரையில் வீற்றிருப்பாள் – எங்கள்
உள்ளக் கோவிலிலே உறைந்து நிற்பாய் (2)
கள்ளமில்லாமல் வரும் அன்பர்க்கே என்றும்
அள்ளி அறிவைத் தரும் அன்னையும் நீ
வாணி, சரஸ்வதி, மாதவி, பாரதி வாகீஸ்வரி மாலினி!
காணும்பொருளில் தோன்றி கலைமணி வேண்டும்
வரம் தரும் வேணி
நான்முகன் நாயகி மோகன ரூபிணி, நான்மறை
போற்றும் தேவி நீ
வான வளர்க்கமுதே தேன்மழை, சிந்தும்,
கானமனோகரி கல்யாணி அருள்வாய்

## நீயே கதி ஈஸ்வரி

நீயே கதி ஈஸ்வரி சிவகாமிதயாசாகரி !
எனக்கு நீயே கதி ஈஸ்வரி
மாயா உலகிலே ஓயாத துயராலே (2)
வாடாமலே ஒரு வழி காட்டவே எனக்கு (நீயே)

ஆவியே அமுதே ஆகமப் பொருளே !
அன்புடன் தாராயோ உன் திருவருளே
ஆவதும் அழிவதும் யாவும் உன்னாலே
அன்னையே பாராயோ என்னையும் கண்ணாலே
தீயவர் வாழவும் நல்லவர் தாழவும் செய்வதேனோ
இது தர்மம் தானோ அம்மா (நீயே)

## துங்கா நதிக்கரை ஓரத்திலே!

துங்கா நதிக்கரை ஓரத்திலே
சங்கரர் அமைத்த கோவிலிலே
தங்கியே சாரதை கொலுவிருப்பாள்
மங்களம் எங்கும் நிலவ வைப்பாள் (துங்கா)

கல்விக் கண்ணைத் திறப்பவளே
கனிவுடன் கருணை சுரப்பவளே
செல்வமும் புகழும் தருபவளே
சேவிப்பர் முன்னே வருபவளே (துங்கா)

அஞ்சுகம் ஜபமாலை அணிந்தவளே
அமுத கலசமும் கொண்டவளே
தஞ்சமடைந்தால் காப்பவளே – அன்பர்
நெஞ்சத்தில் என்றும் வாழ்பவளே (2) (துங்கா)

## வாணி அருள்வாய் நீ

வாணீ ! அருள்வாய் நீ ! மாணிக்க
வீணா மரகத மகுடதாரிணி (வாணீ)

காணும் இடமெல்லாம் நிறைந்தாய் நீ
கலைமாமணியாய்த் திகழ்ந்தாய் நீ
ஞானத்தின் வடிவாக நின்றாய் நீ
தேனினும் இனித்திடும் என்தாய் நீ (வாணீ)

செந்தாமரையில் இருப்பவள் நீ
சிந்தையில் எந்நாளும் இனிப்பாய் நீ
அருளும் பொருளும் தருபவள் நீ
ஹரியும் மகிழும் அலைமகள் நீ (வாணீ)

சிவகங்கை திருத்தலத்தில் அமர்ந்தவள் நீ
சிவனுடன் திருநடனம் புரிந்தவள் நீ
அவனி எல்லாம் போற்றும் அன்னையும் நீ
கனக துர்கை அம்மா கருணை புரிவாய் நீ (வாணீ)

## கலைவாணி நின் கருணை!

கலைவாணி ! நின் கருணை தேன்மழையே
விளையாடும் என்நாவில் செந்தமிழே
அலங்கார தேவதையே வணிதாமணி இசை
கலையாவும் தந்தருள்வாய் கலைமாமணி (கலை)

மரகதவளைக் கரங்கள் மாணிக்கவீணை தாங்கும்
அருள் ஞான சக்கரம் ஒன்றில் ஜபமாலை விளங்கும்
ஸ்ருதியோடு லய பாவ ஸ்வர ஞானம்
சரஸ்வதி மாதா ! உன் வீணையில் எழும் கானம்
(கலை)

வீணையில் எழும் நாதம் தேவி உன் சுப்ரபாதம்
வேணுவில் வரும் கானம்
வாணி உன் சக்ரவாகம் வானமும் வையமும்
உன் புகழ்பாடும்
வேண்டினேன் உனைப்பாட தருவாய் சங்கீதம் (கலை)

## கண் திறந்து பார்க்கும்

கண் திறந்து பார்க்கும் அருள் தெய்வம்
நீயம்மா இந்த மண்ணில் உன்னை மறவாத
வரம் வேண்டும் ! அம்மா வரவேண்டும் !
கருணை நிதிவேண்டும் ! (கண்)
நீ தரவேண்டும் ! நான் பெறவேண்டும் !

விண்ணவர்க்கும் நீ விருந்தல்லவோ !
மாரியம்மா உன் திருச் சாம்பல் மருந்தல்லவோ !
கருணை முகம் என்றும் காண வேண்டும் உன்
அருளாலே என் வாழ்வு மலர வேண்டும் (கண்)

கருநாகமாய் நீ உருமாறினாய் திருவேற்காட்டில்
ஒளிகொண்டு சுடராகினாய் ! அருமறைப்
பொருளானாய்
சிவச[illegible]கருமாரி ! அருளாளே என்வாழ்வு
மலரவேண்டும்
உன் அருளாலே என் வாழ்வு மலர வேண்டும்
வரவேண்டும் ! கருணைநிதி வேண்டும் !
நீ தரவேண்டும் நான் பெறவேண்டும் ! (கண்)

## வெள்ளிக்கிழமை மாரியம்மன்

வெள்ளிக்கிழமை மாரியம்மன் கோவிலுக்கு வாருங்கள்
விளக்கேற்றி பொங்கலிட்டு வேண்டுதலைக் கூறுங்கள்
எல்லார்க்கும் எல்லாமும் உண்டாகும்
எந்நாளும் நம் வாழ்வு நன்றாகும் (வெள்ளி)

வேப்பிலையின் மணம் பரவும் வேற்காட்டில் வாழ்பவள்
வெண்ணீற்று மருந்தளிக்கும் சமயபுரத் தாயவள்
கேட்டபோது கோடைமாற்றி மழைபொழியச் செய்பவள்
காற்றில் கூட தீமை வந்தால் கண் அசைத்து உய்ப்பவள்
பொன் போலே காப்பாளே பொன்னாத்தா !
கண் பார்த்தா போதாதோ கண்ணாத்தா ! (வெள்ளி)

கும்பிடுவோர் மனம் குளிர பன்னாரி வந்தவள்
குறை தீர்த்து நலம் வளர்க்க ஆலங்காட்டில் நிற்பவள்
கொடியை ஏற்றி கூறுவோர்க்கு தொண்டர் முகம் காண்பவள்
தீ மிதிக்கும் திருவிழாவில் நெருப்பில் நின்று காப்பவள்
அம்மம்மா மாகாளி ஓம்காரி !
அன்பாலே கொட்டாதோ பொன்மாரி (வெள்ளி)

## கருணையுள்ள மாரியம்மா!

கருணையுள்ள மாரிபம்மா கருமாரி
கடைக்கண் திறந்து வழங்கிடுவாள் அருள்மாரி
(கருணை)

மாரியே உன் வாசலிலே மண்ணெல்லாம் திருநீறு
கருமாரியே உன் அருளாலே தேடிவரும் பெரும் பேறு
தேடிவரும் பெருபேறு ! (கருணை)

நான் பாடும் பாட்டினிலே நடமாடும் தாயே
நல்லதெல்லாம் நடத்தி வைக்கும் சக்தியெல்லாம் நீயே!
உலகோரை மகிழ்விக்க பாடுகின்ற பாட்டு
ஒவ்வொன்றும் உன்னுடைய அன்பு விளையாட்டு!
(கருணை)

பூ விரியும் புன்னகையில் தேவி முகம் மின்னும்
தேவி முக தரிசனத்தைக் கண்ட மனம் துள்ளும் !
தினந்தோறும் உன்னை நாடி பக்தர் வந்து கூடும்
திருவேற்காடு அது உன்னுடைய வீடு ! (கருணை)

## தாய்வீடு சமயபுரம்!

தாய்வீடு சமயபுரம்
தண்ணருள் சேர் கண்ணபுரம்
கோவிலென்றும் கோட்டை என்றும்
கோலம் தரும் காளிபுரம் (தாய்)

காப்பதற்கே அமைந்த இடம்
கைதொழுவார் திரளும் இடம்
வேப்பிலையால் வேலிகட்டி வினைகள்
எல்லாம் தீர்க்கும் இடம் (2)

பகையடக்க வரும் நீலி
பண்புமிகும் மலைச் செல்வி
வகையறிந்து உயிர்களுக்கு
வழிகாட்டும் மகமாயி (2)
எட்டு திசை மணம் பரவ
இடும் நீறு உயர் மருந்து
பட்டினியாய் நோன்பிருந்து
பபன் வழங்கும் தவக்கொழுந்து (2)

## மாரி முத்துமாரி!

மாரி முத்துமாரி
முத்துக்கவி மழைபொழியும்
முக்கனி உமையே முத்துமாரி!
தஞ்சம் புகுந்தேன் உன்னை
ரஞ்சனியே தஞ்சை முத்துமாரி

சூரியன் முதல் வானவர் புகழ் சூலி !
திரிசூலி ! எந்தகாரியத்தையும்
கணத்தில் முடிக்கும் கருணாகரி !
புவனேஸ்வரி மகமாயி முத்துமாரி

தித்திக்கும் நாமத்தை தினமும் சொல்வேன்
சக்தி உந்தன் பதம் பற்றிக் கொள்வேன்
நித்தமும் உந்தன் ஆலயம்வருவேன்
உத்தமியே உந்தன் அருளைப் பெறுவேன் (மாரி)

பால்குடம் எடுத்து பக்தர்கள் வருவார்
தாள் மலர் பணிந்து சரணடைவார் மாகாளி
உன் மகிமையை பாடிடுவார் எந்த காலத்திலும்
எம்மைக் காத்திட வருவாய் தாயே

## ஆயிரம் இதழ் கொண்ட தாமரைப் பூ

ஆயிரம் இதழ் கொண்ட தாமரைப் பூ எங்கள் தேவி முகம்
அந்த ஆதிசக்தி கருமாரி ஆலயம் வாழ்வு தரும்
மங்கையரெல்லாம் போற்றி வணங்கும் மங்கலச் செல்வம் அந்த
குங்குமத்தாலே அள்ளிக் கொடுக்கும் கலியுக தெய்வம்
(ஆயிரம்)

ஆனி மறைந்து ஆடி பிறந்ததும் கண் மலரும் கருமாரியம்மனின்
அருள் மழையாலே மண் குளிரும் முன்னை
வினைகளை ஓடிடச் செய்யும் அன்னையின் தீர்ப்பு – அவள்
முத்து கரங்களில் சூட்டி மகிழ்வோம் சந்தனக் காப்பு
(ஆயிரம்)

நதியாய் பாயும் பன்னீராலே அபிஷேகம்
தினம் நாற்பது கோடி நறுமலராலே அலங்காரம்

தங்க ரதத்தில் அம்மன் அமர்ந்து ஊர்கோலம்
அவள் தரிசனம் கண்டு துதிப்பவர்க்கெல்லாம்
நலம் சேரும் ! கலியுக தெய்வம் கருமாரி ! (ஆயிரம்)

## வெற்றிக்கு அருள்வாய்!

வெற்றிக்கே அருள்வாய் அம்மா – திரு
வேற்காட்டில் அரசாளும் கருமாரியம்மா (வெற்)
சுற்றி வலம் வந்தோம் சரணம் உனக்கென்றோம்
பெற்றவளே தாயே பெருமைக்கெல்லாம் நீயே (வெற்)

நீராகி நிலவாகி வானாகி காற்றாகி
ஞானக் கதிராகி நாத இசை பாடும்
நாராயணி கௌரி சங்கரி சம்பூரணியே
நாவாரப் பாடுகையில் பூவாரம் சூடுதம்மா ! வெற்

## ஆதி பரமேஸ்வரியின் ஆலயமே!

ஆதி பரமேஸ்வரியின் ஆலயமே வேற்காடு
அன்னை அவள் திருப்புகழை தினம் தினம் நீ பாடு
(ஆதி)

குங்குமத்தில் கோயில் கொண்டு
தெய்வமாய்க் குடியிருப்பாள்
மங்கையர்க்குத் திலகமிட்டு
அன்னையாய் துணையிருப்பாள்
மங்கலமே வடிவாக மாதரசி வீற்றிருப்பாள்
மங்காத நிலவாகி எந்நாளும் ஒளி கொடுப்பாள்!
எந்நாளும் ஒளி கொடுப்பாள் (ஆதி)

அன்னையிடம் நாகம் வந்து
பக்தியாய்க் குடை பிடிக்கும்
அபிஷேகப் பால்மழையில்
தேவியவள் மனங்களிக்கும்
நம்பி வரும் எல்லார்க்கும்
நல்லதொரு வழிபிறக்கும்
நாயகி திருவருளே பொன்னான வாழ்வளிக்கும்
பொன்னான வாழ்வளிக்கும் ! (ஆதி)

வேற்காட்டு திருத்தலமே
வந்தவர்க்கு புகழ்கொடுக்கும்
வெற்றி தரும் திருச் சாம்பல்
கொண்டவர்க்கு பலன் கிடைக்கும்
கருமாரி திருப்பதமே வேண்டி வந்தால்
வரங்கொடுக்கும்
கற்பூர ஜோதியிலே எந்நாளும் அருள் கிடைக்கும்
எந்நாளும் அருள் கிடைக்கும் (ஆதி)

## தில்லையிலே நடனமாடி

தில்லையிலே நடனமாடி திருவேற்காடமர்ந்தவளே
தீராத வினைகளெல்லாம் தீர்த்துவைக்கும்
தேவியம்மா – அம்மா தில்லை
கையிலே உடுக்கையம்மா கண்களிலே கருணையம்மா
பச்சையிலைக் காரியம்மா பம்பைக்கு நீ ராணியம்மா
(தில்லை)

கண்ணபுரம் நாடி வந்தேன் ! கருமாரி உன்னைத் தேடி
தேவி உன்னைக் காண வந்தேன் ! தென்னகத்து
ராணியம்மா !
திரு ஆரூர் அமர்ந்தவளாம் ஆயனார் சகோதரியாம்
ஆதி சிவன் தேவியவள் அன்னை முத்துமாரியம்மா !
(தில்லை)

## ஆதிசக்தி நீயம்மா!

ஆதிசக்தி நீயம்மா – அருள்
வழங்கும் தேவியம்மா
மேதினியில் வாழுபவர்
போற்றும் கருமாரியம்மா

விண்ணும் மண்ணும் காப்பவள் நீ
வேண்டும் வரந்தருபவள் நீ
எண்ணத்திலே குடிவைத்தோர்
இதயத்திலே வாழ்பவள் நீ

கந்தனுக்கு வேல் கொடுத்தாய்
கருநாக வடிவெடுத்தாய்
வந்து உன்னைச் சரணடைந்தால்
வளமான வாழ்வளிப்பாய் (ஆதி)

## தேடி உன்னைச்சரணடைந்தேன்

தேடி உன்னைச் சரணடைந்தேன் தேச முத்துமாரி
கேடதனை நீக்கிடுவாய் கேட்ட வரம் தருவாய்
பாடியுனைச் சரணடைந்தேன் பாசமெல்லாம் களைவாய்
கோடி நலஞ் செய்திடுவாய் குறைகளெல்லாம் தீர்ப்பாய்

எப்பொழுதுங் கவலையிலே இணங்கி நிற்பான் பாவி
ஒப்பியுன தேவல் செய்வேன் உனதருளால் வாழ்வேன்
சக்தியென்று நேரமெல்லாந் தமிழ் கவிதை பாடி
பக்தியுடன் போற்றி நின்றால் பயமனைத்தும் தீரும்

ஆதா[illegible]சக்தியென்றே அருமறைகள் கூறும்
யாதனுந் தொழில் புரிவோம் யாதுமவள் தொழிலாம்
துன்பமே இயற்கையென்னும் சொல்லை மறந்திடுவோம்
இன்பமே வேண்டி நிற்போம் யாவுமவள் தருவாள்
நம்பினோர் கெடுவதில்லை நான்கு மறை தீர்ப்பு
அம்பிகையை சரணடைந்தால் அதிகம் வரம் பெறலாம்

## திருவேற்காடுடையாள்

திருவேற்காடுடையாள் தேவியெனும் பேருடையாள்
மன்னுயிரைக் காப்பதற்கு மண்ணிலே
பிறப்பெடுத்தாள்(2) (திரு)

காக்கும் கரமுடையாள் கருணை முகம் படைத்தாள்
பார்க்கும் இடமெல்லாம் நீக்கமற நிறைந்திருப்பாள்
தாயானமாரியவள் தானாக வந்திடுவாள்
ஆயிரங் கண்களாலே அருளை வழங்கிடுவாள் (2)
(திரு)

பொங்கி வரும் அலைகளிலே புன்னகை செய்திடுவாள்
குங்குமத்தில் மங்கலமாய்க் குடிபுகுந்து வாழ்த்திடுவாள்
கருமாரி அம்மனது திருநாமம் சொல்வார்க்கு (2)
திரிசூலம் துணையாகும் தேடிவரும் நலம் யாவும் (2)
(திரு)

## தங்கரதம் பவனி வரும்

தங்கரதம் பவனி வரும் திருவேற்காடு
தங்க ரதம் பவனி வரும் திருவேற்காடு

அது பொங்கி வரும் கருமாரி
அன்னையின் வீடு திருவேற்காடு
நம் அன்னையின் வீடு
மாவிளக்கு ஏற்றி வைத்தால் மணிவிளக்காய்
ஒளிதருவாள் அவள்
கோவிலுக்கு வருபவரை குலம் தழைக்க செய்திடுவாள்
மஞ்சள் குங்குமத்தில் மாதரசி வாழ்கின்றாள்
தஞ்சமென சரண் அடைந்தால் மகராசி அருள்
தருவாள் (திரு)

தாலாட்டு பாடலுக்கு தலையாட்டும் சேய் ஆவாள்
கருணை என்னும் பாலூட்டி காப்பதிலே தாயாவாள்
ஊர் மாரி பேர்மாரி உலகாளும் கருமாரி
தேர் ஏறி வருகின்றாள் திருக்காட்சி தருகின்றாள்
(திரு)

ஓங்கார ஒசையிலே உருவான தேவியவள்
கை கூப்பி வரும்போது கற்பூர ஜோதியவள்
ஸ்ரீதேவி கோவிலிலே நாள்தோறும் அபிஷேகம்
திருவீதி வலம் வந்தால் திரிசூலம் அருள் கூறும்(திரு)

## ஜெகத் ஜெனனீஜெகன் மாதா!

ஜெகத் ஜனனீ ஜகன் மாதா
வாணி சரஸ்வதி வாக்கு தேவி (அம்மா)

காஞ்சியிலே நீ காமாட்சி
காசிதனில் நீ விசாலாட்சி (அம்மா)

மாமதுராபுரி மீனாட்சி
அகிலம் முழுவதும் உனதாட்சி (அம்மா)

சைதையிலே நீ கடம் பாடி
மயிலையிலே நீ கற்பகமே (அம்மா)

மாமலையிலே நீ மஞ்ச மாதா
செங்கனூர் வாழும் பகவதி நீ (அம்மா)

நெல்லையிலே நீ காந்திமதி
வானத்திலே நீ பூர்ணமதி (அம்மா)

தில்லையிலே நீ சிவகாமி
திருக்கடவூரில் அபிராமி (அம்மா)

கொல்லூரிலே நீ மூகாம்பிகே
கூடல் மதுரையிலே மீனாம்பிகே (அம்மா)

திருவொற்றியூரிலே வடிவாம்பிகே
திருவருள் தருவாய் உமயாம்பிகே (அம்மா)

ஆனைக் காவலிலே அகிலாண்டேஸ்வரி
திரிசூலத்திலே திரிபுர சுந்தரி (அம்மா)

நங்க நல்லூரிலே இராஜேஸ்வரி
ஆண்டாள் நகரிலே புவனேஸ்வரி (அம்மா)

நலம் தரும் நாக முத்துமாரி
நன்மை அளிப்பாள் நாராயணியே (அம்மா)

துன்பம் தீர்ப்பாள் துர்காம்பிகே
துணையாய் வருவாள் கமலாம்பிகே (அம்மா)

திருக்கோகர்ணம் தனில் ப்ரகதாம்பாள்
திருவருள் புரியும் தேவியும் நீயே (அம்மா)

பிருந்தாவன் நகர் தனில் ஞானாம்பிகை
பேரருள் தருவாய் ஆதிசக்தி (அம்மா)

## முத்தான முத்துக்குமரி!

முத்தான முத்துக்குமரி துர்கையே நீ வா ! வா!
சித்தாடும் செல்வக் குமரி சிந்தை மகிழ வா! வா !
நீயாடும் அழகைக் கண்டு சூலம் ஆடி வருகுதம்மா
சூலமாடும் அழகைக் கண்டு சிம்மம் ஆடி வருகுதம்மா
சிம்மம் ஆடும் அழகைக் கண்டு மனம் ஆடி வருகுதம்மா
மனம் ஆடும் அழகைக் கண்டு மக்கள் கூட்டம்
பெருகுதம்மா (முத்தான)

முடிசூட்டி கொண்டையிட்டு துர்கையே உந்தனுக்கு
மனமுள்ள மலர் சூட்டி மையிட்டு பொட்டிட்டு
கம்மலுடன் ஜிமிக்கையை காதுகளில் மாட்டி
முன்னழகும் பின்னழகும் நான் பார்த்துவிட்டு
மகிழ்ந்திடுவேன் (முத்தான)

கல் வைத்த மோதிரமும் கைகளிலே வளையல் இட்டு
கழுத்தில் அணிவதற்கு பு பராக மாலையோடு
தங்கத்தால் செய்த தோடு நவரத்தின கிரீடம் வைத்து
சிவப்பு வர்ண பட்டு உடுத்தி நான் கண்டு
மகிழ்ந்திடுவேன் (முத்தான)

இடுப்பிலே உன்னைத் தூக்கி தேரோட்டம்
காட்டிடுவேன்
கால் கொலுசு கிலுகிலுக்க கையெடுத்து
நடத்திடுவேன்
தவழ்ந்து விளையாடிய பின்னர் தள்ளாடி நடக்கையிலே
தூளியிலே தூங்கவைத்து தாலாட்டு பாடிடுவேன்
(முத்தான)

## ஆராரோ ஆரிராரோ!

ஆராரோ ஆரிராரோ !
தெய்வத்தன்மை ஆன மலை

தெய்வத் தன்மை ஆனமலை
தேன்தினை வழங்கும் மலை
தங்கரதம் ஓடும் மலை – அருளன்புடன்
தண்டபாணி வாழும் மலை அன்புடன்
தண்டபாணி வாழும் மலை

கல்லால் ஆன மலை
காவடிகள் ஆடும் மலை
காவடிகள் எடுத்தவர்கள்–கந்தையா
கவலைகள் போக்கும் மலை–கந்தையா
கவலைகள் போக்கும் மலை

பக்தர்கள் ஒன்றுகூடி பாடிஆடி வலம் வந்தால்
பழம் ஒன்று தந்திடுவாய் முருகையா
பழம் ஒன்ற தந்திடுவாய் முருகையா–ஞானப்
பழம் ஒன்று தந்திடுவாய்–பழனியில்
ஞானப்பழம் ஒன்று தந்திடுவாய்

பன்னீர்க் காவடி எடுத்து பண்புடனே ஓடிவந்தால்
கண்ணீரைத் துடைத்திடுவாய் சரவணா (2)
கர்மவினை போக்கிடுவாய்–சரவணா
கர்மவினை போக்கிடுவாய்

பால் அபிஷேகமுண்டு தேன் அபிஷேகமுண்டு
பஞ்சாமிர்த அபிஷேகமுண்டு – பழனியில்
பன்னீர் அபிஷேகமுண்டு – பழனியில்
பன்னீர் அபிஷேகமுண்டு

சந்தனமும் வெண்ணீறும் சாற்றி அலங்கரித்தால்
சாந்தமுடன் தோன்றுகின்றாய் சரவணா
சடாக்ஷரமானவனே – சரவணா சடாக்ஷர மானவனே
இத்தனை அபிஷேகம் செய்து ஏங்கியே
தவிக்கின்றோமே

இன்னமும் தாமதமா–சண்முகா
ஏழையைக் காத்தருள்வாள்–சண்முகா
ஏழையைக் காத்தருள்வாய்

## ஏழுமலை வாசா!

ஏழுமலை வாசா வெங்கடேசா
அன்பர் இதயந்தனில் வாழும் ஸ்ரீனிவாசா அருள்வாய்
(ஏழு)

சூழும் வினையகற்றி வாழும் நிலையருள
தோன்றிய தெய்வமென்று தொழும் அடியார் புகழ்
(ஏழு)

வேத நெறி உணர்ந்த விற்பன்னரும் மற்றும்
ஏதுமே அறியாத மானிடரும் இன்று
மேதினியில் உன்போல் தெய்வமில்லை என்று
மெய்யன்புடன் வணங்கும் அன்பர்க்கெல்லாம்
அருளும் (ஏழு)

## வருவாய் வருவாய் வை ணவி

வருவாய் வருவாய் வை ணவியே
வந்தருள் புரிவாய் வை ணவியே
அனுதினமும் வருவாய் வை ணவியே
அனுகிரஹம் செய்வாய் வை ணவியே

சரணமடைந்தோம் வை ணவியே
சௌபாக்ய மருள்வாய் வை ணவியே
வரமளித்தருள்வாய் வை ணவியே
வணக்கம் தாயே வந்தருள்வாய்

பாடி பணிந்தோம் வை ணவியே
பக்ஷமுடன் வா வை ணவியே–நாங்கள்
கூடித் துதிக்கின்றோம் வை ணவியே
குறைகளைத் தீர்ப்பாய் வை ணவியே
திருமுல்லை வாயிலைத் தேடிவந்தோம் – உன்
திருசன்னதி முன் கூடிநின்றோம்–உன்
திருப்புகழ் தன்னை பாடுகின்றோம்–உன்
திருவடி நாடி பணிகின்றோம்

## ஆனந்த வாழ்வு தரும்

ஜோதி லிங்கத்தை உன் சன்னதியில் கொண்ட ஆதி
சக்தியே மூகாம்பிகே
சொர்ண ரேகையில் மும்மூர்த்திகளை அமரச்
செய்தவளே மூகாம்பிகே
ஸ்ரீ சக்கரத்தில் அமர்ந்து அருள்புரியும் ஈஸ்வரியே
மூகாம்பிகே
ஸ்ரீமஹாலக்ஷ்மி துர்கை சரஸ்வதியும் ஒன்று சேர்ந்த
சக்தி வடிவமே மூகாம்பிகே

ஆனந்த வாழ்வுதரும் அருளாலயம் மூகாம்பிகே
உந்தன்
கருணாலயம் மாநகர் கொல்லூரில் பொன்னாலயம்
வைபம் கொண்டாடும் உன் ஆலயம் (ஆனந்த)

குடசாத்திரி மலை உனக்கு அரியாசனம்
அடியார்கள் வினைதீர்க்கும் அருளாசனம்
சௌவர்ணிகை நதியில் நீராடினோம் சௌபாக்யம்
தரும்
உந்தன் பதம் நாடினோம் (ஆனந்த)

ஆதிசங்கரரின் சௌந்தர்ய லஹரியும் அன்னை
கலைவாணி
நடன சிங்காரம் ! அலைமகள் ஆடிவரும் அலங்காரம்
அமரரும் புகழ்பாடும் சன்னிதானம் (ஆனந்த)

மூகாசுரனை அழித்தவளே மூகாம்பிகையாய்
நின்றவளே
கோல முனிவரின் கோரிக்கை ஏற்று கோவில் கொண்ட
கோமகளே
காலமெல்லாம் எனைக் காப்பவளே கமலாம்பிகையே
மலைமகளே
ஞாலம் போற்ற வந்தவளே
நாராயணியே உமையவளே ! (ஆனந்த)

## காட்சி தந்து என்னை

காட்சி தந்து என்னை ஆட்சிசெய்வாய் அம்மா
கல்யாணியே கற்பகமே—அற்புத (காட்சி)

மாட்சி எல்லாம் வாழ்வில் சேர்ந்திட கனிவுடன்
மன்றிலே நின்றாடும் அம்பல வாணருடன் (காட்சி)

அங்கம் ஒரு பாகமாய் அமைந்த என் தாயே
ஆனந்த மாமலையின் தேமதுரக்கனியே (2)
மங்கல குங்குமத்தில் மகிழ்ந்திடும் அம்மையே
மரகதமயில் உருவாம் தேவியே ! தவத்திரு (காட்சி)

## கடைக்கண் பார்வையிலே !

கடைக்கண் பார்வையிலே காமாட்சி
கருதும் நலம் தருவாள் காமாட்சி
விடையவன் இடச் செல்வம் காமாட்சி
வெற்றிக்கு சுடராகும் காமாட்சி (கடை)

பாத நிழல் வழங்கும் பாரிஜாதம் என்றும்
பக்தர்க்கு பரவசமே சுகநாதம்
வேத மந்திரங்கள் புகழ்கீதம்
விமலையின் திருமேனி ஜோதி பிரகாசம் (கடை)

ஜெய ஜெய சங்கர ஹர ஹர சங்கர (2)
காமகோடி நெஞ்சமெல்லாம் காமாட்சி
நாமத்திலே க்ஷேமம் தரும் காமாட்சி
பா மணக்கும் மனக் கோயில் காமாட்சி
நம்மை பாலூட்டி மகிழ்ந்தாளும் காமாட்சி (கடை)

காமாட்சி மாங்காடு தனில்
வாழும் காமாட்சி (2) (கடை)

## முத்து நகை சிந்தி வரும்

முத்துநகை சிந்தி வரும் பத்தினி தெய்வம் எழில்
மாங்காட்டில் கோவில் கொண்ட
குங்குமச் செல்வம் திருமங்கலச் செல்வம் (முத்து)

முத்தமிழ் தத்துவங்கள் கலைமகள் முழங்க
நல்ல சீர்வரிசை செல்வம் எல்லாம் திருமகள் வழங்க
பாதத்தில் வேதத்தின் கீதங்கள் இசைக்க
கொட்டு மேளங்களில் தாளங்களில் கோலங்கள்
துலங்க (முத்து)

சுடர் வீடும் கனல் மேலே தவம் இருக்கும் காமாட்சி
தொண்டர்களின் வாழ்வினிலே துணை இருக்கும்
அவள் ஆட்சி
அருளோடு புகழ் கொடுக்கும் அன்பான அரசாட்சி
பக்தியோடு சக்தி தரும் அழகான கண்காட்சி (முத்து)

ஆதி சிவன் மனம் இரங்க தவம் இருந்த தேவி
அவன் ஆணைப்படி மண் குவித்து பூஜை செய்த தேவி
காஞ்சிநகர் நாயகனை கைபிடித்த தேவி
நல்ல கருணையோடு உலகம் யாவும் காதல் செய்யும்
தேவி (முத்து)

## கருணை என்னும் அமுது

கருணை என்னும் அமுது படைக்கும்
கலியுக தெய்வம் அன்னபூரணி அவள்
திருவடி மலர்களை தொழுதால் போதும்
இசையாய் வருவாள் ராக வர்த்தினி (கருணை)

பரிமள பூங்கொடி அபிராமி திரு கடையூரில் ஒலி
கொடுத்தாள்
மீன் விழியாலே அருளை பொழிந்து அன்னை
மதுரையில் வாழ்கின்றாள்
சக்தி மாரியின் திருவேற்காட்டில் நலம்தர கோயில்
கொண்டாள்
உருவாகும் தேவி அவள் ஒளியூட்டும் தீபமவள்
(கருணை)

சமயபுரத்தாள் மகமாயி சாந்தியை வழங்கிட
அவதரித்தாள்
தர்மம் வாழ்ந்திடக் குமரி கரையிலே தவமாய்
வடிவெடுத்தாள்

மலையிலே அருள் கற்பகமாய் தினம் மங்கள வாழ்வளிப்பாள்
வழிகாட்டும் அன்னை அவள் வளம் சேர்க்கும் தெய்வமவள் (கருணை)

## ஸ்ரீ சக்கர ராஜ சிம்மாசனேஸ்வரி

ஸ்ரீ சக்ர ராஜ சிம்மாசனேஸ்வரி
ஸ்ரீ லலிதாம்பிகையே – புவனேஸ்வரி

ஆகம வேதகலா மயரூபிணி–அகில
சராசர ஜனனி நாராயணி–நாக கங்கண
நடராஜ மனோகரி, ஞானவித்யேஸ்வரி, ராஜ
ராஜேஸ்வரி (ஸ்ரீசக்ர)

பலவிதமாய் உன்னைப் பாடவும் ஆடவும்
பாடிக் கொண்டாடும் அன்பர் பதமலர் சூடவும்
உலகம் முழுவதும் என் அகமுறக் காணவும்
ஒருநிலை தருவாய் காஞ்சி காமேஸ்வரி (ஸ்ரீசக்ர)

உழன்று திரிந்த என்னை உத்தமனாக்கி வைத்தாய்
உயரிய பெரியோருடன் ஒன்றிடக் கூடி வைத்தாய்
நிழலெனத் தொடர்ந்த ஊழ் கொடுமையை நீங்க செய்தாய்
நித்திய கல்யாணி, பவானி, பத்மேஸ்வரி (ஸ்ரீ சக்ர)

துன்பக் குடத்திலிட்டு தூயவனாக்கி வைத்தாய்
தொடர்ந்த முன்மாயம் நீக்கி பிறந்த பயனை தந்தாய்
அன்பைக் பெருக்கி உந்தன் ஆடலைக் காணச் செய்தாய்
அடைக்கலம் நீயே அம்மா அகிலாண்டேஸ்வரி (ஸ்ரீசக்ர)

## ஸ்ரீ சக்ரம்தனிலமர்ந்த ராஜேஸ்வரி

ஸ்ரீ சக்ரம் தனில் அமர்ந்த ராஜேஸ்வரி
சின்மய மானந்த சிவமனோஹரி

சிந்தாமணி மண்டபத்தில் கொலுவிருந்தாள்
என் சிந்தையிலே வந்து கலந்திருந்தாள்
அலைமகள் கலைமகள் கீதம்பாட
நந்திகேஸ்வரரும் தாளம் போட

அரம்பை ஊர்வசியும் நர்த்தனம் ஆட
அந்தணர் நான்மறை வேதங்கள் ஓத
ராஜராஜேஸ்வரி கொலுவிருந்தாள் என்
சிந்தையிலே வந்து கலந்திருந்தாள்

சிம்ம வாகனத்தில் வீற்றிருக்க
செங்கரத்தில் கரும்பு வில்லும் தாங்கி இருக்க
ரத்னமாலைகளும் பளபளக்க
நவரத்ன சிம்மாசனத்தில் கொலுவிருந்தாள்

திருமாள் சிவனும் நான்முகனும்
ஆறுமுகனுடன் கணபதியும்
தும்புரு நாரதர் உடன் கூட முப்பத்து
முக்கோடி தேவர் வணங்க

சிந்தாமணி மண்டபத்தில் கொலுவிருந்தாள்
சிந்தையிலே வந்து கலந்திருந்தாள்
ராஜராஜேஸ்வரி கொலுவிருந்தாள்
ராஜராஜேஸ்வரி கொலுவிருந்தாள்

## மந்திர ஒளியே!

மந்திர ஒளியே மங்கள இசையே மன்மத பானியளே
மந்திர சேகரி சண்முகன் தாயே சங்கரி சௌந்தரியே
இந்திர ஜாலம் தந்திர மாயம் இலங்கிட விழியவளே
பொங்கிட என்றும் புன்னகை பூத்த புவனேஸ்வரி தாயே

பந்தனை விரலி பர்வத தேவி பவ பய ஹாரினியே
சுந்தர ஈசன் சுருதியும் நீயே சுக சுக ரூபினியே
சிந்தனை யாவும் உன்னிடம் வைத்தேன் சித்தியின் ஒரு வடிவே
எந்தனை காக்க எழில் நடை பூத்த புவனேஸ்வரி தாயே

சந்திய வடிவே சத்குண உருவே சதுர் மறை சன்னதியே
நித்திய நிதியே நின்ற புகழ் ஒளியே நிலைத்திட வருபவளே
வைத்திய மணியே வறுமைகள் போக்க வையகம் வாழ்பவளே
புத்தியில் சேர்ந்து புன்னகை பூத்த புவனேஸ்வரி தாயே

வழி படுவோர்க்கு வரம் தரும் தாயே வந்தருள் வேணியளே
பழிபடும் துயரம் பகை தரும் தாயே பகைகளைப் புதைத்தவளே
விழிகள் அருளால் வினைகளை விரட்ட விளக்கொளி யானவளே
பொழிந்திடும் அருளாய் புன்னகை பூத்த புவனேஸ்வரி தாயே

அறுபத்து நான்கு கலைகளும் அன்னையும் நீயானாய்
குறுவீடு அரக்கர் கண்பகை கடிந்த தன்மொழி நீயானாய்
குறு கவர் தம்மை குறுந்தட பாய்ச்சும் குணமணி நீயானாய்
மறுவுகள் போக்க மங்களம் பூத்த புவனேஸ்வரி தாயே

வல்லவள் நீதான் வஞ்சியும் நீதான் வசந்தமும் நீயேதான்
நல்லவள் நீதான் நன்னதி நீதான் நற்சுனை நீயேதான்
சொல்லவள் நீதான் சொர்ணமும் நீதான் சொர்க்கமும் நீயேதான்
நல்லவை காக்க நவநகை பூத்த புவனேஸ்வரி தாயே

நாற்பத்தி மூன்று கோணத்தின் நடுவில் நான்மறை நீ நவின்றாய்
நோற்றிடும் நோன்பின் பலனென வந்தாய் நோய்களை நீ தீர்த்தாய்
கார் மழையானாய் காவலும் ஆனாய் காத்திட நீ வந்தாய்
சீர் வையம் காக்க சிவனில் பூத்த பூவனேஸ்வரி தாயே

ஜெய ஜெய புவனேஸ்வரி தாயே ஜெய ஜெய ஸ்ரீம்காரி
ஜெய ஜெய மாயா மங்கள ரூபி ஜெய ஜெய ஹ்ரீம் காரி
ஜெய ஜெய துர்கா சண்டிகா காளி ஜெய ஜெய க்லீம் காரி
நயனங்கள் தன்னில் நன்னகை பூத்த புவனேஸ்வரி தாயே!

## பதினாறு படிமீது

பதினாறு படி மீது பரிவுடனே
அமர்ந்திருக்கும் ஈஸ்வரி ராஜ ராஜேஸ்வரி
எங்கள் கேள்விக்கு பதிலென்ன ஈஸ்வரி
ராஜ ராஜேஸ்வரி... ராஜ ராஜேஸ்வரி
பதினாலு லோகமும் பணியும் உன்
பதமே சுதியோடு உனைபாட
துணை புரிவாய் நிதமே கதி என்றும்
உன்பதம் சரண் அடைந்தால்
விதி என்ன செய்யும் அம்மா
இதயமே குளிர்ந்தால் (பதினாறு)

இருபத்தைந்து நாமங்கள் கொண்டவளே
இரு வினை தீர்ப்பவளே இன்பம் தருபவளே
குரு ராஜ கோபாலன் உள்ளத்தில் இருப்பவளே
அருள் வாக்கு தந்தென்னை ஆதரிப்பவளே (பதினாறு)

சட்டை என்னும் மாயை அகற்றி விட்டேன்
ஈரெட்டு படி மீதேறி இன்பமுடன் வலம் வந்தோம்
பொட்டிட்ட முகத்தாளே புன்னகை தவழக் கண்டோம்
நீ விட்ட வழி என்றே உனை சரணடைந்தோம் (பதினாறு)

## தேனால் அபிஷேகம்!

தேனால் அபிஷேகம் நான் செய்ததின் பலனாலே
தானாக பாமாலை உன் மீதே பாடுகின்றேன் தேனால்

வானாதி தேவர்களும் பல வரம் பெற்ற முனிவர்களும்
வந்தே பழனியிலே உன்னை வணங்கியே வழிபடுவார் (தேனால்)

தும்பிக்கையான் தம்பியாய் நீ பொய்கையில் அவதரித்தாய்
உன்னை நம்பியே ஓடிவந்தேன் ஆறுமுக வேலனே (தேனால்)

மானிடராய் பிறந்து மந்த மதியால் அலைந்த என்னை
வந்தே கைகொடுத்து சன் மார்க்கத்தை தந்தருள்வாய் (தேனால்)

தேர் ஒன்று செய்திடுவேன் அதில் தீபங்கள் ஏற்றி வைப்பேன்
பொய்கை ஆற்றினிலே அதை பாங்குடன் அனுப்பி வைப்பேன் (தேனால்)

ஊன் உடல் மறைந்தாலும் என் உயிர் உந்தன் பாதம் வரை
வான் புகழ் கொண்டவனே இந்த வரங்களைத் தந்தருள்வாய் (தேனால்)

## அன்பே சிவமாய்!

அன்பே சிவமாய் அணைப்பாள் நம்மை அன்னை பராசக்தி
ஆறுதல் சொல்லி அமுதம் பொழிவாள் ஆதி பராசக்தி
இப்புவி இன்பம் வேண்டாம் என்பாள் அன்னை பராசக்தி
ஈடில்லா காட்சி அளிப்பாள் அன்னை பராசக்தி

உயர்வு தாழ்வு ஒன்றும் பாராள் அன்னை பராசக்தி
ஊக்கம் இருந்தால் போதும் என்பாள் ஆதிபராசக்தி
எங்கும் நிறைந்த ஜோதியாய் நிற்பாள் அன்னை பராசக்தி

ஏகாட்சரமாய் அவனியில் வந்தாள் ஆதிபராசக்தி
ஐங்கர நாதனை ஆதியில் தந்தாள் அன்னை பராசக்தி

ஒட்டியாண பீடத்தில் அமர்வாள் ஆதிபராசக்தி
ஓம் என்றாலே ஓடியும் வருவாள் அன்னை பராசக்தி
ஔவை எனவே அவனியில் வந்தாள் ஆதிபராசக்தி
ஓம் என்றாலே ஓடியும் வருவாள் அன்னை பராசக்தி
ஓம் என்றாலே தேடியும் வருவாள் ஆதிபராசக்தி
ஓம் என்றாலே ஆடியும் வருவாள் அன்னை பராசக்தி
ஓம் என்றாலே பாடியும் வருவாள் ஆதிபராசக்தி
ஓம் என்றாலே உருவாய் வருவாள் அன்னை பராசக்தி

ஓம் என்றாலே குருவாய் வருவாள் ஆதிபராசக்தி
அன்னை பராசக்தி ஜெய ஆதி பராசக்தி
அன்னை ஆதி பராசக்தி ஜெய ஆதி பராசக்தி !

## சங்கர நாயனார் கோவிலிலே!

சங்கர நாயனார் கோவிலிலே
சங்கரி கோமதி அருள்கின்றாள்
ஆடித் தபசில் காட்சி தந்தாள் அன்னை
அருளை வாரி வழங்குகின்றாள் (சங்)

புற்றிலிருந்து மண் எடுத்து
பக்தியுடன் அதை தினமும் உண்டு
சக்தி கோமதியை நினைப்பவர்க்கு
சகல நலங்களும் என்றும் உண்டு (சங்)

சங்கர நாரணர் திருக்கோலம்
சங்கரி கோமதி தவக்கோலம்
மங்களம் தந்திடும் எழில் கோலம்
மங்கையர் வாழ்வில் சுபயோகம்
மஞ்சள் முகத்தில் ஒளி இருக்கும்
தஞ்சம் என்றால் வழி பிறக்கும்
தங்கக் கொடி மரம் உயர்ந்து நிற்கும்
அதில் தாயின் கருணை நிறைந்திருக்கும் (2) (சங்)

## பத மலரில் பற்று வைத்தேன்!

பத மலரில் பற்று வைத்தேன் ஒற்றியூரம்மா மெய்
பாசமுள்ள என் தாயே வடிவுடையம்மா
கற்ற கலை கல்வி எல்லாம் கையளவம்மா அவை
கடல் கடந்து மணப்பதெல்லாம் உன் அருளம்மா
(பதமலரில்)

பூ முகத்தை கண்டு மனம் அமைதி அடைந்தேன் ஒரு
புற்றினைப்போல் சிவலிங்கம் திகழ்ந்திடக் கண்டேன்
வாசலிலே மகிழமரம் வா வென்று அழைக்கும் அங்கு
வருவோர்க்கு அன்று முதல் நன்மை கிடைக்கும்
(பதமலரில்)

வாய் கசக்கும் கரும்பும் இங்கே இனித்திட கண்டேன் அந்த
வள்ளலாரின் பாடல்களும் ஒலித்திட கேட்டேன்
கனி வகைகள் நறு மலர்கள் யாவும் படைத்தேன் அருள்
கனிவு மிகும் கைகளிலே என்னைக் கொடுத்தேன்
(பதமலரில்)

## அருள் மிகும் தில்லையிலே

அருள் மிகும் தில்லையிலே சிவகாம சுந்தரி
அகிலமெல்லாம் போற்றும் ஜெகதீஸ்வரி
அருள்வாய் நின் பதமே தருவாய் நின் சுகமே
அழகே செந்தமிழ் அற்புதமே அஞ்சுகமே ! (அருள்)

கருணை மணம் கமழும் கயிலேசன் மகிழும்
கனகாங்கியே ஞானக் பாலூட்டினாய் அய்யன்
அருந்தமிழைக் கேட்டு பாராட்டினாய் ! (அருள்)

சிதம்பர நாயகி உன் சித்தம் இரங்கியே இதயத்தில்
இடம் ஒன்று தருவாய் நீயே நிதம் உந்தன்
பதம் பணிந்து நிமலையே உனை நினைந்து ஸ்ருதியோடு
லயத்தோடு பாட விழைந்தேன், எனை மறந்தேன்
மணம் உருகி நின்றேன், உன்னைக் கண்டேன்
உள்ளம் பரவசம் கொண்டேன் (அருள்)

## காமாட்சி அம்பா கமலாட்சி

காமாட்சி அம்பா கமலாட்சி ஓம் எனும் நாதமே
உன் காட்சி அம்பா உன் காட்சி (காமாட்சி)

ஏன் இந்த ஜபமாலை சுற்றிலும் தீஜ்வாலை
எதற்கம்மா தவக்கோலம்
ஏகாந்தம், எத்தனைக்காலம் ஒரு காலில் சிவயோகம்
எங்கள் குறை நீக்குவது எந்த நேரம் ! (காமாட்சி)

ஆதி சங்கரர் அமைத்த ஸ்ரீ சக்ரம் வீற்றிருப்பாய் தேவிநீ
எங்கள் முகம் பார்த்திருப்பாய், ஆறு வெள்ளிக்கிழமை
நேரில் வந்து தொழுதால் ஏது குறை எனினும்
தீர்த்து வைப்பாய் குறைகள் தீர்த்து வைப்பாய் !
(காமாட்சி)

## அன்ன வாகனத்தில்

அன்ன வாகனத்தில் திருக்கோலம் அன்ன பூரணியே உன்
அலங்காரம் அன்னக்கொடி பறக்கும் அனைத்துலகம் சிறக்க
செந்தூர இதழ்களிலே சிங்கார சிரிப்புடனே (அன்ன)

புண்ணிய நதியும் நீ உண்மையின் வடிவம் நீ
எண்ணிய வரங்களை தருபவளே
இகபர சுகங்களை கொடுப்பவளே (அன்ன)

அகிலம் மகிழ்ந்திருக்க முகிலாய் வருபவளே
ஐஸ்வர்யம் அறிவும் அளித்திட வள்ளவளே (அன்ன)

## சொந்தமென்றே நம்பி

சொந்த மென்று நம்பி வந்தேன் சோட்டானிக் கரைமயா! உன்
கூடர்விழியின் பார்வை பட்டால் இடர் ஏதும் வருமோ அம்மா!
வந்த வினை துயர் மாற்ற வழி ஏதும் இல்லையம்மா !
வருந்துகின்ற உயிர்களுக்கு உன் கோவில் எல்லைஅம்மா!
(அம்மே நாராயணா ! தேவி நாராயணா) (சொ)

கலைமகளாய், அலைமகளாய் காளியுமாய் நீயே இங்கு

காலம் ஒரு மூன்றினைப் போல் கோலம் கொண்டாய் தாயே
புலன் அடக்கி நோன்பிருந்தால் அடியவர்க்கு இன்பம் அம்மா
பூ மகளே கீழக்காவில் அகற்றிடுவாய் துன்பம் அம்மா (சொ)

பகவதியே நீ எனக்கு பாசமுள்ள அன்னை அம்மா
பற்று வைத்து வணங்குகின்றேன் என்றும் உன்னையம்மா
உன் மகள் நான் என் அன்பை காணிக்கையாய் கொள்ளம்மா
உள்ளத்திலே அமைதி என்னும் திருவிளக்கை ஏற்றம்மா
அம்மே நாராயணா தேவி நாராயணா (சொ)

## லலிதா நவரத்னமாலா!

ஞான கணேசா சரணம் சரணம்
ஞான ஸ்கந்தா சரணம் சரணம்
ஞான சத்குரு சரணம் சரணம்
ஞானா நந்தா சரணம் சரணம்
ஆக்கும் தொழில் ஐஞ்கரனாற்ற நலம்
பூக்கும் நகையாள் புவனேஸ்வரி பால்
சேர்க்கும் நவரத்தின மாலையினைக்
காக்கும் கணநாயக வாரணமே

### வைரம்

கற்றும் தெளியார் காடே கதியாய்
கண்மூடி நெடுங் கனவான தவம்
பெற்றும் தெரியார் நினையென்னில் அவம்
பெருகும் பிழையேன் பேசத்தகுமோ

பற்றும் வயிரப் படைவாள் வயிரப்
பகைவர்க் கெமனாக எடுத்தவளே
வற்றாத அருட்கனையே வருவாய்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

### நீலம்

மூலக்கனலே சரணம் சரணம்
முடியா முதலே சரணம் சரணம்
கோலக் கிளியே சரணம் சரணம்
குன்றாத ஒளிக்குவையே சரணம்
நீலத் திருமேனியிலே நிலையாய்
நினைவற்றொளியேன் நின்றேன் அருள்வாய்
வாலைக்குமரி வருவாய் வருவாய்
மாத ஜெய ஓம் லலிதாம்பிகையே

### முத்து

முத்தே வரும் முத்தொழிலாற்றிடவே
முன்நின்றருளும் முதல்வி சரணம்
வித்தே விளைவே சரணம் சரணம்
வேதாந்த நிவாஸினியே சரணம்
தத்தேறிய நான் தனயன் தாய்நீ
சாகாத வரம் தரவே வருவாய்
மத்தேறு ததிக்கினை வாழ்வடையேன்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

### பவளம்

அந்திரி மயங்கிய வான விதானம்
அன்னை நடம் செய்யும் ஆனந்த மேடை
சித்தை நிரம்ப வளம் பொழியாரோ
தேம் பொழிலாமீது செய்த வளாரோ
எந்தயிடத்தும் மனத்தும் இருப்பாள்
என்னும்மவர்க்கருள் எண்ண மிகுந்தாள்
மந்திர வேத மயப் பொருளானாள்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

### மாணிக்கம்

காணக் கிடையாக் கதியானவளே
கருதக் கிடையாக் கலையானவளே
பூணக் கிடையாப் பொலிவானவளே
புனையக் கிடையாய் புதுமைத்தவளே
நாணித் திருநாமமும் நின்துதியும்
நலிலாதவரை நாடாதவளே
மாணிக்க ஒளிக் கதிரே வருவாய்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

### மரகதம்

மரகத வடிவே சரணம் சரணம்
மதுரித பதமே சரணம் சரணம்
சுரபதி பணியத் திகழ்வாய் சரணம்
சுதி ஜதி லயமே இசையே சரணம்

ஹர ஹர சிவ என்றடியவர் குழும
அவரருள் பெற அருளமுதே சரணம்
வர நவ நிதியே சரணம் சரணம்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

### கோமேதகம்

பூ மேவிய நான் புரியும் செயல்கள்
பொன்றாது பயன் குன்றா வரமும்
தீ மேல் இடினும் ஜெய சக்தியெனத்
திடமாய் அடியேன் பொழியுந் திறமும்

கோ மேதகமே குளிர்வான் நிலவே
குழல்வாய் மொழியே வருவாய் தருவாய்
மாமேருவிலே வளர் கோகிலமே
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

## பதுமராகம்

ரஞ்சினி, நந்தினி, அங்கினி பதுமராக
விகாஸ, வியாபினி, அம்பா சஞ்சல
ரோக நிவாரணி, வாணி, சாம்பவி
சந்திர கலாதரி, ராணி அஞ்சன
மேனி, அலங்க்ருத பூரணி
அம்ருத ஸொரூபிணி, நித்ய கல்யாணி
மஞ்சள மேரு சிருங்க நிவாஸனி
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

## வைடூரியம்

வலை யொத்த வினை கலையொத்த மனம்
மருளப் பறையா றொலி யொத்தவிதால்
நிலையற் றொலியேன் முடியத் தகுமோ
நிகளம் துகளாக வரம் தருவாய்
அலையற்றசைவற்ற அநுபூதி பெறும்
அடியார்முடிவாழ் வைடூரியமே
மலையத்துவசன் மகளே வருவாய்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

எவர் எத்தினமும் இசைவாய் லலிதா
நவரத்ன மாலை நவின்றிடுவோர்
அவர் அற்புத சக்தியெல்லாம் அடைவார்
சிவ ரத்னமாய் திகழ்வார் அவரே (மாதா)

## அழகிய மதுரையில் மீனாட்சி!

அழகிய மதுரையில் மீனாட்சி
அகிலம் போற்றும் அன்னை அரசாட்சி
நான் மாடக் கூடலிலே அருளாட்சி
தேன் மொழி தேவியின் தேனாட்சி அந்த (அழகிய)

சங்கம் முழங்கிடும் நகரினிலே
சங்கரி மீனாளின் கருணையிலே
மீன் கொடி பறக்கும் மதுரையிலே
வான் புகழ் கொண்டாள்தாய் அவளே அந்த (அழகிய)

அன்பர்கள் மனமெல்லாம் நிறைந்திருப்பாள்
ஆதி சிவன் அருகில் அமர்ந்திருப்பாள்
வைரமணி மகுடம் அணிந்திருப்பாள்
கருணையுடன் நம்மை காத்து நிற்பாள் அந்த
(அழகிய)

முத்து, பவளம், மரகதம் மாணிக்கம்
பொன்னாபரணம் பூண்டாள்
சக்தி மனோகரி, சுந்தரி கலாதரி தென் மதுராபுரி
ஆண்டாள்
சித்திரை மாத தேவி மீனாட்சி சொக்க நாதரை
மணந்தாள்
பக்தர்கள் மணமும் பரவசமும் பொங்கிட அற்புத
லீலைகள் புரிந்தாள் அந்த (அழகிய)

## கருணையின் உருவே !

கருணையின் உருவமே கலைகளின் வடிவமே
சரணம் உன் பாதம் நீயே
காளியே நீலியே பார்வதி தேவியே
கண்மலர் காட்டிடுவாயே (கருணை)

சரவணன் அன்னையே சங்கரன் துணைவியே
சாந்தி தரும் காமாட்சியே சௌந்தர்ய வல்லியே
சாமுண்டி ஈஸ்வரியே ! தமிழ் மதுரை மீனாட்சியே !
(கருணை)

எருமையாம் ஆணவம் திருவடியில் வீழ்ந்ததே
இருள் எல்லாம் பறந்தோடுதே என்றென்றும்
நெஞ்சினிலே நின்றாடும் மயிலாக இருக்கின்ற
திரிசூலியே!
ஒரு முறை அம்மா வென்று உரைத்தாலும் போதுமே
ஓடிவந்து அருள்வாளே கருமாரி பகவதியே !
சமயபுரம் மகமாயி ! கற்பகாம்பிகை சக்தியே !
(கருணை)

## மாங்காடு மணிவிளக்கே !

மாங்காடு மணிவிளக்கே ! காமாட்சி தாயே !
மனை எங்கும் நிறைந்திருந்து வாழ்வளிப்பாய் நீயே !
(மாங்)
எல்லோரின் மனச் சுமையும் சொல்லாமல் அறிவாயே !
அவரவரின் தேவை பார்த்து அருள் மாரி பொழிவாயே
(மாங்)

விழியிழந்து வருபவருக்கு பார்வையாக நீ வருவாய் !
ஊமையாகி தவிப்பவர்க்கு வார்த்தையாகி நீ
அருள்வாய்
தாய்மை வரம் கேட்பவர்க்கு பிள்ளையாக நீ பிறப்பாய் !
திருக்கோவில் வந்தாலே பேரின்பம் நீ அளிப்பாய் !
(மாங்)

மாங்காடு என்றதுமே மனக்குறைகள் விலகுதம்மா
மலர்ப் பாதம் கண்டதுமே கோடி செல்வம் பெருகுதம்மா
வெந்தணலில் தவம் புரிந்து காத்தருளும் அம்மா
உன் ஆறுதலை நம்பி எங்கள் நல்வாழ்வு மலருதம்மா
(மாங்)

## மாங்காட்டிலே காமாட்சி

மாங்காட்டிலே காமாட்சி தேவி அவள்
தவம் புரியும் எழில் கண்டு
இசை கொண்டு புகழ் பாடுவோம் (மாங்)

செம்பவள வாய்திறந்து பேசுபவள் அவள்
சிங்கார பேரொளியை வீசுபவள்
செந்தமிழ் தேன் மொழியின் இனிமை அவள்
காற் சிலம் போடு சலங்கை கொஞ்ச ஆடுபவள்
வாடுகின்ற பயிர்களுக்கு மழையானவள் அருள்
தேடுகின்ற உயிர்க்கு தாயானவள்
காத்து அருளும் கருணை மலர் ஜோதியானவள் அதில்
கலை தீப நிலையான சிலை ஆனவள் (மாங்)

நினைத்தாலே இனிமை தரும் அவள் உருவம்
அருள் நிறைவான பேரின்ப வாழ்வு தரும்
மங்களமாம் குங்குமத்தில் ஓர் திலகம் அதனை
வணங்கிடுவோம் வழிபடுவோம் அருள் பெறுவோம்
(மாங்)

குங்குமத்தில் நிறைந்திருக்கும்
குங்குமத்தில் நிறைந்திருக்கும் காமாட்சி
குறை யாவும் நீக்கிடுவாய் எந்தனின் தாயே
மலர்ப் பாதம் பணிகின்றேன் துணை நீயே
மாங்காட்டில் தவம் புரியும் ஈஸ்வரியே ! (குங்)

திருவிளக்கை ஏற்றிவைத்தேதன் அனு
தினமும் திருக்கோவில் நாடிவந்தேன உனைக்
காணவே
திங்களை சூடிய பரமனின் தேவியே பஞ்சாட்ஷரியே
உன் திருவடி சரணம் அம்மா (குங்)

கோரிடும் வரம் யாவும் கொடுக்கின்ற உமையவளே
மாயவள் சோதரியே மங்கள ரூபிணியே
அருள் தரும் சக்தியே ஆதி காமாட்சியே
கடைக்கண் பாரம்மா ஸ்ரீ சக்ரதாரியே (குங்)

## ரோஜாப்பூ கொண்டுவந்தே

ரோஜாப்பூ கொண்டு வந்தே எங்கள்
ராஜேஸ்வரியை பூஜை செய்தால்
தேசாதிதேசம் மெச்சும் ஒரு
ராஜா போல வாழச் செய்வாள்

முல்லைப்பூ கொண்டு வந்தே எங்கள்
மோகனாங்கியை பூஜை செய்தால்
இல்லை என்று சொல்லாமலே அவள்
அள்ளி அள்ளி அளித்திடுவாள்

மருக்கொழுந்து கொண்டு வந்தே எங்கள்
மனோன் மணியை பூஜை செய்தால்
திருக்கோலம் கொண்டு அங்கே
அவள் தினந்தோறும் வந்திடுவாள்

ஜாதிப்பூ கொண்டு வந்தே—எங்கள்
ஜோதி அவளைப் பூஜை செய்தால்
ஓதி உணரா வித்தையெல்லாம் தந்து
மேதை என்று ஆக்கிடுவாள்

மகிழம்பூ கொண்டு வந்தே—எங்கள்
மாதங்கியை பூஜை செய்தால்
மணமாகா கன்னியர்க்கு அவள்
திருமணமும் நடத்தி வைப்பாள்

தாழம்பூ கொண்டு வந்தே—எங்கள்
தாட்சாயணியை பூஜை செய்தால்
வாழாப் பெண்ணை நாதனுடன்
சேர்ந்து வாழ வைத்திடுவாள்

பத்ரம்பல கொண்டு வந்தே—எங்கள்
பகவதியைப் பூஜை செய்தால்
சித்தரைப் போல் உள்ளவர்க்கு அவள்
புத்ரபாக்யம் தந்திடுவாள்

தாமரைப்பூ கொண்டு வந்த—எங்கள்
ஷியாமளியை பூஜை செய்தால்
தாமதம் செய்யாமலே அவள்
தாலி பிச்சை தந்திடுவாள்

மல்லிகைப்பூ கொண்டுவந்தே—எங்கள்
மகேஸ்வரியை பூஜை செய்தால்
பில்லிசூன்யம் ஏவல் எல்லாம்—அவள்
பின்னாலே ஓடச் செய்வாள்

செண்பகப்பூ கொண்டுவந்தே—எங்கள்
அம்பிகையைப் பூஜை செய்தால்
ஜன்மாந்திர பாவமெலாம் அவள்
தீர்த்து விலக்கி ஓட்டிடுவாள்

பாரிஜாதம் கொண்டுவந்தே—எங்கள்
பார்வதியை பூஜை செய்தால்
பாலரூபம் கொண்டுமே அவள் நம்
பாவமெல்லாம் போக்கிடுவாள்
அரளிப்பூ கொண்டுவந்தே—எங்கள்
அபிராமியை பூஜை செய்தால்
அளவில்லாத செல்வமெல்லாம்
அவள் அகமகிழ தந்திடுவாள்

செம்பரத்தைபூ கொண்டுவந்தே—எங்கள்
சண்டிகையை பூஜை செய்தால்
தந்திரமாய் நம்கனவில் வந்து
அவள் அந்தரங்கம் சொல்லிடுவாள்

மாதுளம்பூ கொண்டுவந்தே—எங்கள்
மாதாவை நீ பூஜை செய்தால்
மங்கள வாழ்வு தந்துஅவள்
மனம் மகிழச் செய்திடுவாள்

மருதாணிப்பூ கொண்டுவந்தே—எங்கள்
மீனாட்சியைப் பூஜை செய்தால்
மாறாத மனத்துடன் பக்தி
பாடல்களையே பாடச் செய்வாள்

பாதிரிப்பூ கொண்டுவந்தே—எங்கள்
திரௌபதியை பூஜை செய்தால்
அருள் கூர்ந்தவள் நம்முன் வந்து
அனுக்ரஹம் செய்திடுவாள்

நிலாம்பரம் கொண்டுவந்தே—எங்கள்
நீலாயதாட்சியை பூஜை செய்தால்
நித்யானந்தம் கொண்டு இங்கு அவள்
நித்யவாசம் செய்திடுவாள்

மனோரஞ்சிதம் கொண்டுவந்தே—எங்கள்
மாலினியை பூஜை செய்தால்
மணமான சுகந்தமுடன் அவள்
அவர் மனம்போல் வீசச் செய்வாள்

சம்பங்கிப்பூ கொண்டுவந்தே—எங்கள்
சர்வேஸ்வரியை பூஜை செய்தால்
சகல சௌபாக்யம் தந்து நம்
சஞ்சலத்தை நீக்கிடுவாள்

சாமந்திப்பூ கொண்டுவந்தே எங்கள்
சங்கரியைப் பூஜை செய்தால்
சத்தியமாய் வாழ்வினிலே அவள்
சந்தோஷத்தை அளித்திடுவாள்

தும்பைப்பூ கொண்டுவந்தே—எங்கள்
துர்க்காம்பிகையைப் பூஜை செய்தால்
தரித்திரத்தை துரத்தி அவள்
தனதான்யம் பொழிந்திடுவாள்

மந்தாரப் பூ கொண்டுவந்தே—எங்கள்
லலிதாம்பிகையை பூஜை செய்தால்
பந்தபாசம் ஆசை நீங்கி தினம்
வந்தனங்கள் செய்திடலாம்

வெட்டி வேர்ப்பூ கொண்டு வந்தே
புவனேஸ்வரியை பூஜை செய்தால்
மட்டில்லாத மகிழ்ச்சியுடன் அவள்
கட்டாயமாய் கிட்டிடுவாள்

கதிர்பச்சை கொண்டு வந்தே—எங்கள்
காமாட்சியை பூஜை செய்தால்
கடைக்கண்ணால் கடாட்சித்து ஜன்மம்
கடைத்தேற செய்திடுவாள்

கருமாரி சாம்பல் பெற்றால்
கண்ட பிணி ஓடி விடு
இடைஞ்சல்கள் மாறி இன்பம் நம்
இல்லந் தனையே நாடி வரும்

## கடல் மூன்றில் அலையாடும்

கடல் மூன்றில் அலையாடும் குமரியிலே
கன்னியா குமரியாக வார்பவளே—அம்மா
கன்னிய குமாரியாக வாழ்பவளே
உடலாலும் மனத்தாலும் தொழுவர் வாழ்விலே

உயர்வான சுகம் யாவும் பெற அருள்பவளே கடல்
பிறைமதி சூடிய திருமுடியும் என்றும்
பேரொளி வீசும் வைர மூக்குத்தியும்
இறைவி உன் வலக்கரத்தில் ஜபமாலையும் காண்போர்
இதயம் மகிழ்ந்து போற்றும் நிலையல்லவா ! (கடல்)

பகலவன் மறைந்து முழுமதி வருவதொன்றாய்
நிகழ்வது பௌர்ணமி நாளல்லவா
பரவச நிலை அங்கே பார்க்கின்ற கண்களுக்கு
பரிவுடன் நீ அளிக்கும் விருந்தல்லவா (கடல்)

## என்ன செய்தாலும்

என்ன செய்தாலும் எந்தன் துணை நீயே
என் அன்னையே உமையே – என்னை நீ (என்ன)

சின்ன வயது முதல் உன்னையே நம்பினேன் (2)
சினந்தெனை அடித்தாலும் பரிந்தெடுத்
தணைத்தாலும் நீ (2) (என்ன)

முன் வினையால் இன்ப துன்பங்கள் விளைந்திட (2)
மூடமதி கொண்டுனை நோவதென்ன பேதமை
என் விதியால் இடராயிரம் சூழினும் (2)
எல்லாம் உன் திருவிளையாடல் என்றெண்ணி நீ
(என்ன)

## அம்மா கலைவாணி

அம்மா கலைவாணி – எனக்கு
அருள் வாய் மகாராணி !
சிம்மாசனமாய் எந்நாவினிலே
தேவி வருவாய் நீ ! (அம்மா)

வேத முதல் ஆனான்—பிரமன்
வித்தை தொழில் ஆனான்—அவன்
காதல் இலங்கிளியே—என்றும்
கை தொழுவேன் உனையே ! (அம்மா)

வெள்ளை மலர் மேலே – அன்னம்
வீற்றிருந்தாற் போலே
மெள்ள எழுந்தருள்வாய் – அம்மா
வேண்டும் வரந் தருவாய் (அம்மா)

ஏது படித்துவிட்டேன் – பெரிதாய்
என்ன முடித்துவிட்டேன் – உன்
பாதம் பிடித்து விட்டேன் – அதனால்
பாடல் வடித்து விட்டேன் (அம்மா)

பூவும் உனக்காக – தேடும்
பொன்னும் உனக்காக!
கூவும் எனக்காக – அருள்வாய்
கோடிக் கணக்காக!

அருளின் துடிதுடிப்பாய் – அம்மா
அமுதத் தமிழ் வடிப்பாய்!
கருணை மடை திறப்பாள் – அம்மா
கவிதைப் பயிர் வளர்ப்பாய் ! (அம்மா)

## நாதவிந்து கலாதி நமோ நமோ

நாத விந்து கலா தீ நமோ நம
வேத மந்த்ர சொரூபா நமோ நம
ஞான பண்டித சாமீ நமோ நம (வெகுகோடி)

நாம சம்புகு மாரா நமோ நம
போக அந்தரி பாலா நமோ நம
நாக பந்தம யூரா நமோ நம (பரசூர)

சேத தண்டவி நோதர நமோ நம
கீத கிண்கிணி பாதா நமோ நம
தீர சம்ப்ரம வீரா நமோ நம (கிரிராஜ)

தீப மங்கள ஜோதீ நமோ நம
தூய அம்பல லீலா நமோ நம
தேவகுஞ்சரி பாகா நமோ நம (அருள்தாராய்)

ஈதலும் பல கோலால பூஜையும்
ஓதலுங்குண ஆசார நீதியும்
ஈரமுங்கு சீர்பாத சேவையும் (மறவாத)

ஏழ்தலம் புகழ் காவேரியால் வினை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக (வயலூரா)

ஆதரம் பயி லாரூர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாவினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி (லையிலேகி)

ஆதிபந்த வுலாவாக பாடிய
சேரர் செங்குவை கரவூர் நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் (பெருமாளே)

## கற்பகவல்லி நின்பொற்பதம்

கற்பக வல்லிநின் பொற்பதகள் பிடித்தேன்
நற்கயீதியருள்வாய் அம்மா – தேவி (2)
பிற்பலரும் போற்றும், பதிமயிலா புரியில்
சிற்பம் நிறைந்த உயர் சிங்காரக்கோயில் கொண்ட (கற்பக)

நீயிந்த வேளைதனில் சேயன் எனைமறந்தால்
நானிந்த நானிலத்தில் நாடுதல் யாரிடமோ?
ஏனிந்த மௌனம் அம்மா ஏழை எனக்கருள
ஆனந்த பைரவியே ஆதரித்தாளும் அம்மா (கற்பக)

எல்லோர்க்கும் இன்பங்கள் எழிலாய் இறைஞ்சி என்றும்
நல்லாக்கி வைத்திடும் நாயகியே–நித்ய
கல்யாணியே, கபாலி காதல் புரியும் அந்த
உல்லாசியே உமா, உனை நம்பினேன் அம்மா (கற்பக)

நாகேஸ்வரி நீயே நம்பிடும் எனைக்காப்பாய்
வாகீஸ்வரி மாயே வாராய் இது தருணம்
பாகேஶ்ரீதாயே பார்வதி இந்த
லோகேஸ்வரி நீயே உலகினில் துணையம்மா (கற்பக)

அஞ்சன மையிடும் அம்பிகையே எம்பிரான்
கொஞ்சிக் குலாவிடும் வஞ்சியே–நின்னிடம்
தஞ்சம் என அடைந்தேன் தாயே உன்சேய்நான்
ரஞ்சனியே ரட்சிப்பாய் கெஞ்சுகிறேன் அம்மா (கற்பக)

## முருகா உன்னை (வேல்)

வேல் வேல் முருகா வேலய்யா
வெற்றி வேல் முருகா வேலய்யா (2)

முருகா உன்னை அழைக்கின்றேன்
முத்தமிழ் பாடித் துதிக்கின்றேன்
மருகா உன்னை அழைக்கின்றேன்
மறைகள் பாடித் துதிக்கின்றேன் (வேல்)

கந்தா உன்னை அழைக்கின்றேன்
கவசம் பாடித் துதிக்கின்றேன்
மன்னா உன்னை அழைக்கின்றேன்
மந்திரம் பாடித் துதிக்கின்றேன் (வேல்)

வேலா உன்னை அழைக்கின்றேன்
விருத்தம் பாடித் துதிக்கின்றேன்
மாலா உன்னை அழைக்கின்றேன்
மயிலைப் பாடித் துதிக்கின்றேன் (வேல்)

சண்முகா உன்னை அழைக்கின்றேன்
சரவணன் பாடித் துதிக்கின்றேன்
கண்ணின் மணியை அழைக்கின்றேன்
காவியம் பாடி துதிக்கின்றேன் (வேல்)

## வரணும் வரணும்

வரணும் அம்மா வரணும் அம்மா
மூகாம்பிகைக தாயே சரணம் அம்மா (2)

ஊமைகளைப் பேச வைக்க
உண்மைகளை வாழ வைக்க
செவிடர்களைக் கேட்க வைக்க
குருடர்களைப் பார்க்க வைக்க (வரணும்)

ஊனர்களை நலமாக்க
கூனர்களை நிமிர வைக்க
வீனர்களை ஓடவைக்க
வானின் மீது ஓங்கிநிற்க (வரணும்)

சேயன்பு பால்குடிக்க
தாயருளில் கலந்திருக்க
மாய இருள் விலகிநிற்க
மூகாம்பிகை வரம் கொடுக்க (வரணும்)

வரணும் வரணும் அம்மா
சரணம் சரணம் அம்மா (8)

## மயிலே மயிலே

மயிலே மயிலே நீ ஆடு—எங்கள்
மன்னவன் புகழை நீ பாடு

மயிலே மயிலே நின்றாடு
மன்னவன் முருகனை மன்றாடு
தென்னவன் மகிழ்ந்திட நீ பாடு
சேவற் கொடியுடன் சேர்ந்தாடு (மயிலே)

செந்தமிழ் கீதம் நான்பாட
சந்தன காவடி தானாட
இந்திரன் கொலுவின் மீனாட
தந்தன தாளங்கள் சேர்ந்தாட (மயிலே)

கலைமகள் நாவில் கனிந்தாட
நிலமகள் தரையில் புரண்டாட
அலைமகள் அச்சுத னுடனாட
மலைமகள் சரவணன் விளையாட (மயிலே)

சரவணப் பொய்கையில் நானாட
சண்முக நதியினில் அவனாட
வையாபுரியில் நீ யாட
வருவான் சரவணன் விளையாட (மயிலே)

பாடலைப் படித்தால் பலனுண்டு
படிப்பதைக் கேட்டால் நலமுண்டு
தினமும் படித்தால் செல்வமுண்டு
பழனி முருகனின் அருளுண்டு

## அருள்மிகு தேவி அன்னை

அருள்மிகும் தேவி அன்னை பாலா திரிபுரசுந்தரி
சரணம்
இருள்தனை நீக்கும் தாயே பாலா திரிபுரசுந்தரி சரணம்
திரிபுரசுந்தரி சரணம் பாலாதிரிபுரசுந்தரி சரணம் (2)

மாரியைப் பொழியும் மாரியும் நீயே
அன்புடன் வருவாய் அம்மா (2)
காரியம் நடத்திடும் காளியும் நீயே
இன்பம் தருவாய் அம்மா
நாளும் கோளும் ஏதும் சிவநாயகி துணை வரும்போது(2)
(அருள்)

அருள் நவராத்திரி ஒளிவிளக்கேற்றி
சரணடைந்தோமே தேவி
சரணடைந்தோமே தேவி
வரந்தர நீயே இருகரம் நீட்டி வருவாய் அம்மா தேவி(2)
சாமுண்டீஸ்வரி தேவி ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி தேவி(2)

## குங்கும அர்ச்சனை

குங்கும அர்ச்சனை செய்வதற்கு அம்பாள்
கோடி கோடி பொன்னை கொடுப்பவளாம்
சந்தனத்தால் அபிஷேகம் செய்தவர்க்கு அம்பாள்
சந்தனத்தால் அலங்காரம் செய்தவர்க்க அம்பாள்
சர்வா பீ டங்களும் கொடுப்பவளாம்

தேனால் அபிஷேகம் செய்தவர்க்கு அம்பாள்
திவ்ய தரிசனம் கொடுப்பவளாம்
பாலால் அபிஷேகம் செய்தவர்க்கு அம்பாள்
பல ஜன்ம பாவத்தைப் போக்குபவளாம்

கனியால் அபிஷேகம் செய்தவர்க்கு அம்பாள்
கண்முன்னே வந்து நிற்பவளாம்
மனதால் எப்போதும் நினைப்பவர்க்கு அம்பாள்
மாங்கல்ய பாக்கியம் கொடுப்பவளாம்

மும்முறை வலம் வந்து தொழுபவர்க்கு அம்பாள்
முன்நின்று காத்தருள் புரிபவளாம்
அடிமேல் அடிவைத்து அவளை வலம் வந்தால்
அ டசம்பத்தும் கொடுப்பவளாம்

கற்பூர ஜோதியை காண்பவர்க்கு அம்பாள்
கைமேல் பலன்களைக் கொடுப்பவளாம் தீராத
வினைகளைத் தீர்ப்பவளாம் தேவி
திருவடி சரணம் சரணம் அம்மா (2)

பவபய ஹாரிணி அம்பா பவானி துக்க நிவாரணி
துர்க்கே ஜெய ஜெய
காலகவிநாசினி காளி ஜெய ஜெய சக்தீஸ்வரூபினி
மாதாகி ஜெய ஜெய

## தேவி கன்யாகுமரி

தேவி கன்யாகுமாரி ! பராசக்தி தேவி கன்யாகுமரி
தாவி வருகுதம்மா ! என் நெஞ்சமுன்தாளினை
நாடுதம்மா
ஞாலமெல்லாம் ஈன்ற கன்னியென்ற ஞாயம்
உரைக்குதம்மா
ஞாயிறு திங்கள் எல்லாம் நின்திரு ஞான ஒளியின்
பொறி

பார்க்கவந்த என்னை தேவிநீ பக்கத்தில் வாஎன்று
பார்த்த பார்வையிலே என்மனம் பாகாய் உருகிற்றம்மா
நீலக் கடலோரம் கன்னித்தாய் நின்னைக்
கண்டபின்னர்
நானாவித உலகில் என் கண்கள் நின்னையே
நாடுதம்மா
பார்க்கும் இடந்தோறும் நின்முக புன்சிறிப்புள்ளதம்மா
யார்க்கினி அஞ்சவேண்டும் உலகில் எல்லாம்
உனதுமயம்
தேகம் புனிதமாக தேவியே உன்னைத் தேடி
அலைந்தேன்
மோகத்தை ஊட்டிவிட்டாய் இனி அகம் பாவம்
தொலைந்ததம்மா
கரணத்தால் ஆளப்பெற்ற என்ஜீவன்
கசடற்றதாயிற்றம்மா
மரணம் எனக்கில்லை என்றே மனம் மகிழ்ந்தே
குதிக்குதம்மா
ஓம்சக்தி ஓம் சக்திஓம் பராசக்தி ஆனந்த சக்திமயே
ஓம்சக்தி ஓம்சக்திஓம் அன்னையே அன்புக்கன்யாகுமரி

## ஓம் ஸ்ரீஜய ஜய ஜயசக்தி

ஓம் ஸ்ரீ ஜயஜய ஜயசக்தி (20)
ஜெய ஜெய வெனவே பாடி பணிந்தோம்
ஜெகமெங்கும் அமைதியைத் தா (ஓம்)

திருப்தியும் இன்பமும் வாழ்வில் துலங்க
தேவையெல்லாம் அடைய அம்மம்மா
தேவையெல்லாம் அடைய
பக்தி பெருகிட பாடி உருகிட பணிப்பாய்
அன்பிலெமை (ஓம்)

இரண்டுகள் பேக மூன்றுகளகல ஈஸ்வரி
வரமருள்வாய்
அம்மம்மா ஈஸ்வரி வருமருள்வாய்
கரங்குவிந்த தோமினி காலைவிடோமடி
கருணையுடன் அணைப்பாய் (ஓம்)

காசினி எங்கும் வேற்றுமை போக
கருத்தினில் அன்பருள்வாய்
கருத்தினில் அன்பருள்வாய் அம்மம்மா
தேசுடன்வாழ காட்டடி காட்சி தேவிஉன்
அடைக்கலமே (ஓம்)

நமஸ்காரம் இருவினை கருத்தினில் ஞான
நல்லொளி தீபம் வைத்து ஞான
நல்லொளி தீபம் வைத்து
நமஸ்காரம் செய்து ஹாரத்தி செய்தோம்
ஞாலத்துக்கமைதியை தா (ஓம்)

ஓம் கணபதிசிவ சண்முகநாதா ஓம் த்ருகுணாதீத
க்ரு ணா
ஓம் ஸ்ரீராமா மஹாதேவசம்போ ஓம் ஜெய
ஜகத்ஜனனி (ஓம்)

## பெட்டி நிறைய பூ கொணர்ந்து

பெட்டி நிறைய பூக் கொணர்ந்து பூஜிப்பேன்–அம்மா
பூசுரர்கள் போற்றும் பொற்கொடியே–மீனாம்பா
புவனேஸ்வரி உன்னை நான் (பெட்டி)

மல்லிகை முல்லை மருவுடன் தாழை
மகிழம்பூ பாதிரியும் அல்லி அரளி
பச்சை தவனும் அழகுள்ள பாரிஜாதம்
சொக்கிட பக்கம் அம்மா சக்தி உன்னை–பத்தியுடன்
(பெட்டி)

இ டமுடனே பல பு பங்கள் கொணர்ந்துன்னை
அ டோத்திரம் செய்தேன் – ஒரு
க டமும் வராமல் காப்பதுன் கடமை
கருணாசாகரியே, ஈஸ்வரியே, ஜகதீஸ்வரியே
திரிபுரேஸ்வரியே, ராஜேஸ்வரியே (பெட்டி)

சம்பங்கி ரோஜா, ஸரஸிஜமலரால் ஸகஸ்ரார்ச்சனை
செய்தேன்
வாணி சரஸ்வதி வந்தென்னை ஆதரி வாசாம
கோசரியே
ஸ்ரீ ஹரியே, சுபா ஹரியே, கிருபா ஹரியே, ப்ரபா ஹரியே
(பெட்டி)

பக்ஷமதாகவே பரிமளப் பொடியினால் லக்ஷார்ச்சனை
செய்தேன்
அரிய சமயத்தில் அனுக்கிரஹம் செய்தென்னை
ஆதரிப்பாயே ஏகாக்ஷரியே த்ரியாக்ஷரியே சடாபுரியே
பட்சாக்ஷரியே (பெட்டி)

சித்ரான்னம் நாழிகேளரம் கதலிப்பழங்களுடன்
கொய்யப்பழம்
திராட்சைப் பழமும் தாம்பூல வகையுடனே
கற்பூரங்கள் ஏற்றிடுவேன்–உன்
பொற்பாதங்களில் பணிந்திடுவேன்
ஈஸ்வரியே, ஜகதீஸ்வரியே
திரிபுரே வரியே, ராஜேஸ்வரியே

## ஊஞ்சல் பாட்டு!

அரனாரின் பெருந்தேவி அம்பா பார்வதியே
அழகான பொன்னூஞ்சல் ஆடிடுவாய் அம்மா லாலி...
வரம்தந் திவ்யைகம் (நல்) கார்த்திடுவாய் அம்மா
வளமான பொன்னூஞ்சல் தனிலாடு அம்மா லாலி...
மங்கையர் நலம்பெற மாதரசி நீயே
தங்கச்சலங்கையுடன் தாளமிட ஆடு (லாலி)

கங்கை முடி கொண்டவன் கரருத்தில் நிறைந்தவளே
கருணைக் கடலானவளே களிப்புடனே ஆடு (லாலி)

பாரிஜாதம் மணக்க பவளக்கொடி ஊஞ்சலிலே
பார்வதியே பாலாம்பா பாங்குடனே ஆடு (லாலி)

வேதங்கள் முழங்கியே வேண்டுவதுனை அம்மா
நாதன் சிவ நாதனுடன் நலமுடன் ஆடு (லாலி)

உலகாளும் அன்னையுனை சரணடைந்தோம் அம்மா
உமைபர மேசருடன் உவப்புடனே ஆடு (லாலி)

மலைவாழும் மாதேவி மாதா பார்வதியே
மணவாள ரசருடன் மகிழ்ந்தாடு அம்மா (லாலி)

## ஊஞ்சல் பாட்டு 2

அருளோடு பொருள் தந்து ஆதரிக்கும் அம்மா
அழகான பொன்னூஞ்சல் ஆடிடுவாய் அம்மா (லாலி)

இருள்நீக்கி ஒளிதந்து எமைக்காக்கும் அம்மா
இனிதான பொன்னூஞ்சல் தனிலாடு அம்மா (லாலி)

அவமாயை அகற்றும் நல் அம்பிகையே நீதான்
அழகான பொன்னூஞ்சல் ஆடிடுவாய் அம்மா (லாலி)

ஒருபாதி சிவனாக மறுபாதி உமையாக
சிவகாமி தேவிநீ பொன்னூஞ்சல் ஆடு (லாலி)

விண்ணோடும் மண்ணோடும் விரும்பி உனைத்துதிக்க
வண்ணமலர் பொன்னூஞ்சல் தனிலாடு அம்மா
(லாலி)

பாரிஜாதம் மணக்க பவளக் கொடி ஊஞ்சலிலே
பார்வதியே பாலாம்பா பாங்குடனே ஆடு (லாலி)

நம்புமடியார்கள் வினை நாளும் தீர்ப்பவளே
செம்பவளக் கொடி ஊஞ்சல் தனிலாடு அம்மா (லாலி)

அருட் பெருஞ் சோதியே அராளகேசி உமையே
ஈசாதி ஈசருடன் பொன்னூஞ்சல் ஆடு (லாலி)

## திரு விளக்குப் பாட்டு

ஏற்றிடுவோம் விளக்கு – நாம்
நாம் ஏற்றிடுவோம் விளக்கு

இலக்குமி எங்கள் வீட்டுக்கு வந்திட
ஏற்றிடுவோம் விளக்கு – நம்
ஏழ்மை மறைந்து வாழ்வு மலர்ந்திட
ஏற்றிடுவோம் விளக்கு

துலக்கிய நல்லொளி தோன்றி விரிந்திட
ஏற்றிடுவோம் விளக்கு
துன்பங்கள் எல்லாம் நொடியில் மடிந்திட
ஏற்றிடுவோம் விளக்கு

பார்வதி எங்கள் வீட்டுக்கு வந்திட
ஏற்றிடுவோம் விளக்கு
பற்றி கவலைகள் சட்டென வீழ்ந்திட
ஏற்றிடுவோம் விளக்கு

ஆர்வ நெய் ஊற்றி அன்பெனும் தகளியில்
ஏற்றிடுவோம் விளக்கு – நம்
அகம் புர நல்லறம் அகலாதிருந்திட
ஏற்றிடுவோம் விளக்கு

சரஸ்வதி எங்கள் வீட்டுக்கு வந்திட
ஏற்றிடுவோம் விளக்கு – நாம்
சகலநற் கலைகளும் எளிதினில் அறிந்திட
ஏற்றிடுவோம் விளக்கு

தரணியில் வளம் தொழில்கள் வளர்ந்திட
ஏற்றிடுவோம் விளக்கு – செந்
தமிழ் மொழி பல மொழி தெரிந்து சிறந்திட
ஏற்றிடுவோம் விளக்கு

அயன் அரி அரனென்னும் மூவரும் வந்திட
ஏற்றிடுவோம் விளக்கு
அண்ணன் உடன் வர முருகனும் அகம் வர
ஏற்றிடுவோம் விளக்கு

பயமறப் பவமறப் பழுதற பாடற
ஏற்றிடுவோம் விளக்கு
பயனுறப் பலமுறப் பரிவுறப் பண்புற
ஏற்றிடுவோம் விளக்கு

உள்ளிய இன்பம் எய்திட நாளும்
ஏற்றிடுவோம் விளக்கு
உயர்வுடன் புகழும் ஓங்கிட வாழ்வில்
ஏற்றிடுவோம் விளக்கு

உள்ளிருள் நீங்க ஒளியருள் ஓங்க
ஏற்றிடுவோம் விளக்கு – நம்
உளமதில் இறையை உணர்ந்திட உள்ளே
ஏற்றிடுவோம் விளக்கு

## மங்களம் அன்னை

அன்னை அன்னை அன்னை அன்னை அன்பினுக்கு
மங்களம்

ஆதிசக்தி அம்பிகைக்கு அனந்த கோடி மங்களம்
என்னுள்ளே விளங்கும் எங்கள் இஸ்வரிக்கு மங்களம்

சர்வேஸ்வரிக்கு மங்களம்
என் இச்சை யாவும் முற்றுவிக்கும் சிற்சபைக்கு
மங்களம்

தாழ்விலாத தன்மையும், தளர்ச்சியற்ற வண்மையும்
வாழ்விலான பயன்களும் என்வாக்கிலே வரங்களும்
பக்திபிற்கசிந் தறிந்து பாடுகின்ற பாங்கையும்
பாடுவோர்க் கனேகபோக பாக்கியங்கள் மேன்மையும்
என்றும் ஓங்க என்கரத்தில் இயற்கையான சித்தியை
தந்து ஞான மூர்த்தியாம் தனித்து வைத்த சக்தியாம்

நாமகீர்த்தனம் பரந்து நாடெல்லாம் செழிக்கவும்
வேறிடாத இன்பம் பொங்கி வீடெலாம் விளங்கவும்
ஞானதீபம் ஏற்றி எங்கும் நாதகீதம் பாடுவோம்
தர்மசக்தி வாழ்க என்று சந்ததம் கொண்டாடுவோம்

சங்கராய சங்கராய சங்கராய மங்களம்
சங்கரி மனோகராய சாஸ்வதாய மங்களம்
குருவராய மங்களம் ஷடானனாய மங்களம்
ரகுவராய மங்களம் வேணுகிரு ண மங்களம்
சீதாராம மங்களம் ராதாகிரு ண மங்களம் அன்னை

வேண்டுவது அறிவோய்நீ!
வேண்டத்தக்கது அருள்வோய் நீ!

## ஸ்ரீ அருணகிரி நாதர் அருளிய

## சிறுவாபுரி திருப்புகழ்!

அண்டர்பதி குடியேற மண்டசுரர் உருமாற
அண்டர்மன மகிழ்மீற அருளாலே

அந்தரியோ டுடனாடு சங்கரனு மகிழ்கூரு
ஐங்கரனு முமைபாளும் மகிழ்வாக

மண்டலமு முனிவோரும் எண்டிசையி லுளபேரும்
மைந்துமயி லுடனாடி வரவேணும்

புண்டரிக விழியாள அண்டரீமகள் மணவாள
புந்திநிறை அறிவாளா உயர்தோளா

பொங்குடல் உடனாகம் விண்டுவரை யிகல்சாடு
பொன்பரவு கதிர்வீசு வடிவேலா

தண்டரள மணிமார்ப செம்பொனெ ழில்செறிரூபா
தண்டமிழின் மிகுநேய முருகேசா

சந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான
தண்சிறுவை தனில்மேவு

## திருப்புகழ் 2

சீதள வாரிஜ பாத நமோநம
நாரத கீதவி நோதா நமோ நம
சேவல் மாமயில் பிரீதா நமோ நம (மறைதேடுஞ்)

சேகர மானப்ரதபாபா நமோநம
ஆகம சாரசொ ரூபா நமோ நம
தேவர்கள் சேனைமகீப நமோ நம (கதிர்தோய)

பாதக நீவு குடாரா நமோநம
மாவ சுரேச கடோரா நமோநம
பாரினிலே ஜெய வீரா நமோநம (மலைமாது)

பார்வதி யாள்தரு பாலா நமோநம
நாவல ஞான மனோலா நமோநம
பால குமார சுவாமி நமோநம (அருள்தாராய்)

போதக மாமுக னேரான சோதர
நீரணி வேணியர் நேயப்ரபாகர
பூமக ளார்மரு கேசா மகோததி (இகல்சூர)

போதக மாமறை ஞானத யாகர
தேனவிழ் நீபந றாவாரு மார்பக
பூரண மாமதி போல் ஆறு மாமுக (முருகோனே)

மாதவர் தேவர்க ளோடே முராரியும்
மாமலர் மீதுறை வேதாவு மேபுகழ்
மாநில மேழினு மேலான நாயக (வடிவேலா)

வானவர் ஊரினும் வீறாகி வீறள
காபுரி வாழ்வினு மேலாக வேதிரு
வாழ்சிறு வாபுரி வாழ்வே அராதிபர் (பெருமாளே)

## திருப்புகழ் 3

வேலி ரண்டெனு நீள்விழி மாதர்கள்
காதலின் பொருள் மேவின பாதகர்
வீணில் விண்டுள நாடியருமைகள் (விலைகூறி)

வேளை யென்பதி லாவகை பேசியர்
பேசி யென்பவ ராமிசை மோகிகள்
மீது நெஞ்சழி யாசையி லேயுழல் (சிறியேனும்)

மால யன்பர னார்இமை யோர்முனி
போர்புரந்தர னாதிய ரேதொழு
மாத வம்பெறு தாளிணை யேதினம் (மறவாதே)

வாழ்த ருஞ்சிவ போகந னூநெறி
யேவி ரும்பி வினாவுடனே தொழ
வார்வ ரந்தரு வாய்அடி யேனிடர் (களைவாயே)

நீல சுந்தரி கோமளி யாமளி
நாட கம்பயில் நாரணி பூரணி
நீடு பஞ்சமி சூலினி பாலினி (உமைகாளி)

நேயர் பங்கெழு மாதவி யாள்சிவ
காம சுந்தரி யேதரு பாலக
நீர்பெரு ருஞ்சடை யாருள் தேசிக (முருகேசா)

ஆலில் நின்றுல கோர்நிலை யேபெற
மாநி லங்கள் எலா நிலை யேதரு
ஆய னந்திரு வூரக மால்திரு (மருகோனே)

ஆடகம் பயில் கோபுர மாமதில்
ஆலயம்பல வீதியு மேநிறை
வான தென்சிறு வாபுரி மேவிய (பெருமானே)



# வழிபாட்டுக்குரிய
# பிரபந்தத் திரட்டு

## இராமாநுசர் வணக்கம்

பூமன்னு மாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த
பாமன்னு மாறன் அடிபணிந் துய்ந்தவன் பல்கலையோர்
தாம்மன்ன வந்த இராமா நுசன்சர ணாரவிந்தம்
நாம்மன்னிவாழ நெஞ்சேசொல்லு வோம்அவன்
நாமங்களே 1

## ஆழ்வார்கள் வணக்கம்

ஊழிதொறும் ஊழிதொறும் உலகம் உய்ய
உம்பர்களும் கேட்டுய்ய அன்பி னாலே
வாழியெனும் பூதம்பேய் பொய்கை மாறன்
மழிசையர்கோன் பட்டர்பிரான் மங்கை வேந்தன்
கோழியர்கோன் தொண்டர்துகள் பாணன் கோதை
குலமுனிவன் கூறியநூ லோதி வீதி
வாழியென வரும்திரளை வாழ்த்து வார்தம்
மலரடியென் சென்னிக்கு மலர்ந்தபூவே 2

## திருமால் வணக்கம்

மின்னுருவாய் முன்னுருவில் வேத நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள்
தானாய்ப்
பின்னுருவாய் முன்னுருவில் பிணிமூப் பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாது
எண்ணும்
பொன்னுருவாய் மணியுருவில் பூதம் ஐந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில் திகழுஞ் சோதி
தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடியென் தலைமேலவே 3

## திருமால் முதன்மை

உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே. 4

## பெரியாழ்வார்

பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு
பல்கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண் ணாஉன்
செவ்வடி செவ்வி திருக்காப்பு 5

அடியோ மோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம்
பல்லாண்டு
வடிவாய் நின்வலமார்பினில்வாழ்கின் றமங்கையும்
பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறை யும்சுட ராழியும் பல்லாண்டு
படைபோர்புக்குமுழங்கும் அப்பாஞ்சசன்னியமும்
பல்லாண்டே 6

சங்கின் வலம்புரியும் சேவடிக் கிண்கிணியும்
அங்கைச் சரிவளையும் நாணும் அரைத்தொடரும்
அங்கண் விசும்பில் அமரர்கள் போத்தந்தார்
செங்கண் கருமுகிலே தாலேலோ
தேவகி சிங்கமே தாலேலோ 7

## கண்ணபிரான் குழலூதற் சிறப்பு

சிறுவிரல் கள்தட விப்பரி மாறச்
செங்கண்கோ டச்செய்ய வாய்கொப் பளிப்ப
குருவெயர்ப் புருவம் கூட லிப்பக்
கோவிந்தன் குழல்கொ டூதின போது
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்துசூழ்ந் துபடு காடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால்பரப் பிட்டுக்
கவிழ்ந்திறங் கிச்செவி யாட்ட கில்லாவே 8

## அரங்கனைப் போற்றல்

துப்புடை யாரை அடைவ தெல்லாம்
சோர்விடத் துத்துணை யாவரென்றே
ஒப்பிலே னாகிலும் நின்ன டைந்தேன்
ஆனைக்கு நீயருள் செய்த மையால்
எய்ப்பென்னை வந்து நலியும் போதங்
கேதும்நா னுன்னை நினைக்க மாட்டேன்
அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்
அரங்கத் தரவணைப் பள்ளி யானே 9

நன்மை தீமைகள் ஒன்றும் அறியேன்
நாரணாஎன்னும் இத்தனை அல்லால்
புன்மை யால்உன்னைப் புள்ளுவம் பேசிப்
புகழ்வான் அன்றுகண் டாய்திரு மாலே
உன்னு மாறுஉன்னை ஒன்றும் அறியேன்
ஓவா தேநமோ நாரணா என்பன்
வன்மை யாவதுஉன் கோயிலில் வாழும்
வைட்ட ணவன் என்னும் வன்மைகண் டாயே 10

## ஆண்டாள்

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேர் இழையீர்
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏர்ஆர்ந்த கண்ணி எசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய் 11

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்கு பெருஞ்செந்நெல் ஊடு கயலுகளப்
பூங்குவளை போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய் 12

அங்கண்மா ஞாலத் தரசர் அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே
சங்கம் இருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்
கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போல
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ
திங்களும் ஆதித் தியனும் எழுந்தார்போல்
அங்கண் இரண்டுங்கொண் டெங்கள்மேல் நோக்குதியேல்
எங்கள்மேல் சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய் 13

அன்றிவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி
கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி
குன்று குடையா எடுத்தாய் குணம்போற்றி
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி
என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்றுயாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய் 14

சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து உன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோ(டு)
உற்றோமே ஆவோம்; உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய் 15

மென்னடை அன்னம் பரந்துவிளை யாடும்
வில்லிபுத் தூருறை வான்தன்
பொன்னடி காண்பதோர் ஆசையி னால்என்
பொருகயல் கண்இணை துஞ்சா
இன்னடி சில்லொடு பால்அமு தூட்டி
எடுத்தஎன் கோலக்கிளியை
உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே
உலகளந் தான்வரக் கூவாய் 16

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ
மருப்பொசித்த மாதவன் தன்வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே 17

## குலசேகரப்பெருமாள்

அளிமலர்மே லயனரனிந் திரனோ டேனை
அமரர்கள்தம் குழுவும் அரம் பையரு மற்றும்
தெளிமதிசேர் முனிவர்கள் தம் குழுவு முந்தித்
திசைதிசையில் மலர்தூவிச் சென்று சேரும்
களிமலர்சேர் பொழிலரங்கத் துரக மேறிக்
கண்வளரும் கடல்வண்ணர் கமலக் கண்ணும்
ஒளிமதிசேர் திருமுகமும் கண்டு கொண்டேன்
உள்ளமிக வென்றுகொலோ உருகு நாளே 18

மறம்திகழும் மனமொழித்து வஞ்ச மாற்றி
வன்புலன்கள் அடக்கியிடர்ப் பாரத் துன்பம்
துறந்(து) இருமுப் பொழுதேத்தி எல்லை யில்லாத்
தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான
அறந்திகழும் மனத்தவர்தம் கதியைப் பொன்னி
அணியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
நிறந்திகழும் மாயோனைக் கண்டஎன் கண்கள்
நீர்மல்க வென்றுகொலோ நிற்கு நாளே 19

தூராத மனக்காதல் தொண்டர் தங்கள்
குழாங்குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி
ஆராத மனக்களிப்போ டழுத கண்ணீர்
மழைசோர நினைந்துருகி ஏத்தி நாளும்
சீரார்ந்த முழவோசை பரவை காட்டும்
திருவரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும்
போராழி அம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தில் என்றுகொலோ புரளும் நாளே 20

பேய ரேஎனக்கு யாவரும் யானுமோர்
பேய னேஎவர்க் குமிது பேசியென்
ஆயனே அரங்கா என்றழைக் கின்றேன்
பேய னாயொழிந் தேனெம்பி ரானுக்கே 21

ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும்
யான்வேண்டேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங்க டச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே 22

செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும்
கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துஉன் பவளவாய் காண்பேனே 23

கண்டாரி கழ்வனவே காதலன்றான் செய்திடினும்
கொண்டானை யல்லால் அறியாக் குலமகள்போல்
விண்டோய் மதிள்புடைசூழ் வித்துவக்கோட்
டம்மா நீ
கொண்டாளா யாகிலும்உன் குரைகழலே
கூறுவனே 24

சுற்றமெலாம் பின்தொடரத் தொல்கான
மடைந்தவனே
அற்றவர்கட் கருமருந்தே அயோத்திநகர்க் கதிபதியே
கற்றவர்கள் தாம்வாழும் கணபுரத்தென்
கருமணியே
சிற்றவைதன் சொல்கொண்ட சீராமா தாலேலோ
25

தேவரையும் அசுரரையும் திசைகளையும்
படைத்தவனே
யாவரும்வந் தடிவணங்க அரங்கநகர்த்
துயின்றவனே
காவிரிநல் நதிபாயும் கணபுரத்தென் கருமணியே
ஏவரிவெஞ் சிலைவலவா இராகவனே தாலேலோ
26

## திருமழிசையாழ்வார்

கரும்பரங்கு தண்துழாய் துதைந்தலர்ந்த பாதமே
விரும்பிநின் றிறைஞ்சுவேற்கு இரங்கரங்க
வாணனே
கரும்பிருந்த கட்டியே கடல்கிடந்த கண்ணனே
இரும்பரங்க வெஞ்சரம் துரந்தவில்லி ராமனே 27

ஊனின்மேய ஆவிநீ உறக்கமோ டுணர்ச்சி நீ
ஆனில்மேய ஐந்தும்நீ அவற்றுள்நின்ற தூய்மைநீ
வானினோடும் மண்ணும்நீ வளங்கடற் பயனும்நீ
யானும்நீய தன்றியெம் பிரானும்நீ இராமனே 28

அத்தனாகி அன்னையாகி ஆளும்எம்பி ரானுமாய்
ஒத்தொவ்வாத பல்பிறப் பொழித்து நம்மை
ஆட்கொள்வான்
முத்தனார் முகுந்தனார் புகுந்துநம்முள் மேவினார்
எத்தினால் இடர்க்கடல் கிடத்தியேழை நெஞ்சமே
29

எவனென்னை யாளி அரங்கத் தரங்கில்
அவனென்னை எய்தாமல் காப்பான்–
அவனென்ன(து)
உள்ளத்து நின்றா னிருந்தான் கிடக்குமே
வெள்ளத் தரவணையின் மேல் 30

வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும்
மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்–
வேங்கடமே
தானவரை வீழத்தன் ஆழிப் படைதொட்டு
வானவரைக் காப்பான் மலை 31

## தொண்டரடிப் பொடியாழ்வார்

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச்
செங்கண்
அச்சுதா அமர ரேறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா
நகருளானே 32

வண்டினம் முரலும் சோலை மயிலினம் மாலும்
சோலை
கொண்டல்மீ தணவும் சோலை குயிலினம் கூவும்
சோலை
அண்டர்கோ னமரும் சோலை அணிதிரு வரங்க
மென்னா
மிண்டர்பாய்ந்துண்ணுஞ் சோற்றை விலக்கி
நாய்க்கிடுமினீரே

குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி
கடல்நிறக் கடவு ளெந்தை அரவணைத் துயிலுமா கண்டு
உடலெனக் குருகு மாலோ என்செய்கேன் உலகத்தீரே 34

ஊரிலேன் காணி இல்லை உறவுமற் றொருவரில்லை
பாரில்நின் பாதமூலம் பற்றிலேன் பரம மூர்த்தி
காரொளி வண்ண னேஎன் கண்ணனே கதறு கின்றேன்
ஆருளர் களைக ணம்மா அரங்கமா நகரு ளானே 35

மனத்திலோர் தூய்மை இல்லை வாயிலோர் இன்சொல் இல்லை
சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன் வாளா
புனத்துழாய் மாலையானே பொன்னிசூழ் திரு வரங்கா
எனக்கினிக்கதியென் சொல்லாய் என்னையா ளுடைய கோவே 36

அடிமையில் குடிமை இல்லா அயல்சதுப் பேதி மாரில்
குடிமையில் கடமைப் பட்ட குக்கரில் பிறப்ப ரேலும்
முடியினில் துன்பம் வைத்தாய் மொய்கழற் கன்பு செய்யும்
அடியாரை உகத்தி போலும் அரங்கமா நகரு ளானே 37

கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
கனவிருள் அகன்றது காலையம் பொழுதாய்
மதுவிரிந் தொழுகின மாமலர் எல்லாம்
வானவர் அரசர்கள் வந்துவந் தீண்டி
எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங்களிற் றீட்டமும் பிடியொடு முரசும்
அதிர்தலில் அலைகடல் போன்றுள தெங்கும்
அரங்கத்தம் மாபள்ளி எழுந்தரு ளாயே 38

## திருப்பாணாழ்வார்

ஆலமா மரத்தின் இலைமே லொருபா லகனாய்
ஞான மேழுமுண்டா னரங்கத் தரவி னணையான்
கோல மாமணி யாரமும் முத்துத் தாமமும் முடிவில்ல தோரெழில்
நீல மேனியையோ நிறைகொண்டதென் நெஞ்சினையே 39

கொண்டல் வண்ணனைக் கோவல னாய்வெண்ணெய்
உண்ட வாயன்என் உள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோனணி அரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள்மற் றொன்றினைக் காணாவே 40

## மதுரகவியாழ்வார்

கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணி யபெரு மாயன் என் அப்பனில்
நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்
அண்ணிக் குமமு தூறுமென் நாவுக்கே 41

திரிதந் தாகிலும் தேவர் பிரானுடை
கரிய கோலத் திருவுருக் காண்பன் நான்
பெரிய வண்குரு கூர்நகர் நம்பிக்காள்
உரிய னாயடி யேன்பெற்ற நன்மையே 42

நம்பி னேன் பிறர் நன்பொருள் தன்னையும்
நம்பி னேன்மட வாரையும் முன்எலாம்
செம்பொன் மாடத் திருக்குரு கூர்நம்பிக்கு
அன்ப னாயடி யேன்சதிர்த் தேனின்றே 43

இன்று தொட்டும் எழுமையும் எம்பிரான்
நின்று தன்புகழ் ஏத்த அருளினான்
குன்ற மாடத் திருக்குரு கூர் நம்பி
என்றும் என்னை இகழ்விலன் காண்மினே 44

## திருமங்கையாழ்வார்

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தம்மோ
டவர்தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்

குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலம்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலம்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம் 46

மஞ்சுலாஞ் சோலை வண்டறை மாநீர்
மங்கையார் வாள்கலி கன்றி
செஞ்சொலால் எடுத்த தெய்வநன் மாலை
இவைகொண்டு சிக்கெனத் தொண்டீர்
துஞ்சும்போ தழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லிலும் நன்றாம்
நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு
நாராய ணாஎன்னும் நாமம் 47

முதுகு பற்றிக் கைத்த லத்தால் முன்னொரு கோலூன்றி
விதிர்வி திர்த்துக் கண்சுழன்று மேற்கிளை கொண்டிருமி
இதுவென் னப்பர் மூத்த வாறென் றிளையவர் ஏசாமுன்
மதுவுண் வண்டு பண்கள் பாடும் வதரிவ ணங்குதுமே 48

தெரியேன் பாலகனாய்ப் பலதீமை கள்செய்துமிட்டேன்
பெரியேன் ஆயினபின் பிறர்க்கே யுழைத்தேழை யானேன்
கரிசேர் பூம்பொழில்சூழ் கனமா மலைவேங் கடவா
அரியே வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண் டருளே 49

பள்ளியி லோதி வந்ததன் சிறுவன்
வாயிலோ ராயிர நாமம்
ஒள்ளிய வாகிப் போதவாங் கதனுக்
கொன்றுமோர் பொறுப்பில னாகி
பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண் புடைப்பப்
பிறையெயிற் றனல்விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்க மாகிய தேவைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே 50

மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான்
வேட்கையி னோடுசென் றிழிந்த
கானமர் வேழம் கையெடுத் தலறக்
கராவதன் காலினைக் கதுவ
ஆனையின் துயரம் தீரப்புள் ளூர்ந்து
சென்றுநின் றாழிதொட் டானை
தேனமர் சோலை மாடமா மயிலைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே 51

ஏழை யேதலன் கீழ்மகனென்னா திரங்கி
மற்றவற் கின்னருள் சுரந்து
'மாழை மான்மட நோக்கியுன் தோழி;
உம்பியெம்பி' என் றொழிந்திலை உகந்து
'தோழ னீயெனக் கிங்கொழி' என்ற
சொற்கள் வந்தடி யேன்மனத் திருந்திட
ஆழி வண்ணநின் அடியிணை அடைந்தேன்
அணிபொ ழில்திரு வரங்கத்தம் மானே! 52

இரும்புநன் றுண்ட நீர்போ லெம்பெரு மானுக்கு என்றன்
அரும்பெற லன்பு புக்கிட் டடிமைபூண் டுய்ந்து போனேன்
வரும்புயல் வண்ண னாரை மருவியென் மனத்து வைத்துக்
கரும்பினின் சாறு போலப் பருகினேற் கினிய வாறே 53

தொண்டெலாம் பரவி நின்னைத் தொழுதடி பணியுமாறு
கண்டுதான் கவலை தீர்ப்பா னாவதே பணியாய் எந்தாய்
அண்டமா எண்டி சைக்கும் ஆதியாய் நீதியான
பண்டமாம் பரம சோதி நின்னையே பரவு வேனே 54

பாருருவில் நீரெரிகால் விசும்பும் ஆகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே என்ன நின்ற
இமையவர்தம் திருவுருவே றெண்ணும் போது
ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ
ஒன்றுமா கடலுருவம் ஒத்து நின்ற
மூவுருவும் கண்டபோ தொன்றாம் சோதி
முகிலுருவம் எம்மடிகள் உருவம் தானே 55

நீரகத்தாய் நெடுவரையின் உச்சி மேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய் நிறைந்த கச்சி
ஊரகத்தாய் ஒண்துறைநீர் வெஃகா உள்ளாய்
உள்ளுவார் உள்ளத்தாய் உலகம் ஏத்தும்
காரகத்தாய் கார்வானத்து உள்ளாய் கள்வா
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னும்
பேரகத்தாய் பேரா துஎன் நெஞ்சி னுள்ளாய்
பெருமான்உன் திருவடியே பேணி னேனே 56

## பொய்கையாழ்வார் ✓

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்யா கதிரோன் விளக்காகச் - செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன்சொல் மாலை
இடராழி நீங்குகவே என்று 57

ஒன்றும் மறந்தறியேன் ஓதநீர் வண்ணனை நான்
இன்று மறப்பனோ ஏழைகாள் - அன்று
கருவரங்கத் துள்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருவரங்க மேயான் திசை 58

குன்றனைய குற்றம் செயினும் குணங்கொள்ளும்
இன்று முதலாக என் நெஞ்சே - என்றும்
புறனுரையே ஆயினும் பொன்னாழிக் கையான்
திறனுரையே சிந்தித் திரு 59

சொல்லுந் தனையும் தொழுமின் விழுமுடம்பு
செல்லுந் தனையும் திருமாலை - நல்லிதழ்த்
தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால்
நாமத்தால் ஏத்துதிரேல் நன்று 60

## பூதத்தாழ்வார் ✓

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான் 61

அறிந்தைந்து முள்ளடக்கி யாய்மலர்கொண் டார்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே - அறிந்தவன் றன்
பேரோதி ஏத்தும் பெருந்தவத்தோர் காண்பரே
காரோத வண்ணன் கழல் 62

யானே தவஞ்செய்தேன் ஏழ்பிறப்பும் எப்பொழுதும்
யானே தவமுடையேன் எம்பெருமான் - யானே
இருந்தமிழ்நன் மாலை இணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழன் நல்லேன் பெரிது 63

பின்னாலரு நகரம் சேராமல் பேதுறுவீர்
முன்னால் வணங்க முயல்மினோ - பன்னூல்
அளந்தானைக் கார்க்கடல்சூழ் ஞாலத்தை எல்லாம்
அளந்தா னவன்சே வடி 64

## பேயாழ்வார் ✓

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன் - செருக்கினரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று 65

நாமம் பலசொல்லி நாராய ணாவென்று
நாமங்கை யால்தொழுதும் நல்நெஞ்சே - வாமருவி
மண்ணுலகம் உண்டுமிழ்ந்த வண்டறையும் தண்துழாய்க்
கண்ணனையே காண்கநம் கண் 66

## நம்மாழ்வார்

பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும்
இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை உயிரளிப்பான்
எந்நின்ற யோனியும் ஆய்ப்பிறந்த தாயிமை யோர்தலைவா
மெய்ந்நின்ற கேட்டருளாயடி யேன்செய்யும் விண்ணப்பமே 67

கார்கலந்த மேனியான் கைகலந்த ஆழியான்
பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான் - சீர்கலந்த
சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையி னாழ்துயரை
என்நினைந்து போக்குவரிப் போது 68

கண்ணன் கழலிணை, நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம், திண்ணம் நாரணமே 69

கழிமின் தொண்டீர்கள் கழித்துத்
தொழுமின் அவனைத் தொழுதால்
வழிநின்ற வல்வினை மாள்வித்து
அழிவின்றி ஆக்கந் தருமே 70

யானே என்னை யறியகி லாதே
யானே யென்றன தேயென் றிந்தேன்
யானே நீயென் உடைமையும் நீயே
வானே யேத்துமெம் வானவ ரேறே 71

புகழுநல் லொருவ னென்கோ பொருவில்சீர்ப் பூமியென்கோ
திகழும்தண் பரவை யென்கோ தீயென்கோ வாயுவென்கோ
நிகழுமா காசமென்கோ நீள்சுட ரிரண்டு மென்கோ
இகழ்விலிவ் வனைத்து மென்கோ கண்ணனைக் கூவுமாறே 72

எனதாவி உள் கலந்த பெருநல்லுதவிக் கைமாறு
எனதாவி தந்தொழிந்தேன் இனிமீள்வ
தென்பதுண்டே
எனதாவி ஆவியும்நீ பொழிலேழும் உண்டஎந்தாய்
எனதாவி யார்யானார் தந்தநீகொண் டாக்கினையே
73

களைவாய் துன்பம் களையா தொழிவாய்
களைகண் மற்றிலேன்
வளைவாய் நேமிப் படையாய் குடந்தைக் கிடந்த
மாமாயா
தளரா வுடலம் என்ன தாவி சரிந்து போம்போது
இளையா துனதாள் ஒருங்கப் பிடித்துப் போத் இசை
நீயே 74

அகலகில்லே னிறையுமென் றலர்மேல் மங்கை
உறைமார்பா
நிகரில் புகழா யுலகமூன் றுடையாய் என்னை
ஆள்வானே
நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும்
திருவேங்கடத்தானே
புகலொன் றில்லா அடியேனுன் அடிக்கீழமர்ந்து
புகுந்தேனே 75

ஸ்ரீ ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

## பொன்மொழிகள்

1. வணங்கத்தக்கவர்கள் தாயும், தந்தையும்.
2. தானாக வருவது இளமை, முதுமை.
3. வந்தால் போகாதது புகழ், பழி.
4. போனால் வராதது மானம், உயிர்.
5. தன்னலம் கருதாமல் பிரார்த்தனை செய்.
6. பக்தியுடன் பிரார்த்தனை செய்.
7. சிரத்தையுடன் பிரார்த்தனை செய்.
8. உயர்வுக்கு வழி உழைப்பு.
9. கடைத்தேர வழி உண்மையும், உழைப்பும்.
10. நழுவ விடக் கூடாதது வாய்ப்பு.
11. மிக மிக நல்ல நாள் இன்று.
12. வருவதும் போவதும் இன்பம், துன்பம்.
13. மிகப் பெரிய வெகுமதி மன்னிப்பு.
14. செய்ய வேண்டியது உதவி.
15. ஆபத்தை விளைவிப்பது அதிக பேச்சு.
16. செய்யக் கூடாதது தவறுகள்.
17. விலக்க வேண்டியது விவாதம்.
18. அழிவைத் தருவது பொறாமை, கோபம்.
19. மிகவும் வேண்டாதது வெறுப்பு.
20. மிகவும் சுலபமானது குற்றம் காணல்.
21. மிகக் கொடிய நோய் பேராசை.
22. கீழ்த் தரமான விஷயம் பொறாமை.
23. ஒருவன் கெடுவது பொய்சாட்சி, செய்நன்றி மறப்பது.
24. வாழ்க்கை ஒரு குழப்பம் அதனை விடை காணுங்கள்.
25. வாழ்க்கை ஒரு உணர்வு அதனை உணர்ந்து கொள்ளுங்கள்.
26. வாழ்க்கை ஒரு போராட்டம் அதனை எதிர் கொள்ளுங்கள்.
27. வாழ்க்கை ஒரு சவால் அதனை சந்தியுங்கள்.
28. வாழ்க்கை ஒரு பரிசு அதனை ஏற்றுக் கொள்ளுங்கள்.
29. வாழ்க்கை ஒரு துயரம் அதனை தாங்கிக் கொள்ளுங்கள்.
30. வாழ்க்கை ஒரு சாகசப்பயணம் அதனை மேற்கொள்ளுங்கள்.
31. வாழ்க்கை ஒரு சோகம் அதனை கடந்து வாருங்கள்.
32. வாழ்க்கை ஒரு இலக்கு அதனை எட்டிப் பிடியுங்கள்.
33. வாழ்க்கை ஒரு சந்தர்ப்பம் அதனை பயன்படுத்திக் கொள்ளுங்கள்.
34. வாழ்க்கை ஒரு பயணம் அதனை முடித்து விடுங்கள்.
35. வாழ்க்கை ஒரு உறுதிமொழி அதனை நிறைவேற்றுங்கள்.
36. வாழ்க்கை ஒரு கடமை அதனை நிறைவேற்றுங்கள்.
37. வாழ்க்கை ஒரு விளையாட்டு அதனை விளையாடுங்கள்.
38. வாழ்க்கை ஒரு வினோதம் அதனை கண்டறியுங்கள்.

## பதினெண்மர் சித்தர்கள்

1. நந்தி
2. அகத்தியர்
3. திருமூலர்
4. புண்ணாக்கீசர்
5. நற்றவத்துப் புலத்தியர்
6. பூனைக் கண்ணனார்
7. இடைக்காடர்
8. போகர்
9. புலிக்கையீசர்
10. கருவூரார்
11. கொங்கணர்
12. காலாஞ்சி
13. எழுகண்ணர்
14. அகப்பேய்
15. பாம்பாட்டி
16. தேரையர்
17. குதம்பையர்
18. சட்டைநாதர்

## நவ சித்தர்கள்

1. சத்தியநாதர்
2. சுத்தோதனர்
3. நீதி நாதர்
4. வெகுளிநாதர்
5. மதங்கநாதர்
6. மச்சேந்திர நாதர்
7. சுமந்திரர்
8. கோரக்கர்
9. சுந்தரானந்தர்

மனமென்னும் மாடுஅடங்கில் தாண்டவக் கோனே! முத்தி
வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக்கோனே
சினமென்னும் பாம்புஇறந்தால் தாண்டவக்கோனே! - யாவும்
சித்தியென்றே நினையேடா தாண்டவக்கோனே

**– இடைக்காட்டு சித்தர்**

கஞ்சாப் புகை பிடியாதே - வெறி
காட்டி மயங்கிய கட்குடியாதே
அஞ்ச உயிர் மடியாதே - பத்தி
அற்ற அஞ்ஞானத்தின் நூல்படியாதே

**– கடு வெளிச் சித்தர்**

நந்த வனத்திலோர் ஆண்டி
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தான் ஒரு தோண்டி - மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி

**– கடு வெளிச் சித்தர்**

| சித்தர்கள் | சமாதி நிலை அடைந்த இடம் |
|---|---|
| அகத்தியர் | அனந்த சயனம் |
| அகப்பேய்ச் சித்தர் | அழகர் மலை |
| அழுகண்ணர் | அழகர் மலை |
| இடைக்காடர் | திரு அண்ணாமலை |
| கமலமுனி | திரு ஆரூர் |
| கருவூரார் | கருவூர் |
| காளங்கி நாதர் | காஞ்சிபுரம் |
| குதம்பைச் சித்தர் | மயிலாடுதுறை |
| கொங்கணர் | திருப்பதி |
| கோரக்கர் | பேரூர் |
| சட்டநாதர் | திருவரங்கம் |
| சுந்தரானந்தர் | மதுரை |
| தன்வந்திரி | வைத்தீசுவரன் கோவில் |
| திருமூலர் | தில்லைச் சிதம்பரம் |
| தேரையர் | தென் பொதிகை |
| நந்தி | காசி |
| பதஞ்சலி | இராமேசுவரம் |
| பாம்பாட்டிச் சித்தர் | விருத்தாசலம் |
| புண்ணாக்கீசர் | நாங்குனேரி |
| புலஸ்தியர் | யாழ்ப்பாணம் |
| பூனைக் கண்ணனார் | எகிப்து |
| போகர் | பழநி |
| மச்சமுனி | திருப்பரங்குன்றம் |
| வாமதேவர் | அழகர் மலை |
| வால்மீகி | எட்டுக்குடி |

தந்தை தாய் நிசமுமல்ல; சனங்களு நிசமுமல்ல;
மைந்தரும் நிசமுமல்ல; மனைவியும் நிசமுமல்ல;
இந்த மெய் நிசமுமல்ல; இல்லற நிசமுமல்ல;
சுந்தர நாகை துணையடி நிசம்பார் நெஞ்சே!

**– கணபதிச் சித்தர்**

ஓயாமல் பொய் சொல்வர் நல்லோரை நிந்திப்பர். உற்றுப் பெற்ற
தாயாரை வைவர்; சதி ஆயிரஞ் செய்வர்; சாத்திரங்கள்
ஆயார்; பிறர்க்கு பகாரம் செய்யார்; தமை அண்டினர்க்கொன்
றியார் இருந்தென்ன போயென்ன காண் கச்சி ஏகம்பனே

– பட்டினத்தார்

முன்னை இட்டதீ முப்புரத்திலே;
பின்னை இட்டதீ தென் இலங்கையில்
அன்னை இட்டதீ அடிவயிற்றிலே
யானும் இட்டதீ மூள்க! மூள்கவே!

– பட்டினத்தார்

மனமெனும் குதிரையை வாகனம் ஆக்கி
மதி எனும் கடிவாளம் வாயினில் பூட்டிச்
சினம் எனும் சீனியின் மேற்சீராய் ஏறித்
தெளிவிடம் சாரிவிட்டு ஆடு பாம்பே

– பாம்பாட்டிச் சித்தர்

நீரில் எழும் நீர்க்குமிழி நிலைகெடல் போல
நில்லாது உடல் நீங்கிவிடும் நிச்சயம் என்றே
பாரில்பல உயிர்களைப் படைத்தவன்தனைப்
பற்றவேநீ பற்றித் தொடர்ந்து ஆடுபாம்பே!

– பாம்பாட்டிச் சித்தர்

மனமது செம்மை யானால் மந்திரஞ் செபிக்க வேண்டா
மனமது செம்மை யானால் வாயுவை வுயர்த்த வேண்டா
மனமது செம்மை யானால் வாசியை நிறுத்த வேண்டா
மனமது செம்மை யானால் மந்திரஞ் செம்மை யாமே

– அகத்தியர்

மாயன், பிரமன், உருத்திரன், மகேசனோடு
ஆயும் சிவமூர்த்தி ஐந்து

மால், அயன், அங்கி, இரவி, மத் உமையோடு
ஏலும் திகழ்சக்தி ஆறு

தொக்குதிரத் தோடு ஊன், முலை நிணம், என்பு
சுக்கிலம் தாதுகள் ஏழு

மண்ணோடுநீர், அங்கி மதியோடு காற்று, இரவி
விண் எச்ச மூர்த்தியோடு எட்டு.

மாசற்ற கொள்கை மனத்தில் அடைந்தக்கால்
ஈசனைக் காட்டும் உடம்பு

– அவ்வையார்

ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டும் என்றால்
ஊற்றைச் சடலம்விட்டே என் கண்ணம்மா உன்பாதம் சேரேனோ

– அழுகணிச் சித்தர்

பெண்டாட்டி மந்தை மட்டும் வருவாள் பெற்ற
பிள்ளை மயானக் கரையின் மட்டும்
தொண்டாட்டும் தர்மம் நடுவினிலே வந்து
சேர்ந்து பிரகதி தான் கொடுக்கும்....

தஞ்சமென் றோரைக் கெடுக்காதே யார்க்கும்
வஞ்சனை செய்ய நினையாதே
கண்டதுங் கேட்டதுஞ் சொல்லாதே கண்ணில்
காணாத வுத்தரம் விள்ளாதே
பெண்டாட்டிக் குற்றது சொல்லாதே பெற்ற
பிள்ளைக் கிளப்பங் கொடுக்காதே

– கொங்கணச் சித்தர்

ஓம் நமச்சிவாயமே உணர்ந்து மெய்யுணர்ந்தபின்
ஓம் நமச்சிவாயமே உணர்ந்து மெய்தெளிந்தபின்
ஓம் நமச்சிவாயமே உணர்ந்து மெய்யுணர்ந்த பின்
ஓம் நமச்சிவாயமே உட்கலந்து நிற்குமே

– சிவவாக்கியார்

ஒன்றென்றிரு! தெய்வம் உண்டென்றிரு! உயர் செல்வம் எல்லாம்
அன்றென்றிரு! பசித்தோர் முகம்பார்! நல்லறமும் நட்பும்
நன்றென்றிரு! நடுநீங்காமலே நமக்கு இட்டபடி
என்றென்றிரு! மனமே, உனக்கே உபதேசம் இதே

– பட்டினத்தார்

தொகுப்பு
A.L. கிருஷ்ணா (எ) கிருஷ்ணமூர்த்தி

# திருமந்திரம்

## கடவுள் வாழ்த்து

ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறுவிரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந்தானுணர்ந் தெட்டே

## வேதச்சிறப்பு

வேதத்தை விட்ட அறம்இல்லை வேதத்தின்
ஓதத்தகும் அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடு பெற்றார்களே

## அரசாட்சி

கல்லா அரசனுங் காலனும் நேரொப்பர்
கல்லா அரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா அரசன் அறம் ஓரான் கொல்லென்பான்
நல்லாரைக் காலன் நணுக நில்லானே

## அறஞ்செய்வான் திறம்

யாவர்க்கு மாம் இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம் பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம் பிறர்க் கின்னுரை தானே

## உபதேசம்

திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ்சிந் திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடியே தஞ்சம் உள்தெளி வார்க்கே

தானே புலன் ஐந்துந் தன்வச மாயிடும்
தானே புலன் ஐந்துந் தன்வசம் போயிடும்
தானே புலன் ஐந்துந் தன்னில் மடைமாறும்
தானே தனித்தெம் பிரான் தனைச் சந்தித்தே

## புலால் மறுத்தல்

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே

## பிறன்மனை நயவாமை

ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்றவாறே

## பிராணாயாமம்

ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே

## காயசித்தி உபாயம்

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே

## சிவபூசை

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பா லயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலன் ஐந்துங் காளா மணிவிளக்கே

## ஞானிச் செயல்

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலன்றே

## அவா வறுத்தல்

ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசைவிடவிட ஆனந்த மாகுமே

## சூக்கும பஞ்சாக்கரம்

சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவ என்றிடத் தீவினைமாளுஞ்
சிவசிவ என்றிடத் தேவருமாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே

நமவென்னு நாமத்தை நாவில் ஒடுக்கிச்
சிவமென்னு நாமத்தைச் சிந்தையு ளேற்றப்
பவமது தீரும் பரிசும தற்றால்
அவமதி தீரும் அறும் பிறப்பன்றோ



## அதிசூக்கும பஞ்சாக்கரம்

சிவயா நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்தமாமே

இந்திய நாட்டு இலக்கியங்களுள் புராணங்கள் மிகப் பழமையானவை. "என்றும் மாறாத புதுமை. பெரும் பழங்கருத்துக்கள் கொண்டவை" என்னும் கருத்தில் புராணம் என்னும் சொல் வழங்கப்படுகிறது. வியாசரால் சமஸ்கிருதத்தில் எழுதப்பட்ட 18 புராணங்கள் வருமாறு :



1. பிரம்மம்
2. பத்மம்
3. வைணவம்
4. பாகவதம்
5. சிவபுராணம்
6. பவிஷ்யோத்தரம்
7. நாரதீயம்
8. மார்க்கண்டேயம்
9. ஆக்னேயம்.
10. பிரம கைவர்த்தம்
11. இலிங்கம்
12. வராகம்
13. ஸ்காந்தம்
14. வாமனம்
15. கூர்மம்
16. மத்ச்ய புராணம்
17. கருட புராணம்
18. பிரமாண்டம்

பதினெட்டு உப புராணங்கள் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

1. சரத் குமாரீயம்
2. நாரசிம்மம்
3. நந்தீயம்
4. சிவ ரகஸ்யம்
5. தௌர்வாசம்
6. நாரதீயம்
7. கபிலம்
8. மானவம்
9. வருணம்
10. தேவி பாகவதம்
11. வசிஷ்டம்
12. கல்கி
13. காணபதம்
14. ஹம்சம்
15. சாம்பம்
16. ஸௌரம்
17. பராசரம்
18. பார்க்கவம்





மழித்தலும் நீட்டலும் வேண்டா; உலகம்
பழித்தது ஒழித்து விடின்

— திருக்குறள்





## ஓர் ஆஸ்தீக அன்பனின் பணிவான வேண்டுகோள்

## ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் 300 நூல்களின் சாரம்

1. தினமும் அதிகாலை 4 மணிக்கு எழுந்திருங்கள். ஜபம் தியானம் செய்யுங்கள்.

2. ஸாத்வீக உணவையே உட்கொள்ளுங்கள். வயிற்றில் அளவுக்கு அதிகமாக அடைக்காதீர்கள்.

3. ஜபம், தியானம் செய்யும்போது பத்மாஸனம் அல்லது ஸித்தாஸனத்தில் அமருங்கள்.

4. தியானத்திற்கு என்று தனி அறையை உபயோகப்படுத்துங்கள். அறையை பூட்டி வைக்கவும்.

5. ரூபாய்க்கு 10 பைசா அல்லது உங்கள் வருமானத்தில் 10ல் ஒரு பங்கை தானமாகக் கொடுங்கள்.

6. பகவத்கீதையின் ஒரு அத்தியாத்தை முறையாக தினமும் படியுங்கள்.

7. அடிப்படை உயிர்ச்சக்தியைப் பாதுகாக்க தனியாக உறங்குங்கள்.

8. புகைபிடித்தல், போதை தரும் பானங்கள் மற்றும் ராஜஸ உணவை விட்டு விடுங்கள்.

9. ஏகாதசி நாட்களில் உபவாசம் இருங்கள். அல்லது பால், பழங்கள் மட்டுமே அருந்துங்கள்.

10. தினமும் 2 மணி நேரமும், சாப்பிடும் போது மௌனத்தைக் கடைபிடியுங்கள்.

11. எந்த நிலையிலும் உண்மையே பேசுங்கள். கொஞ்சமாகப் பேசுங்கள். இனிமையாகப் பேசுங்கள்.

12. உங்களது தேவைகளைக் குறைத்துக் கொள்ளுங்கள். திருப்தியான இன்பவாழ்வு வாழுங்கள்.

13. ஒரு பொழுதும் பிறரது உணர்ச்சிகளைப் புண்படுத்தாதீர்கள். அனைவரிடத்தும் இரக்கங்காட்டுங்கள்.

14. நீங்கள் செய்த தவறுகளைக் குறித்து எண்ணிப்பாருங்கள். (சுயசோதனை)

15. வேலைக்காரனை அண்டி இருக்காதீர்கள்.

16. காலையில் கண் விழித்தவுடனும் இரவில் படுக்கச் செல்லும் போதும் கடவுளை நினையுங்கள்.

17. உங்கள் பையிலோ அல்லது கழுத்திலோ எப்பொழுதும் ஜபமாலையை வைத்திருங்கள்.

18. எளிய வாழ்க்கை - உரிய சிந்தனை என்ற இலட்சியத்துடன் வாழுங்கள்.

19. பொதுமக்கள், ஸன்யாஸிகள் மற்றும் நோயுற்றோருக்குத் தொண்டு செய்யுங்கள்.

20. அன்றாட ஆன்மீக நாட்குறிப்பை வைத்திருங்கள். உங்களது செயல் முறையில் உறுதியாக இருங்கள்.

தொகுப்பு
T. காளீஸ்வரன்

# ஸ்ரீ ராகு பகவான் – ஸ்ரீ கேது பகவான் வரலாறு

சித்தர்களும், யோகியர்களும், முனிவர்களும் கடவுளை நோக்கி தவம் செய்து அருட்பெரும் சக்திகளை பெற்றுவந்தனர். அந்த வகையிலேயே பிருங்கி மாமுனிவர் அகில மாதா ஸ்ரீ ஆதிபராசக்தி அம்பிகையை பாடி பரவசப்படுத்தினார். அவரது பக்தியை கண்டு மனமகிழ்ந்த அன்னை தன் கழுத்திலே இருந்த மாலையை பரிசாக வழங்கினார்.

அம்பிகை தந்த அந்த மாலையை எடுத்து கொண்டுபோகும்போது வழியிலேயே தேவேந்திரனைக் கண்டார். தேவேந்திரன் முனிவரைப் பணிந்து வணங்கினான். முனிவர் தன் கையிலிருந்த அன்னை தந்த அபூர்வ மாலையை தேவேந்திரனுக்கு அணிவித்தார். தேவேந்திரன் பரிசை ஏற்றுக்கொண்டு தான் வந்த யானை மீது ஏறி அமர்ந்தார். முனிவரிடமிருந்து விடைபெறும் முன்பு தன் கழுத்தில் இருந்த மாலையை யானையின் தலை மீது வைத்து விட்டு தனது முடியை அழகுபடுத்தினான். அந்த சமயம் அழகிய வாசம் நிறைந்த மாலையை நோக்கி சில வண்டுகள் ரீங்காரம் இட்டுக்கொண்டு வந்து யானையின் காது பகுதியில் யானையை துன்புறுத்த, யானை சினம் கொண்டு தன் தலையின் மேலே இருந்த பராசக்தி தந்த மாலையை தூக்கி வீசியது. இந்த சம்பவம் பிருங்கி மாமுனிவர் முன்பு நடைபெற்றதால் முனிவருக்கு கோபம் வந்து தேவர்கள் இனத்தையே சபித்தார். அதாவது தேவேந்திரன் தலைமுடியை அழகுபடுத்தியதன் விளைவாக ஏற்பட்டதால் தேவர்கள் அனைவருக்கும் தலைமுடி நரை ஏற்படட்டும் என்று சபித்து விட்டார். அது முதல் தேவர்கள் அனைவருக்கும் நரைமுடி ஏற்பட தொடங்கியது. அதன்பின் தேவேந்திரன் தன் தவற்றை உணர்ந்து மன்னிப்பு கேட்க, முனிவரும் மனம் மாறி அமுதம் சாப்பிட்டால் சாபம் நீங்கவும், சாகாத வரமும், இறப்பு இல்லாத மாபெரும் பாக்கியமும் பெறமுடியும் என்று கூறிவிட்டு சென்றுவிட்டார்.

## அமுதம் எடுத்தல்

அமுதம் எடுத்தல் பற்றி சிந்திக்க தொடங்கிய தேவேந்திரன் மகா பிரம்ம தேவரின் ஆலோசனையை நாடினான். மகா பிரம்ம தேவரும் திருப்பாற்கடலை கடைந்தால் அமுதம் கிடைக்கப்பெறும் என்று கூறிவிட்டு மறைந்து விட்டார். திருப்பாற்கடலை கடைவது என்பது அவ்வளவு எளிதான காரியம் அல்ல அதற்கு அசுரர்களின் உதவியும் தேவைப்படும். அசுரர்களோ அடிக்கடி தேவர்களை எதிர்த்து தொல்லை தந்து வருபவர்கள். அவர்களை ஒன்றுசேர்த்து இந்த காரியத்தை முடிப்பது என்பது எளிதல்ல. கடும் முயற்சிக்கு பின்பு இரு தரப்பினரும் ஒன்றுபட சம்மதித்தனர். ஆனால், ஒப்பந்தப்படி கிடைப்பதில் சமபங்கு என்றும் ஒப்புக்கொண்டனர்.

தேவர்களுக்கு அறிவு பலம் அதிகம், உடல பலம் குறைவு. அசுரர்களுக்கோ உடல் பலம் அதிகம், அறிவு பலம் குறைவு. ஆகவேதான் இருதரப்பினரும் ஒன்றுபட்டால் காரியம் எளிதாக முடியும் என்பதால் இரு தரப்பினரும் ஒன்றுபட சம்மதித்தனர். அமுதம் கடைய முதலில் தேவை கயறு. ஆகவே கயறாக வாசுகி என்ற பாம்பையும், மேரு மலையை கடலில் நடுவில் நிறுத்தி கடைவதற்கு முடிவெடுத்தனர்.

வாசுகி பாம்பின் தலை பகுதியை அசுரர்களும், வால் பகுதியை தேவர்களும் பற்றிக் கொண்டு சுற்றத் தொடங்கினர். ஆனால் மேரு மலை சுற்றவில்லை, கடலின் அடியிலே சிக்கி விட்டது. எனவே இரு தரப்பிலும் முடிவெடுத்து ஸ்ரீ நாராயணர் ஆமை வடிவம் எடுத்து கடலின் அடியிலே சென்று மேருமலையை தாங்கினார். உடனே மேருமலையும் சுற்றத் தொடங்கியது. முதலில் அமுதம் வருவதற்கு முன்பு விஷம் வர துவங்கியது. அதனாலே கடலே நீலநிறமாகவும் மாறிவிட்டது. கடலிலிருந்து வெளிவந்த விஷமானது அங்கிருந்த தேவர்களையும், அசுரர்களையும் சூழத் தொடங்கியவுடன் அவர்கள் ஓடத் தொடங்கிவிட்டனர். அமுதம் கடைய தொடங்கிய முயற்சியும் தடைபட்டது.

தேவர்களும், அசுரர்களும் ஸ்ரீ சிவபெருமானிடம் முறையிட்டனர். ஸ்ரீ சிவபெருமான், ஸ்ரீ சுந்தரரை அனுப்பி விஷத்தை எடுத்து வரச்சொன்னார். ஸ்ரீ சிவபெருமான் சொற்படி சுந்தரரும் விஷத்தை பந்து வடிவத்திலே திரட்டி வந்துவிட்டார். இந்த விஷமானது திரும்பவும் அசுரர்களுக்கும், தேவர்களுக்கும் தொல்லை தராமல் இருப்பதற்கு தீர்மானித்து வாயில் போட்டு விழுங்க ஸ்ரீ சிவபெருமான் முயன்றார். அப்போது ஸ்ரீ பார்வதி தேவியார் வந்து தடுத்து தொண்டை பகுதியிலேயே நிறுத்திவிட்டார். காரணம் ஸ்ரீ சிவபெருமானின் வயிற்றிலே ஜீவ ராசிகள் இருப்பதை மறந்துவிட்டது பற்றி எடுத்துக்கூறினார். அதனால்தான் ஆண்களுக்கு தொண்டைப் பகுதியிலே கண்டம் என்ற பகுதி காணப்படும். அது முதல் திருநீலகண்டர் என்ற பெயர் ஸ்ரீ சிவபெருமானுக்கு ஏற்பட்டது. விஷமானது வயிற்றுக்கும் செல்லாமல் வாயின் பகுதிக்கும் வராமல் இருப்பதைக் கண்ட ஸ்ரீ நந்திகேசுவரர் தன் நாவினால் எடுத்து விட்டார். அதனால்தான் மாட்டிற்கு நாவில் கரும்புள்ளிகள் இருக்கும். அந்த நாளைதான் பிரதோஷ தினமாக கொண்டாடப் படுகிறது. அன்றைய தினம் ஸ்ரீ நந்திகேசுவரருக்கு சிறப்பு பூஜைகள் செய்விக்கப்பட்டு பிறகு ஸ்ரீ சிவபெருமானுக்கு பூஜைகள் நடைபெறும்.

ஆலகால விஷமானது ஸ்ரீ நந்திகேசுவரருக்கு மயக்க நிலை ஏற்படுத்தியது. அதைப் போக்க ஸ்ரீ வினாயகப் பெருமான் அருகம் புல்லை தந்து மயக்க நிலையைப் போக்கினார். அது முதல் விஷத்தை போக்கும் தன்மை அருகம்புல்லிற்கு ஏற்பட்டது. புற்றுநோயை தீர்க்கும் வல்லமையும் அருகம்புல்லிற்கு உண்டு. திரும்ப திருப்பாற் கடலின் உள்ள நிலையைப் பற்றி அறிவோம்.

விஷம் நீங்கிவிட்ட பயம் விலகி தேவர்களும், அசுரர்களும் திரும்ப திருப்பாற்கடலை கடையத் தொடங்கினர். கடலிலிருந்து காமதேனு, ஐராவதம், ஸ்ரீ மகாலெட்சுமி மற்றும் அபூர்வ பொருட்கள் வந்தன. பிறகு அமுத கலசம் வந்தது. ஐராவதம் தேவேந்திரனும், மகாலெட்சுமியை ஸ்ரீ நாராயணரும் பெற்றுக்கொண்டனர். இறுதியாக உள்ள அமுத கலசத்தை கண்டதும் தேவர்களும், அசுரர்களும் மகிழ்ச்சியடைந்தனர்.

**மோகினி அவதாரம்**

அமுதம் கிடைத்த சந்தோஷம் ஒரு புறம் காணப்பட்டாலும் இரண்டு பிரிவினரும் சதி திட்டத்திலேயே இறங்க தீர்மானித்தனர். அதன்படியே அசுரர்களும் அமுத கலசத்தை அபகரித்து சென்றுவிட்டனர். இவ்வளவு சிரமப்பட்டு எடுத்த அமுத கலசம் பறிபோய்விட்டதே என்று மனம் உடைந்த தேவர்கள் ஸ்ரீ நாராயணனிடம் முறையிட, அவரும் மோகினி அவதாரம் எடுக்க தீர்மானித்தார்.

அமுத கலசத்துடன் ஓடிப்போன அசுரர்கள் பங்கு போட்டுக் கொள்வதில் தகராறு ஏற்பட்டது. தகராறு முற்றி சண்டை செய்யத் துவங்கிவிட்டனர். இதுதான் தருணம் என்று ஸ்ரீ நாராயணர் மோகினி அவதாரம் எடுத்து அங்கே வந்தார். மோகினியைக் கண்டு மயங்கிப்போன அசுரர்கள் சண்டையை சற்று நிறுத்தினார்கள். மோகினி சண்டையைப் பற்றி விசாரித்து விட்டு பிறகு நானே பங்கிட்டுத் தருகிறேன். நான் பங்கு போடும்போது அனைவரும் கண்ணை மூடி அமர்ந்து நான் பங்கிட்டு முடித்தவுடன் கடைசியாக கண் திறப்பவரை தான் திருமணம் செய்துகொள்வதாகவும் தான் உறுதி அளித்தாள். இதைக் கேட்ட அசுரர்கள் அனைவரும் கண்ணை மூடிவிட்டனர். இதுதான் தருணம் என்று மோகினி அமுத கலசத்துடன் புறப்பட துவங்கிவிட்டாள். அசுரர்கள் அனைவரும் கண்ணை மூடி இருந்த நேரத்திலே சுவர்பானு என்ற அசுரன் மட்டும் கண்விழித்து பார்த்தான். அனைவரையும் எழுப்பினால் மீண்டும் பிரச்சனை வரும் என்று முடிவெடுத்து அவன் மோகினியை பின்தொடர்ந்தான். மோகினி தேவர்கள் இருந்த இடத்தை அவசர அவசரமாக நெருங்கினாள். சுவர்பானுவும் அவளுக்கே தெரியாமல் அங்கு வந்து சேர்ந்துவிட்டான். அங்கிருந்த தேவர்கள் கூட்டத்திலே அசுரர் குருவாகிய ஸ்ரீ சுக்கிரபகவானும் இருந்தார். அவரிடம் நடந்த விபரத்தை எல்லாம் எடுத்துக்கூறி தனக்கு அமுதம் கிடைக்க உதவுமாறு வேண்டினான். அதன்படியே சுவர்பானுவிற்கு மாறுவேடம் தந்து அந்த கூட்டத்திலே சேர்த்துவிட்டார். மோகினி அவதாரத்தோடு ஸ்ரீ நாராயணர் அமுதத்தை பங்குபோட அனைவரையும் வரிசையாக அமரச் செய்தார். சுவர்பானுவும், ஸ்ரீ

சூரிய, ஸ்ரீ சந்திர பகவானுக்கும் நடுவிலே அமர்ந்துவிட்டான்.

தேவர்களோ தேவ துதி சொன்ன பிறகு எந்த உணவையும் உண்பது வழக்கம். அதை அறியாத சுவர்பானு ஸ்ரீ நாராயணர் வைத்த அமுதத்தை உடனே சாப்பிட்டு விட்டான். அமுத கலசத்திலே மீதம் இருக்கவே மறுபடியும் அமுதத்தை பரிமாற (ஸ்ரீ நாராயணர்) வந்தவர் சுவர்பானு இலையிலே அமுதம் இல்லாததைக் கண்டு திடுக்கிட சுவர்பானு அருகில் இருந்த ஸ்ரீ சூரிய, ஸ்ரீ சந்திரர்கள் இவன் அசுரர் இனம் என்று கண்ஜாடை மூலம் அவரிடம் தெரிவித்தனர். இதனால் கோபம் அடைந்த ஸ்ரீ நாராயணர் தன் கையிலிருந்த சக்கராயுதத்தால் சுவர்பானுவின் தலையை துண்டித்தார்.

அமுதம் கடையும்போது பயன்படுத்திய வாசுகி பாம்பு தலை வேறு, வால் பகுதி வேறாக கிடந்தது. இந்த நிலை சுவர்பானுவிற்கு நல்ல சந்தர்ப்பமாக அமைந்துவிட்டது. அமுதம் சாப்பிட்டதால் இறப்பில்லா நிலை பெற்ற சுவர்பானு உடலின் தலைப்பகுதி வாசுகி பாம்பின் வால் பகுதியுடன் கூடி ஸ்ரீ ராகுவாகவும், சுவர்பானுவின் உடற்பகுதி வாசுகி பாம்பின் தலையுடன் கூடிய ஸ்ரீ கேதுவாகவும் உருவெடுத்தனர்.

ஸ்ரீ ராகு, ஸ்ரீ கேது என்ற இரு அமைப்பைப் பெற்ற இவர்களை தேவர்களும், ஏமாற்றி சென்ற காரணத்தினால் அசுரர்களும் ஏற்க மறுத்துவிட்டனர். இந்நிலையில் இருவரும் ஸ்ரீ நாராயணரை நோக்கி தவம் இருந்து திருப்பாற்கடலில் வேத சாஸ்திரம் பயின்று கிரக பதவி பெற்றனர். இதற்கிடையிலே மோகினி அவதாரத்தை காண வந்த ஸ்ரீ சிவபெருமான் மோகினி அழகிலே மயங்கி அவதரித்த குழந்தையே ஸ்ரீ மணிகண்டன் ஆவார்.

கிரகப்பதவி ஸ்ரீ ராகு பகவான், ஸ்ரீ கேது பகவான்கள் பெற்றாலும் வாரநாட்களில் இடம் பெற முடியவில்லை. சப்தரிஷிகளின் வாரிசுகளான ஏழு கிரகங்களுக்கு இடம் தரப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ சூரிய பகவான் – ஞாயிற்றுக்கிழமை

ஸ்ரீ சந்திர பகவான் – திங்கட்கிழமை

ஸ்ரீ செவ்வாய் பகவான் – செவ்வாய்கிழமை

ஸ்ரீ புதன் பகவான் – புதன்கிழமை

ஸ்ரீ குரு பகவான் – வியாழக்கிழமை

ஸ்ரீ சுக்கிர பகவான் – வெள்ளிக்கிழமை

ஸ்ரீ சனி பகவான் – சனிக்கிழமை

ஆக ஏழு நாட்களை ஏழு கிரகங்களுக்கு நிர்ணயித்து விட்டனர்.

ஸ்ரீ ராகு பகவான், ஸ்ரீ கேது பகவான்கள் தங்களை பக்தர்கள் வழிபட நாட்கள் வேண்டுமென்று ஸ்ரீ சிவபெருமானிடம் முறையிட ஏழு கிரகங்களுக்கும் உட்பட்ட ஏழு நாட்களில் ராகுகால நேரம் 1 ½ மணி நேரம் ஸ்ரீ ராகு பகவானிற்கும், எமகண்ட நேரம் 1 ½ மணி நேரம் ஸ்ரீ கேது பகவானுக்கும் ஒதுக்கிவிட்டதால், மற்ற கிரகங்களை தங்களுக்கு 24 மணி நேரத்திலே 3 மணி நேரங்களை இழந்தனர். ஒரு நாளில் 3 மணி நேரத்தை பிடித்த ஸ்ரீ ராகு, ஸ்ரீ கேது கிரகங்கள் 7 நாட்களில் 21 மணி நேரம் பெற்று ஏழு கிரகங்களுக்கு சமமான நேரத்தைப் பெற்றனர்.

சனியைப் போல் ராகுவும்,

செவ்வாய் போல் கேதுவும், என்பதால் ஸ்ரீ ராகுவிற்கு சனிக்கிழமையும், ஸ்ரீ கேதுவிற்கு செவ்வாய் கிழமையாகவும் உகந்த நாளாக உள்ளன.

ராகு கால நேரத்திலே ஸ்ரீ ராகு பகவானையும், எமகண்ட நேரத்திலே ஸ்ரீ கேது பகவானை வழிபட சகல காரியங்களும் ஜெயமாகும். ஸ்ரீ கேது பகவான் இடமிருந்து வலமாக சுற்ற துவங்கியவுடனே தன்னை இரு உடலாக காரணமாக இருந்த ஸ்ரீ சூரிய பகவானை இரு தடவை விழுங்கி சூரிய கிரகணமும், ஸ்ரீ சந்திர பகவானை ஸ்ரீ ராகுபகவான் இருமுறை விழுங்கி ஸ்ரீ சந்திர கிரகணமும் ஏற்படுத்தி தனது பழியை தீர்த்துக்கொள்கின்றனர்.

## ஜாதகத்திலே கவனிக்க வேண்டியது

ஜாதகத்தைபார்க்கும்போது பெரும்பாலானோர் லக்னத்தை வைத்தே பலன் சொல்லி வருகின்றனர். அது மட்டுமின்றி சந்திரனை வைத்தும் பலன் சொல்ல வேண்டும் என்பதும் நியதி.

ஒரு மனிதனுக்கு லக்னம் உயிராகவும், சந்திரன் உடலாகவும் தரப்பட்டுள்ளது. உயிரின்றி உடல் இயங்காது. உடல்பலம் இன்றி உயிர் அதிகநாள் இயங்காது. ஆகவே இரண்டையும் வைத்து பலன்களை தீர்மானிப்பது நல்லது.

லக்னத்தை வைத்து தசாபுத்தி பலன்களை கணித்து பயன் கூறுவது சரியாக இருக்கும். சந்திரனை வைத்து தற்சமயம் உலவும் கிரக பலன்களை (கோச்சார பலன்கள்) ஆராய்ந்தால் சரியாக இருக்கும்.

லக்னத்திலே எந்த பாவத்திலே பாப கிரகங்கள் சம்பந்தப்பட்டு பாப பலன்கள் தருகின்றன என்பதை காண்பது போல சந்திரனுக்கு எந்த பாவத்திலே பாப கிரகங்கள் இடையூறு செய்கின்ற என்பதையும் ஆராயவேண்டும். உதாரணத்திற்கு ஒரு பெண் ஜாதகத்திலே லக்னத்திற்கு 2,7,8 ஆகிய ஸ்தான கிரகங்கள் நன்றாக இருந்தும் அந்த ஸ்தானத்திலே பாப கிரகங்கள் இல்லாமலும் அந்த பெண்களின் ஜாதகம் திருமணம் தாமதப்படுகின்றது. அந்த ஜாதகத்தை 2,7,8 ஆகிய அதிபதிகள் பலம் இழந்த நிலையாலும் அங்கே பாப கிரகங்கள் இருப்பதையும் அல்லது பார்வை பெற்று இருப்பதையும் உணரலாம். இது மாதிரியான ஜாதகங்களை சுப கிரகங்களின் பார்வை பலன் பெற்று இருந்தால் திருமணம் இனிதே நடைபெறும். பொதுவாக ஜாதக பலன் அறியும்போது உயிருக்கு தத்துவமான லக்னத்தை வைத்தும், உடலுக்கு தத்துவமான சந்திரனையும் வைத்தும் பலன் அறிவது நன்மையே.

ஸ்ரீ ராகு, ஸ்ரீ கேது கிரகங்கள் தோஷத்தை மட்டும் தருகிறார்கள் என்று வருத்தப்பட வேண்டாம். யோகத்தை வாரி வழங்குவதிலும் மற்ற கிரகங்களை விட பலம் பொருந்தியவர்கள் என்பதையும் அறியவும்.

## குத்து விளக்கில் ஒளியேற்றுவதற்கு உரிய பலன்கள்



| | | |
|---|---|---|
| ஒரு முகம் ஒளியேற்றுவதால் | - | மத்திய பலன் |
| இரு முகம் ஒளியேற்றுவதால் | - | குடும்ப ஒற்றுமை பெருகும் |
| மூன்று முகம் ஒளியேற்றுவதால் | - | புத்திர சுகம் கிட்டும் |
| நான்கு முகம் ஒளியேற்றுவதால் | - | பசு, பூமி, செல்வம் கிட்டும் |
| ஐந்து முகம் ஒளியேற்றுவதல் | - | அனைத்து நலன்களும் கிட்டும் |



* ஸ்ரீ ராகுவிற்கு நட்பான கிரகங்கள்
ஸ்ரீ சுக்கிரன், ஸ்ரீ சனி, ஸ்ரீ செவ்வாய்

* ஸ்ரீ ராகுவிற்கு பகையான கிரகங்கள்
ஸ்ரீ சூரியன், ஸ்ரீ சந்திரன், ஸ்ரீ புதன்

* ஸ்ரீ ராகுவிற்கு சமமான கிரகங்கள்
ஸ்ரீ குரு, ஸ்ரீ கேது, ஸ்ரீ செவ்வாய்

* ஸ்ரீ கேதுவிற்கு நட்பான கிரகங்கள்
ஸ்ரீ குரு, ஸ்ரீ சனி, ஸ்ரீ செவ்வாய்

* ஸ்ரீ கேதுவிற்கு பகையான கிரகங்கள்
ஸ்ரீ சூரியன், ஸ்ரீ சந்திரன், ஸ்ரீ புதன்

* ஸ்ரீ கேதுவிற்கு சமமான கிரகங்கள்
ஸ்ரீ சுக்கிரன், ஸ்ரீ ராகு



## புண்ய பலன்

1. துளசி வனம் வைத்து, வளர்த்தல் பாபம் அகலும்.
2. பிராம்மணர்களைப் பூஜிப்பது ஆபத்தை அகற்றும்.
3. மரங்களை வளர்ப்பது இஹபர சுகத்தைத் தரும்.
4. சுமங்கலி பூஜை ஸௌமாங்கல்யத்தைத் தரும்.
5. குளம், கிணறு வெட்டுவது தாய்க்குப் புத்திரன்பட்ட கடன் தீரும்.
6. அதிதி பூஜை - ஸ்வர்க்கத்தைத் தரும்.
7. யாகஸ்னாநம் அல்லது ஸ்வாமி தீர்த்தம் கொடுக்கும் போது செய்யம் ஸ்நானம் பலத்தையும் அன்னத்தையும் தரும்.
8. சிவ, விஷ்ணு, ஆலயம் அமைத்தல், கைலாசத்திலும், வைகுண்டத்திலும் ஸ்திரவாஸமளிக்கும்.
9. ஆலயத்தைப் பெருக்கி, மெழுகி, கோலமிடுதல் ஸ்வர்கத்தைத் தரும்.
10. திலஹோமம் ஸகல பாபத்தை அகற்றும்.
11. ருத்ர, சகம, புருஷ ஸூக்த, பாராயணம் பிராம்ஹண ஜன்மாவை அளிக்கும்.
12. ஸ்ரீ ஸூக்த பாராயணம் செல்வத்தைத் தரும்.
13. அரசமரம் வைப்பது உபனயனம் செய்வது, ப்ரதக்ஷிணம் செய்வது அகியன பாபத்தை அகற்றி புத்ர பாக்கியத்தைத் தரும்.
14. நித்ய ச்ராத்தம் - பித்ருப்ரீதி ஸந்தான விருத்திகரம்.
15. உபவாஸமிருத்தல் சரீர சுத்தி ஆரோக்கியகரம்.
16. பஞ்சகவ்யம், தோல் மற்றும் எலும்பிலுள்ள பாபத்தை அகற்றும். சித்தப்ரமத்தை நீக்கும்.
17. பசுவுக்கு புல் அளித்தல், சொறிதல் ஆகியன ஸ்ந்தான வ்ருத்தி.

## வீட்டில் மங்களம் உண்டாக பெண்கள் செய்ய வேண்டியவை

1. அதிகாலையில் எண்ணை குளியல் கூடாது.
2. நீரில் இருந்து ஜபம், வழிபாடு செய்தல் கூடாது.
3. முன்னோர்களின் நினைவு நாளில் சீரார்த்தம் வென்னீரில் குளிக்கக்கூடாது.
4. அதிகாலையில் எழுந்து வாசலில் சாணம் தெளித்து மகாலட்சுமி வரவேண்டும் என்று நல்ல சுலோகங்களை சொல்லிக் கொண்டே கோலமிடுதல் வேண்டும்.
5. லட்சுமி வீட்டிற்குள் வர சூரிய உதயத்திற்கு முன் எழவேண்டும்.
6. இரவில் பால், தயிர், சுண்ணாம்பு இவைகளை வாங்கவும் கூடாது. கொடுக்கவும் கூடாது.
7. திருமணம் ஆன பெண்கள் கணவன் எழுந்திருக்கும் முன்பாக எழுந்து நீராடி விடுதல் வேண்டும்.
8. கணவனை மிஞ்சி எதுவுமில்லை என்று நினைவூட்டவே மிஞ்சி போடுகிறோம் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.
9. மோதிர விரலால் குங்குமம் இடுதல் வேண்டும்.
10. உண்பதில், உறங்குவதில் பேசுவதில், எழுதுவதில், உறவு கொள்வதில் நிதானத்தை அதிகம் கடைப்பிடித்தல் அவசியம்.
11. சங்கு வளையல் முதலாவதாகவும் முத்து வளையல் இரண்டாவதாகவும் தங்க வளையல் மூன்றாதாகவும் கண்ணாடி வளையல் நான்காவதாகவும் அணிய வேண்டும். இவைகள் தெய்வ சக்தியை தருவதாகும்.




# OUR SCHOOL

## WE STRIVE TO INCULCATE

- LOVE OF MANKIND
- LOVE FOR THE MOTHERLAND
- THE IDEAL "WORK IS WORSHIP"
- SPIRITUAL AWARENESS

- HUMILITY
- DILIGENCE
- SPIRIT TO CONVERT EVERY ADVERSITY INTO OPPORTUNITY FOR PROGRESS

- DESIRE FOR ETHICAL VALUES
- REVERENCE FOR ELDERS
- RESPECT FOR OTHERS' RIGHTS
- VALUE OF DUTY RATHER THAN RIGHTS
- HUMANENESS